செங்கை மாவட்ட

# வரலாற்றுக் கருத்தரங்கு





வரலாற்றுப் பேரவை

136

# செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு



பதிப்பாசிரியர்
டாக்டர் இரா. நாகசாமி

வரலாற்றுப் பேரவை
24 உனிசுஅலி சாகிப் தெரு
சென்னை 600 002

அன்று செங்கல்பட்டு மாவட்ட கலெக்டரும் இன்று இந்து சமய அறநிலைய ஆணையருமான உயர்திரு

# யு. சுப்ரமணியம் அவர்களது முன்னுரை

செங்கல்பட்டு மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் சார்பில் 1977 ஜனவரி 8, 9 தேதிகளில் காஞ்சி மாநகரில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இக்கருத்தரங்கில் தொண்டை மண்டலத்தின் வரலாற்றுச் சிறப்புகளைத் தெளிவுபடுத்துமாறு அமைந்த பொருள்கள் பற்றித் தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சேர்ந்த பல்வேறு அறிஞர்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகளை வாசித்து அளித்தனர். இம் மண்டலத்தைப் பற்றி இதுகாறும் அறிந்திராத பல புதிய செய்திகள் இதன் மூலம் வரலாற்றுக்குக் கிடைக்க ஒரு வாய்ப்புக் கிடைத்துள்ளது. மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்குகள் மாவட்ட பொது நிர்வாகத்தில் உள்ள அனைவருக்கும் மிகவும் பயன் உள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆக, மாவட்ட அளவிலே இத்தகைய வரலாற்றுக் கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தி நமது தமிழகப் பழமைமிக்க வரலாற்றின் சிறப்பு அம்சங்களைப் பொதுமக்கள் அறிந்து கொள்வதற்கு வாய்ப்பினை தொல்பொருள் ஆய்வுத்துறை அளிக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன். இத்தகைய ஆராய்ச்சி அடிப்படையில் வரலாற்றை உருவாக்குவதற்குத் தொல் பொருள் ஆய்வுத்துறைதான் தகுதி வாய்ந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. இத்தகைய துறையின் சீரிய பணிகள் வளர்க.

தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்களுக்கும், மற்ற அலுவலர்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுதலும் நன்றியும் உரித்தாகுக.

# 'முதலுரை'

மாவட்டந்தோறும் வரலாற்றுக் கருத்தரங்குகள் நடத்தி அந்தந்தப் பகுதியின் வரலாற்றை அறிய வாய்ப்பு ஏற்படுத்துவது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் நோக்கம். ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ள வரலாற்றுப் பேரவைகளின் கிளைகள் துறையோடு இணைந்து இப்பணியில் ஈடுபடுகின்றன. தஞ்சை, கோவை, திருச்சி, செங்கல்பட்டு ஆகிய மாவட்டங்களில் இக்கருத்தரங்குகள் நடத்தப் பெற்றுள்ளன. செங்கை மாவட்டக் கருத்தரங்கு காஞ்சியில் நடைபெற்றது மிகவும் பொருத்தமே.

இக்கருத்தரங்குக்கு அன்றைய மாவட்ட கலெக்டர் திரு உ. சுப்ர மணியம் அவர்கள் பங்கு பெற்றுச் சிறப்பு செய்தது வரலாற்றுக்குப் புரிந்த பெரும் தொண்டாகும். அவர்கள் இந்நூலுக்கு ஒரு முன் னுரையும் அளித்தமைக்கு அவருக்கு எமது மனமார்ந்த நன்றி. தமிழ்நாடு அரசு அற நிலையச் செயலர் திரு.சேஷாத்திரி ஐ.ஏ. எஸ். அவர்களும் அன்றைய அறநிலைய ஆணையர் திரு எம்.கே. பால சுப்ரமணியம் அவர்களும் பங்கு பெற்று கோயில்கள் பற்றியும் அவை புரியும் தொண்டு பற்றியும் எடுத்துரைத்தது பெருமை மிக்க செய்தியாகும். அதோடு இம்மாவட்டக் கோயில் நிர்வாகிகளுக்கு ஒரு பயிற்சியும் ஏற்பாடு செய்யப்பட்டது ஒரு தனித்ததொரு முயற்சியாகும்.

தமிழக அரசின் ஆவனக் காப்பக ஆணையர் திரு. கோமேதகம வேலு அவர்கள் பங்குபெற்றதும், தமிழக அரசு கல்வித் துணைச் செயலர் திரு. இளங்கோவன் I. A. S. அவர்கள் பங்கு பெற்றதும் அரசு எந்த அளவுக்கு வரலாற்றைப் போற்றுவதில் ஈடுபட்டுள்ளது என்பதற்கு எடுத்துக் காட்டாகும்.

மாநிலத் தொல்பொருள் ஆய்வுத்துறையும், மத்திய தொல் பொருள் ஆய்வுத்துறையும் இங்கு சிறப்புக் கண்காட்சி ஒன்றை அமைத்தன. அதைப் பல நூற்றுக்கணக்கான பள்ளி கல்லூரி மாண வர்கள் வந்து கண்டனர். தொலைகாட்சியினர் இதை படம்பிடித்து டி.வியில் காட்டினர். அவர்களுக்கு எமது நன்றி.

இக்கருத்தரங்கில் ஆர்வத்துடன் பலர் கட்டுரை வாசித் தளித்தனர், அனைத்துக் கட்டுரைகளும் மிகச் சிறப்பாக இருந்தன. அவை அனைத்தையும் தொகுத்து நூலாக வெளியிட விழைந்தோம் சில கட்டுரைகள் ஆங்கிலத்தில் இருந்தன. ஆங்கிலத்தில் அச்சிடுவது இந்நூலில் இயலாமற்போனதால் அக் கட்டுரைகள் இந்நூலில் இடம்பெறவில்லை. இதற்காக வருந்துகிறோம். கட்டுரைவாசித்து அளித்த அனைவருக்கும் எமது நன்றி.

இந்நூலை வெளியிடக் கவரைப்பேட்டை வரலாற்றுப் பேர வைக் கிளை, முயற்சி மேற்கொண்டது. அதற்குரிய பொருள் வசதி யையும் அப்பகுதி மக்கள் முன்னின்று அளித்துள்ளனர். வர லாற்றுப் பேரவை மேற்கொண்டு ஆகும் பொருள் செலவை ஏற்று இந்நூல் வெளிவர ஏற்பாடு செய்துள்ளது. அந்தந்த பகுதி வர லாற்றை வெளிக் கொணர அவ்வப் பகுதி மக்கள் முன்வருவது பெருமைக்கும் போற்றுதற்கும் உரியதாகும்.

இந்நூலை வெளிக் கொணர இளைஞர் துளசிராமன் அரும்பாடு பட்டுள்ளார். அவரது முயற்சி போற்றத் தக்கது. மக்கள் அச்ச கத்து மே. து. ராசுகுமார் விரைவில் நூலை அச்சேற்றியுள்ளார். அட்டைப்படத்தை அழகுடன் வடித்துள்ளார் ஓவியர் கிருஷ்ண ராஜ். அவர்கள் அனைவரும் பாராட்டுக்குரியவர்கள். இந்நூல் மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்க நூல் வரிசையில் முதலாவதாக வெளிவருவது பெருமைக்குரியது. பிற நூல்களும் விரைவில் வெளி வரும் என்பதில் ஐயமில்லை. இந்நூலை வெளியிடுவதில் வரலாற்று பேரவை பெருமகிழ்வுறுவதோடு இந்நூல் பயனுடையதாய் இருக்கும் என்ற ஆசை உந்த தமிழ் மக்களின் கரத்தில் மலராக இடுகிறது.

இரா. நாகசாமி

# உள்ளடக்கம்

# வரலாறும் காஞ்சியும்

## டாக்டர் இரா. நாகசாமி

''அனைத்து உயிர்களும் உய்ய வேண்டும் என்று கருணை வடிவான தாய் உமை அன்னை தவம் மேற்கொண்டாள். அவ்வன்னையின் தவத்தை நான்கு வேதங்களும் நின்று போற்றின. அப்பெரும் தவத்தை உமையன்னை தொண்டை நாட்டில் வந்து இயற்றினாள். அம்பிகையே தவம் இயற்றும் பேறு பெற்றது தொண்டை நாடு எனில் அதன் சிறப்பைக் கூறவும் வேண்டுமோ!'' என்று சேக்கிழார் குறிக்கிறார்.

ஏயுமாறு பல்உயிர்க்கு எல்லைஇல் கருணை
தாயுனாள் தனியாயின தலைவரைத் தழுவ
ஆயும் நான்மறை போற்ற நின்று அருந்தவம் புரிய
தூய மாதவம் செய்தது தொண்டை நன்னாடு

நடுநிலை ஒழுக்கத்துப் பெயர் போகிய தலைமைசால் பெருங்குடி நிறைந்தது எனவும், மலைநாட்டுச் சேரர் குடிக்குத் தமது குடிப் பெண்ணை ஈந்து மைத்துன முறை பெற்றது தொண்டைநாடு எனவும் வரலாற்றுப் பெருமையை இலக்கியச் சுவையுடன் கூறும் சேக்கிழார் பெரியபுராணம்! தேவியாகிய உமை சிவபெருமானைக் காதலித்து அறம் புரிந்தாள் இங்கே. ஆதலின் அன்று தொட்டு காதல் செய்முறைமைக்கு 'தொண்டைநாட்டு முறைமை' என்றே உலகில் முதுமொழி வழங்கலாயிற்று என்றும் சேக்கிழார் கூறுகிறார்.

தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தை
தூய மாந்தர் வாழ் தொண்டை நாடு

இங்கு திருக்காளத்தி, திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்றம், முல்லைவாயில், கவிகை மாநகர், வல்லம், மாற்பேறு, பாசூர், கருங்கழி, மயிலாப்பூர், திருவான்மியூர், மாமல்லை முதலிய பதிகள்

சூழ்ந்த இத்தொண்டை மண்டலத்தில் தலையாய பதி காஞ்சி மாநகரம்.

இங்கு நெய்தலும் குறிஞ்சியும் கலந்த நிலம் பலவுண்டு. குறிஞ்சியும் முல்லையும் கலந்த நிலமும் நெய்தலும் முல்லையும் கலந்த நிலமும் உண்டு. தெய்வப்பசு திருமுலை சொரிய அப்பால் பொங்கு தீர்த்தமாய் நந்திமலையில் தொடங்கி சந்தனம் அகில் முதலியன விளங்க இந்நாட்டில் பாய்வது பாலி ஆறு (பாலாறு). குழந்தையின் பொருட்டு பெருகும் பாலைசொரி முலைத்தாய் போல பருமடை உடைத்து வயல்களில் பாய்கிறது இப்பாலியாறு.

பிள்ளைத் தைவர பெருகுபால் சொரிமுலைத்தாய் போல
மள்ளர் வேனலின் மணல்திடர் பிசைந்து கைவருட
வெள்ள நீர் மருங்கு கால்வழிந்து ஏறிப்
பள்ள நீள்வயல் பருமடை உடைப்பது பாலி.

இங்குள்ள பெருங்குடி மக்கள் விருந்து எதிர்கொள்ளும் புகழ் பெற்றவர்கள்

'விருந்தெதிர் கொள்ளும் பீடு தாங்கிய பெருங்குடி'

காஞ்சியில் நீண்ட வாட்படை ஏந்திய நீலி கோட்டங்கள் பலவுண்டு.

கொடுங்கோல்மன்னன் ஒருவன், கோயில்களுக்கு அளித்திருந்த வரியை இறக்கினன். அதாவது கோயிலுக்கு வேண்டிய வரியை, அரசுக்குச்செலுத்த ஆணையிட்டான். அந்த ஆணையில் திருவொற்றியூர் இறை அருளால், ''திருவொற்றியூர் நீங்க'' என்று எழுதப்பட்டிருந்தது. அதாவது திருவொற்றியூர் கோயிலைச் சேரவேண்டிய வரிகள் அக்கோயிலுக்கே சேரட்டும்; பிற கோயில் வரிகள் அரசுக்கு என எழுதப்பட்டிருந்தது. இதைக் கண்டு அரசன் வியப்படைந்தான் என்று ஒரு வரலாற்றுச் செய்தி குறிக்கப்படுகிறது. இதன் மூலம் ஒற்றியூரின் பெருமையைச் சேக்கிழார் குறிக்கிறார்.

மகாபத்ம நாகன் என்னும் நாகராஜன் காஞ்சியில் ஒருகாலத்தில் வசித்ததாகவும், அம்பிகை தவம் செய்ய வந்தபோது அவன் தேவியைத் தனது இருப்பிடத்தில் வந்து தவம் புரிய வேண்டிக் கொள்ள அன்னை அதற்கிசைந்ததாகவும் சேக்கிழார் குறிப்பார். 'மகாபத்ம நாகன்' கி. மு. மூன்றும் நூற்றாண்டுக்கும் முன்பிருந்தே இந்தியாவில் பல பகுதிகளிலும் சிறப்பாக வணங்கப்பட்டதெய்வம். மதுராவில் அண்மையில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில் இவனது

கோயில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 'மகாபத்ம நாகன்' காஞ்சியில் இருந்ததாகக்கூறும் மரபு, அவனது வழிபாடு காஞ்சியிலும் தொன்றுதொட்டே சிறந்திருக்க வேண்டும் எனக்காட்டுகிறது.

தேவி அரனைப் பணிந்து எல்லா உயிர்களையும் புரக்கவும் உலகினில் மனையறம் சிறக்கவும், வேண்டுவோர் காமங்களை அவரவர்க்கு அருளவும், இங்கு காமக்கோட்டத்தில் அமர்ந்திருக்கிறாள். அவளது காமக்கோட்டத்தை மூவுலகிலோரும் போற்றுகின்றனர்.

காஞ்சியில் யோக முனிவர்களும் யோகினிகளும் போற்றும் யோகபீடம் ஒன்று இருந்தது என்பார் சேக்கிழார். அங்கு உருத்திரசோலை என்று ஒரு சோலை உண்டு. தவம் செய்வோர் விரும்பித் தொட்டால் யாவற்றையும் பொன்னாக மாற்றும் சிலை ''மெய்ந்நெறி நின்றார்கள் தாம் விரும்பித்தீண்டில் யாவையும் செம்பொன்னாக்குவதோர் சிலை'' ஒன்று இருந்தது. கரிகாலன் இமயமலையில் புலிச்சின்னத்தைப் பொறிக்க வடதிசை சென்றான், அப்போது வேடன் ஒருவன் இந்நகரின் வளமையைக் காட்ட, கரிகாலன் இவ்விடத்தில் நான்கு காதங்கள் சதுரத்திற்குக் காஞ்சி மாநகரை அமைத்து, குன்றுபோல் மதில் அமைத்து, அங்கு குடி அமர்த்தினான் என்று சேக்கிழார் கூறுகிறார். காஞ்சிபுரத்தைப் புதுப்பித்து மதில் அமைத்துக் கரிகாலன் சிறப்பித்தான் என்ற இந்த வரலாற்றுச் செய்தியைச் சோழர் செப்பேடுகளும் கூறுகின்றன. அண்மையில் திருத்தணியில் கிடைத்த பராந்தகன் செப்பேட்டிலும் இச்செய்தி குறிக்கப்படுகிறது. சேக்கிழார் சோழர் வழிவழிவந்த வரலாற்றுச் செய்தியை குறித்துள்ளார்.

காஞ்சிபுரத்தில் அந்தணர் இருக்கை இருந்தது. அரசர் குலப் பெருந்தெருக்கள் இருந்தன. அவற்றில் தெற்றி முற்றங்களில் ஆயுதங்கள் பயிலும் இடங்கள் இருந்தன. அரசகுமாரர்கள் யானை, குதிரை ஏற்றம் பயில இடங்கள் இருந்தன. வணிகர் வாழ் மாநகர்கள் இருந்தன. வேளாண்குடி பெருஞ்செல்வர் வாழ்இடங்கள் இருந்தன. இந்நாற்குலத்தோர் இன்றிக் கலப்பு மணத்தால் பிறந்த அனுலோமர், பிரதிலோமரான குடிமக்கள் தங்கள் தங்கள் ஜாதிக்கேற்ற தொழில் புரிந்து வாழும் பகுதிகள் இருந்தன.

காஞ்சியில் உள்ள பல கோயில்களில் ஆனைமுகத்தோன் ஆன கணபதி கோயில் ஒன்றும், குன்றம் எறிந்த வேலவன் கோயில் ஒன்றும் மூன்றிலை வேலைக் கையில் ஏந்திய பிள்ளை என்றுஅழைக்கும் ஹேத்ரபாலப்பிள்ளையார் கோயில் ஒன்றும் இருந்தன. இங்கு ஒரு புகழ்வாய்ந்த ஐயனார் கோயில் ஒன்று இருந்தது. அதில் முற்ற

வெளி. ஐயன், கையில் செண்டேந்தி அமர்ந்திருந்தார். அவர் முன் யானே வாகனம் இருந்தது.

காஞ்சியில் கி. பி. 12-ம் நூற்றுண்டுக்கும் முன்னரே 'புண்ணிய தீர்த்தம், இட்டசித்தி தீர்த்தம், மங்கல தீர்த்தம், நீண்ட காய் புடை தீர்த்தம், சார்வதீர்த்தம்' முதலிய பல புண்ணிய தீர்த்தங் கள் இருந்தன.

இங்கு பல அதிசயங்கள் இருந்தன. நிழலை முன்னே பிணிக்கும் கிணறு ஒன்று இருந்தது. நஞ்சான தடம் ஒன்று இருந்தது. அங்கு ஒரு பிலம் இருந்தது. அங்கு உள்ளே வந்தார்கள் குரங்கு உரு வாக மாறிவிடுவார்கள். அங்கு ஒரு பொய்கை இருந்தது. அதில் குளித்தால், அக் குரங்கு உருப்பெற்றவர்கள் குரங்கு உரு நீங்கப் பெறுவார்கள். மற்றொரு பிலம் உண்டு. அதில் வானவர் அடையும் இன்பம் பெறலாம். சேக்கிழாரால் இவ்வாறு புகழப்பெற்ற காஞ்சி மாநகர்; தமிழ்நாட்டின் வரலாற்றை என்று அறிய முடிகிறதோ அன்றிலிருந்தே புகழ்பெற்றது. பண்டைய இந்தியாவில், நகரங் களிலேயே எழில் வாய்ந்தது காஞ்சி மாநகரமே என்பதால் **நகரேஷு காஞ்சி** என்று குறிக்கப் படுகிறது.

இங்கு அனைத்துச் சமயங்களும் செழித்து வளர்ந்தன. பௌத் தம், சமணம், சைவம், வைணவம், கௌமார, சாக்தம் முதலிய அனைத்துச் சமயங்களுக்கும் இருப்பிடமாகத் திகழ்ந்தது. இங்கு வாழ்ந்த பல பெரியார்கள் சமய நூல்களை இயற்றி, நன்னெறி வளர்த்தனர்.

பல்லவர் ஆட்சிக்கு வருவதற்குமுன் திரையர்களின் தலைநகராய் திகழ்ந்த இந்த மாநகரைப்பற்றி சங்க இலக்கியங்கள் புகழ்கின்றன. பல்லவர்களது சிறந்த தலைநகராய் மலர்ந்த இந்நகர் பலமுறை சாளுக்கியரோடு நிகழ்ந்த போர்களில் அழிவுற்று மீண்டும் மீண்டும் புதிதாக எழுப்பப் பெற்றது. இரண்டாம் நரசிம்மவர்மன் என்ற இராஜசிம்மன் காத்தில் காஞ்சி புதிதாக நிர்மாணிக்கப்பட்டது. அவனது பட்டப்பெயர்களான அதிமானன் ஏகவீரன், ரணஜயன், வாமனன் ஆகிய பெயர்களால் பல பகுதிகள் அமைக்கப்பட்டன. கி. பி. 725-ல் அமைந்த இவை சுமார் 520ம் ஆண்டுகளுக்குப் பிறகு கி. பி. 975லும் சிறப்பாகத் திகழ்ந்தன என உத்தமசோழனின் செப் பேடு ஒன்றிலிருந்து அறிகிறோம். அதற்கு மற்றொரு காரணமும் உண்டு. இராஜசிம்மன் நிர்மாணித்த காஞ்சியை இரண்டாம் விக்ரமாதித்தன் என்னும் சாளுக்கிய மன்னன் கைப்பற்றிய போது அந்நகரை அழிக்காமல் உள்ளே நுழைந்தான் என அவனது

செப்பேடு கூறுகிறது. ஆதலின் இராஜசிம்மன் காலத்திருந்த காஞ்சி பல நூற்றுண்டுகள் சிறப்பாகத் திகழ்ந்தது என அறிகிறேம்.

சோழர்கள் காஞ்சியை தமது வடபுலத்தலைநகராகக் கொண்டிருந்தனர். சுந்தரசோழர் காலத்தில் காஞ்சியில் ஒரு அரசமாளிகை இருந்தது. அதைப் பொன் மாளிகை என்று அழைத்தனர். சுந்தர சோழர் அதில் இறந்ததால் பொன்மாளிகைத் துஞ்சியதேவர் என்று அழைக்கப்பட்டார். அவருக்குப் பின் அரியணை ஏறிய உத்தமசோழர் காலத்தில் கச்சிப்பேட்டில் மாளிகை இருந்தது என்றும் அதன் தெற்கில் சித்ரமண்டபம் ஒன்று இருந்தது என்றும் அறிகிறேம்.

''காஞ்சிபுரத்தில் அசோகன் எடுத்த பௌத்த ஸ்தூபம் ஒன்று இருந்தது. அது சுமார் 100 அடி உயரத்திற்கும் மேல் இருந்தது. அங்கு புத்தர் தீர்த்தங்கரர்களை வாதத்தில் வென்று பல நூற்றுக் கணக்கானவர்களை பௌத்த சமயத்துக்கு மாற்றினுர். கௌதமர்க்கு முன் தோன்றிய நான்கு புத்தர்கள் நடத்த இடங்களும் அவர்கள் அமர்ந்த வனங்களும் காஞ்சியில் இருந்தன. அங்கு நூற்றுக்கும் மேற்பட்ட பௌத்தப் பள்ளிகள் இருந்தன. இவற்றில் பௌத்த சமயத்தில் ஸ்தவிரப்பிரிவைச் சார்ந்த ஆயிரக்கணக்கான பிக்குகள் வசித்தார்கள்'' என்று யுவான்சுவாங் குறிப்பிடுகிருர். கி. பி. 7-ம் நூற்றுண்டில் அந்த அளவுக்கு பௌத்தம் சிறந்திருந்தது. இங்கு வசுந்தரா என்னும் பெயர் பெற்ற தாராதேவிக்கு ஒரு கோயில் இருந்தது.

இங்கு சமணம் சிறந்திருந்தது என்பதற்குச் சான்ருக அருகில் திருப்பருத்திக்குன்றம் உள்ளது. இதை ஜினகாஞ்சி என்றே அழைக்கும் மரபு உண்டு. இராஜசிம்மன் காலத்து எடுக்கப்பட்ட ஒரு சமணக்கோயில் இங்கு இருக்கிறது. சோழர் காலத்தில் சிறப்புப் பெற்றுக் கோப்பெருஞ்சிங்கன் ஆட்சியில் 13-ம் நூற்றுண்டில் விரிவாக்கப்பட்ட மற்றொரு சமணக்கோயில் இங்கு இருக்கிறது. இதில் விஜயநகர அரசன் புக்கராயன் (1) காலத்தில் அவனது அமைச்சன் இருகப்பன் என்பவன் எடுத்த சங்கீத மண்டபம் ஒன்று உள்ளது. அதில் பண்டைய ஓவியங்கள் உள்ளன. இங்கு பல சமணத் துறவிகள் வாழ்ந்து இலக்கியத்தொண்டும் சமயத் தொண்டும் புரிந்துள்ளனர்.

காஞ்சி வைணவ சமயத்தின் இருக்கையாக இருந்தது. கச்சி அட்டபுயகரம் புகழ் மிகுந்தது, உலகளந்த பெருமான் கோயில். பரமேச்சுர விண்ணகரம் என்னும் வைகுந்தப்பெருமாள் கோயில் பச்சைவண்ணன் கோயில் முதலிய கோயில்கள் புகழ் மிக்கவை.

அருளாளப் பெருமாள் கோயில் என்னும் வரதராசர் கோயில் வைணவப் பெரியார் இராமானுஜரின் வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்றது.

தொண்டை மண்டலத்துக்கே சிறந்த தலைநகராகத் திகழ்ந்த காஞ்சிமாநகர், 18ம் நூற்றாண்டுவரை சீரும் சிறப்புமாகத் திகழ்ந்து ஆங்கிலேயர்களின் வருகையால் சென்னை, படிப்படியாகச் சிறப்பு பெறவேதான் காஞ்சி புகழ் மங்கத் தொடங்கியது. இன்றும் நாட்டுக்கு ஒளியாய், தவம் புரியும் யோகியாய் திகழும் காஞ்சிப் பெரியவர்கள் வசிக்கும் புண்ணியத்தலம் காஞ்சி. அப்பெரும் பேறு பெற்றது தொண்டை நன்னாடு. அந்நாட்டில் உள்ள வரலாற்றுத் தலங்கள் எண்ணில. அவற்றின் வரலாற்றை முழுமையாக அறிவது தமிழகத்தின் வரலாற்றையே நன்கு அறிவதாகும். அது குறித்த முழு நூல் விரைவில் தயாரிக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

# காரியுண்டிக் கடவுள்

## டாக்டர். இரா. நாகசாமி

தமிழ் இலக்கியங்களில் காரி உண்டிக் கடவுள் என்று ஒரு தெய்வம் புகழப்படுகிறது. இக்கடவுள் யார்? மலைபடுகடாத்தில் காரியுண்டிக் கடவுளைப் பற்றிக் கீழ் வருமாறு குறிப்புள்ளது.

நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பேரிசை நவிரம் மேய் உறையும்
காரிஉண்டிக் கடவுளது இயற்கையும்

மலைபடு-வரி 81-83

உ.வெ. சாமிநாதய்யர் தமது அடிக்குறிப்பில் காரியுண்டிக் கடவுள் என்பது சிவபெருமானைக் குறிக்கும் என்று எழுதியுள்ளார். நச்சினார்க்கினியர் தமது உரையில் நஞ்சை உண்ட கடவுள் எனக் குறிப்பார். சிவக சிந்தாமணியும் காரியுண்டிக் கடவுளைக் குறிக்கிறது.

நம்பனை நகரி னீக்கிச் சேமத்தால் வைக்க தீயுட்
செம்பொன்போற் பெரிதுஞ் சேந்து செகுத்திடலுற்று நின்றான்
வெம்பினான் காரியுண்டிக் கடவுளிற் கனன்று வேந்தன்
இம்பரின் றெனக்குச் சொன்னா னிதுபட்ட தடிகளென்றான்

அதன் உரையிலும் கரியுண்டிக் கடவுள் நஞ்சுண்ட கடவுள் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

காரி—விடம்; காரியுண்டிக் கடவுள் – சிவபெருமான்

ஆயினும் காரியுண்டிக் கடவுள் சிவபெருமானைக் குறிக்கிறது என்பதைப்போல ஐயனாரையும் குறிக்கக்கூடுமோ என்று ஐயம் எழுகிறது. காஞ்சிபுரத்தில் பல தெய்வங்களின் கோயில்கள் இருந்தன. இதைக் குறிக்க வந்த சேக்கிழார்,

சத்தி தத்பர சித்தயோகிகளும்
சாதகத் தனித்தலைவரும் முதலா

நித்தம் எய்திய ஆயுள் மெய்த்தவர்கள்
நீடு வாழ் திருப்பாடியும் அனேகம்
சித்தர் விஞ்சையர் இயக்கர் கந்தர்வர்
திகழ்ந்து மண்ணுவார் செண்டுகைஏந்தி
**வித்தகக்கரி மேற்கொளும் காரிமேவும்**
**செண்டணை வெளியும் ஒன்றுளதால்**

திருக்குறிப்புத் தொண்டர்—செய்யுள் 82.

யானை மீதமர்ந்து கையில் செண்டை ஏந்தி அமர்ந்துள்ள ''காரி மேவும் செண்டணை வெளி'' ஒன்று இருந்தது. அவ்வெளியில் உள்ள கடவுளைச் சித்தர், விஞ்சையர், இயக்கர், கந்தருவர் முதலானோர் வந்து வணங்கினார்கள் என்று கூறியுள்ளார். இங்குள்ள குறிப்பி லிருந்து காரியுண்டிக் கடவுள் என்பது மாசாத்தனாகிய ஐயனாரைக் குறிக்கும் என்பதும், ஐயனார் கோயில் சேக்கிழார் காலத்தில் வெளி யாய், முற்றமாய் இருந்தது என்பதும் பெறப்படும். இன்னும் ஆயிரக் கணக்கான ஐயனார் கோயில் வெளியாய் உள்ளது யாவரும் அறிந்ததே.

ஐயனாருக்குச் சிவபெருமானுக்குரிய சின்னங்களாகிய பாம்பு, பிறை, மண்டைஓடு முதலியன உண்டு. காஞ்சியில் இருந்த ஐயனார் மிகவும் புகழ் பெற்றது. பல பாடல்களில் இது குறிக்கப்படுகிறது. காரி என்ற சொல் வைரவக்கடவுளையும் குறிக்கும். காரி உண்டிக் கடவுள் என்பது வைரவக் கடவுளையோ அன்றி ஐயனாரையோ குறிக்கக்கூடும் என்ற கருத்தோடு மேலும் ஆராயலாம்.

# தொண்டை மண்டலம்-கோட்டமும் நாடும் ஒரு கண்ணோட்டம்

புலவர் செ. இராசு

### கரிகாலன் அமைத்த கோட்டம்

கரிகால் சோழன் சோழ நாட்டிலிருந்து வேளாளர்களைக் குடி யேற்றித் தொண்டைமண்டலத்தை 24 கோட்டங்களாகவும், 79 நாடுகளாகவும் பிரித்தான் என்று கூறுவர்[1] சதகமும்,

''காவிய மாகிய காமீகங் கண்டுங்கங் காகுலத்தோர்
ஓவிய சூத்திர ராக இருபத்து நான்குயர்ந்த
மேவிய கோட்டத்திலுங்கரி கால்வள வன்மிக்க
வாயிய மேன்மை கொடுத் தான் தொண்டை மண்டலமே''

என்று பாடும்.[2]

''கோட்டமோ நிருபா னுன்காம்
கூறுநா டெழுபத் தொன்பான்
றேட்டொழில் ஆயி ரத்துத்
தொள்ளாயிர நத்த மாகும்''[3]

என்ற பழம் பாடலால் நாடு 79 என்பதும், அவற்றுள் அடங்கிய பழைய ஊர்கள் 1900 என்பதும் விளங்குகிறது.

### தொன்மை

கி. பி. 6-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த சிம்மவிஷ்ணுவின் பள்ளன் கோயில் செப்பேட்டிலேயே வெண்குன்றக் கோட்டமும், பெருநகர நாடும் குறிக்கப் பெறுகின்றன. பிறபல்லவர் செப்பேடுகளில் ஊற்றுக்காட்டு கோட்டம்.[5] படுவூர்க்கோட்டம்[6], பல்குன்றக் கோட்டம்[7] ஆகியவை குறிக்கப் பெறுகின்றன. 'ஜயங்கொண்ட சோழன்'[8] என்ற சிறப்புப் பெயரைப் பெற்ற முதலாம் இராசராசன் காலத்துக்குப் பின்னர் எல்லாச் சோழராலும் பிற அரச பரம்பரையினராலும் தொண்ட மண்டலம் ''ஜயங்கொண்ட சோழமண்டலம்'' என்றே அழைக்கப் பெற்றது[9]

பிரிவுகள்

| கோட்டம் | நாடுகள் (79) |
|---|---|
| 1. ஆமூர் கோட்டம் | குமிழி, படுவூர் |
| 2. இளங்காடு | பொன்னூர், தென்னூற்றூர், மரகுணம் |
| 3. ஈக்காடு | காக்களூர், கச்சி |
| 4. ஈதூர் | அறமுறங்கா |
| 5. ஊற்றுக்காடு | பாலையூர், தம்மனூர், குன்றம், நீவளூர் |
| 6. எயில் | தண்டகம்,மாகறல், கோனேரி |
| 7. கடிகை | பெருங்காஞ்சி, நாகவேடு, பாராஞ்சி |
| 8. காலியூர் | காலியூர், திருப்புலிவனம், விற்பேடு, ஏரிக்கீழ், பாவூர். |
| 9. களத்தூர் | குறும்பறைஇ வல்லிபுரம், பாத்தூர், நடு. |
| 10. குன்றப்பத்திரம் | மாகாளம், நின்றை, மங்கலம் |
| 11. சிறுகரை | ஆயந்தம் |
| 12. செங்காடு | பொன்னலூர், அதிகத்தூர் |
| 13. சந்திரிகை | போரூர், வளகுணம், ஆலத்தூர், அருங்குளம். |
| 14. செம்பூர் | பிறையூர், பட்டணம், முருந்தூர். |
| 15. தாமல் | னரிவீடு, வடகரை, வல்லம். |
| 16. படுவூர் | ஆற்காடு, செங்குன்றம். |
| 17. பல்குன்றம் | பராசூர். தச்சூர், மெய்யூர், சிங்கப் பொருநவளம், மிமிலி. |
| 18. புழல் | ஞாயிறு, அம்பத்தூர், ஆவடி, ஆற்றூர் எழுமூர். |
| 19. புலியூர் | குன்றத்தூர், போரூர். மாங்காடு, அமரூர், கோட்டூர். விற்பற்றி, சேனூர், வெண்கலி, கன்னி. |
| 20. பையூர் | பாசாலை, இல்லத்தூர், கண்ணூர், |
| 21. மணவூர் | பிரிசை, பெருமூர். |
| 22. வெண்குன்றம் | பெருநகர், சேவூர், மருதநாடு, நல்லூர், தெள்ளாறு. |
| 23. வேங்கடம் | குடகரை, தொண்டைமான், பொத் தப்பா |
| 24. வேலூர் | ஒழுகரை, நென்மலி, பகத்தூர்[10] |

## தொண்டை மண்டலத்தில் இருந்த நாட்டுப் பிரிவுகள்

1 அடையாறு நாடு
2 ஐம்புழுகூர் நாடு
3 ஆகுடி நாடு
4 அழிச்சூர் நாடு
5 அமரூர் நாடு
6 அம்பி நாடு
7 அம்பத்தூர் நாடு
8 ஆமூர் நாடு
9 ஆந்தி நாடு
10 அனியூர் நாடு
11 அரைச்சூழ் நிலேக்கீழ்
12 ஆரணி நிலே
13 அறியூர் நாடு
14 ஆன்மூர் நாடு
15 அங்கடிபாட்ட நாடு
16 அனுக்காவூர் நாடு
17 ஆற்றூர் நாடு
18 சார நாடு
19 சேகுலூர் நாடு
20 செங்காட்டு நாடு
21 செங்குன்ற நாடு
22 சிலே நாடு
23 சிலேகளும் நாடு
24 சிங்கட்டை நாடு
35 சிறுகுன்ற நாடு
26 சிறுதிமிரி நாடு
27 சுரத்தூர் நாடு
28 எழுமூர் துடன்முனி நாடு
29 எழுமூர் நாடு
30 ஏரிகீழ் நாடு
31 எயில் நாடு
32 எய்னூர் நிலே
33 ஈச்சூர் நாடு
34 ஈக்காடு நாடு
35 இல்லத்தூர் நாடு
36 இஞ்சிபேடு நாடு
37 இரும்பேடு நாடு
38 செம்புழுக்கு நாடு
39 கச்சியூர் நாடு
40 காக்கலூர் நாடு
41 களத்தூர் நாடு
42 காளியூர் நாடி
43 காழியூர் நாடு
44 கழுமலே நாடு
45 கல்வாய் நாடு
46 காணப் பெற்றூர் நாடு
47 காந்தளூர் கூற்றம்
48 குன்றிகைப் பேற்றூர் நாடு
49 குன்றூர் நாடு
50 காரை நாடு
51 கரை வழி
52 கரிவேடு நாடு
53 கருப்பாற்று நாடு
54 கட்ட நாடு
55 காயிரம்பேடு நாடு
56 கிடக்கை நாடு
57 கீழ் அடையாறு நாடு
58 கீழைப்பட்டய நாடு
59 கீழ்கற்றியூர் நாடு
60 கீழ்மலே மோகூர் நாடு
61 கீழ்மாங்காடு நாடு
62 கீழ்பாக்கை நாடு
63 கோளூர் நிலே
64 கோணேரி கீழ் நாடு
65 கோட்டூர் நாடு
66 கோவலூர் நாடு
67 குடவூர் நாடு
58 குமிழி நாடு
69 குன்ற நாடு
70 குன்றத்தூர் நாடு
71 குன்றியூர் நாடு
72 குறும்பூர் நாடு
73 குவலேக் கோடு நாடு
74 மாகளூர் நாடு

75 மாகரல் நாடு
76 மணநாடு
77 மணயில் நாடு
78 மந்தைக்குள நாடு
79 மாங்காடு நாடு
80 மருதாடு நாடு
81 மாவந்தூர் நாடு
82 மையூர் நாடு
83 மேல்ஆடையூரு நாடு
84 மேலைப் பட்டைய நாடு
85 மேல் செங்கல் நாடு
86 மேல்மலை ஆற்றூர் நாடு
87 மேல் மலை மேலூர் நாடு
88 மேல் மலை ஒகை வல்ல நாடு
89 மேல் மலை பழையனூர் நாடு
90 மேல்மலை தணியல் நாடு
91 மேல்மாங்காடு நாடு
92 மேல் பாக்கை நாடு
93 மேல் பழுக்கூர் நாடு
94 மேலூர் நாடு
95 மியாறு நாடு
96 மோகூர் நாடு
97 மோந்தூர் நாடு
98 மொகை நாடு
99 நடுவில்மலை இல்லத்தூர் நாடு
100 நடுவிய் மலை நின்றயூர் நாடு
101 நடுவில் மலை பெருமூர் நாடு
102 நடுவில் மலை தோமூர் நாடு
103 நடுவில் பட்டய நாடு
104 நாவலூர் நாடு
105 நாயனூர் நாடு
106 நெடிநாடு
107 நெடுங்குன்ற நாடு
108 நின்றயூர் நாடு
109 நீர்வேளூர் நாடு
110 ஒக்காட்டு நாடு
111 ஒழுகையூர் நாடு
112 ஒய்மா நாடு
113 பாச்சாலி நாடு
114 படை நாடு
115 பகாமை நாடு
116 படுவூர் நாடு
117 பாசூர் நாடு
118 பாக்கை நாடு
119 பழையனூர் நாடு
120 பாலையூர் நாடு
121 பாலி நாடு
122 பழுகூர் நாடு
123 பங்கள நாடு
124 பாராச்சூர் நாறி
125 பட்டைய நாடு
126 பட்டன நாடு
127 படை நாடு
128 பேராயூர் நாடு
129 பெருமாந்தை நாடு
130 பெரும்பாலையூர் நாடு
131 பெரும்பேடு நிலை
132 பெரும்புலியூர் நாடு
133 பெருமுக்கில் நாடு
134 பெருமூர் நாடு
135 பெருநகர் நாடு
136 பெரும் திமிலி நாடு
137 பேரூர் நாடு
138 பெரும்பெரும்பூர் நாடு
139 போழியூர் நாடு
140 போழிகை நாடு
141 பொன்னூர் நாடு
142 போத்தப்பி நாடு
143 பொய்கை நாடு
144 புழல் நாடு
145 புலி நாடு
146 புலிவல நாடு
147 புலியூர் நாடு
148 புறையூர் நாடு
149 புரிச்சை நாடு
150 சிங்கபுர நாடு
151 சிய்யபுர நாடு

| | | | |
|---|---|---|---|
| 152 | தச்சூர் நாடு | 168 | வாதலூர் நாடு |
| 153 | தாமனூர் நாடு | 169 | வாழைப்பந்தல் நாடு |
| 154 | தாமர் நாடு | 170 | வரிவல நாடு |
| 155 | தண்டரை நாடு | 171 | வல்ல நாடு |
| 156 | தரையூர் நாடு | 172 | வட்டிய நாடு |
| 157 | தெக்குசூர் நாடு | 173 | வளிமா நாடு |
| 158 | தெள்ளாற்று நாடு | 184 | வெள்ளையூர் நாடு |
| 159 | தென்னுற்றூர் நாடு | 175 | வேலூர் நாடு |
| 160 | தேரோடு பழுவூர் நாடு | 176 | வெங்கா நாடு |
| 161 | திமிரி நாடு | 177 | வெங்கல் நாடு |
| 162 | திருநல்லூர் நாடு | 178 | வெண்குன்ற நாடு |
| 163 | தோமூர் நாடு | 179 | வேற்காடு நாடு |
| 164 | தொடமுனி நாடு | 180 | வேதுங்க நாடு |
| 165 | தூய் நாடு | 181 | விடால் நாடு |
| 166 | ஊற்றுக்காடு நாடு | 182 | விற்பேடு நாடு |
| 167 | வச்சுகூர் நாடு | | |

வேறுசிலபிரிவுகள்

படை வீட்டு ராஜ்யம்-36, சந்திரகிரி ராஜ்யம்-37, பிரித்வி ராஜ்யம்-38 எனச் சில பகுதிகள் அழைக்கப் பெற்றன. திருக்கழுக் குன்றுப் பற்று-39, அத்திப் பற்று-4, களத்தூர்ப்பற்று, அனுதர் பற்று-41, ஆயிரம் வேலிப் பற்று-42 என்றும் பாகுப்பற்று மேல்கூறு-43 என்றும் பெரும் பர்ணப்பாடி கரைவழி மேற்கூறு 44 என்றும் பெரும்பாக்கச் சிமை என்றும் சில பகுதிகள் குறிக்கப்பெற்றன.

மாற்றம் ஏன்?

முதலில் ஆமூர்க் கோட்டத்தில் இருந்த திருக்கழுக்குன்றம் 45, களத்தூர்க் கோட்டத்துத் திருக்கழுக்குன்றம் என்றும்-46, எயில் கோட்டத்தில் இருந்த காஞ்சிபுரம்-47, பின்னர் ஊற்றுக் காட்டுக் கோட்டத்தைச் சார்ந்ததாகவும்-48 கூறப்பெற்றமைக்குக் காரணம் தெரியவில்லை. தொண்டை மண்டல நாட்டுப் பிரிவுகள் பற்றி ஆய்வது மிகச் சுவையுடையது. அறிஞர்கள் அம்முயற்சியில் இறங்குவார்களாக.

## குறிப்புகள்

1. கொங்கு நாடு 24 பிரிவு. ஒப்புமை ஆராயத்தக்கது.
2. தொண்டை மண்டல சதகம்-97
3. தொண்டை மண்டல சதகம், மேற்கோள்-பக். 332.
4. பல்லவர் செப்பேடு முப்பது—பக்—28:

136

5. மேலது—பக். 51.
6. „ 104
7. „ 187
8. "The Coals" Page 186
9. இப்பெயர் மாற்றம் பெருமல் வந்தது பெரு வியப்பே.
10. தொண்டை மண்டல சகதம்—பக். 329
11. தொண்டை மண்டல சதகம் மேற்கோள் பாடல்—பக். 332
12. ARE 272 of 1915
13. ARE 467 of 1920
14. S I. I. IV 351
15. SITI I 410
16. „ „ 503
17. ARE 239 of 1919
18. SITI I 434
19. ARE 61 of 1909
20. ARE 171 of 1933
21. SII V 473
22. SITI I
23. S.I.I.IV 351
24. SITI I 433
25. ARE 156 of 1933
26. SITI I 102
27. ARE 203 of 1912
28. SITI I 110
29. SII IV 558
30. ARE 163 of 1933
31. ARE 192 of 1902
32. ARE 467 of 1920
33. SITI I 435
34. SII IV 377
35. ARE 161 of 1909
36. ARE 75 of 1900
37. SITI 343
38. „ 347
39. 174 of 1933
40. 75 of 1900
41. SITI I 434
42. 44 of 1890
43. SITI I 110
44. SII IV 817
45. 174 of 1933
46. 59 of 1909
47. SITI I 349
48. „ 343

# சென்னையில் அச்சான பழந்தமிழ் நூல்கள்

இரா. முத்துக்குமாரசாமி

அச்சுக்கலை மிகப் பழமையான கலை. சீனநாட்டில் 9-ஆம் நூற்றாண்டில் தொடங்கி, கீழைநாடுகட்குப் பரவிப் பின் மேலை நாடுகளுக்கு இக்கலை பரவியது.[1]

அச்சுக்கலை முன்னரே தோன்றியிருப்பினும் அது புத்தகங்களை அச்சிடும் கலையாக வேகமாகப் பரவியது 15-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே யாகும். தனித்தனி அச்செழுத்துக்களை உலோகத்தில் வார்த்தெடுக்கும் முறை ஜெர்மனியில் கூடன் பார்க்கால் கி. பி. 1440-ல் கண்டுபிடிக்கப்பெற்றது.[2] அறிவுலகப் புரட்சிக்கு வித்திட்ட அவரே தற்கால 'அச்சுக்கலையின் தந்தை' யாகப் போற்றப் பெறு கிறார்.

இக்கலை இந்தியாவிற்குள் நுழையுமுன்னரே தமிழ் நூல் ரோமன் எழுத்துக்களின் வாயிலாக லிஸ்பனில் அச்சேறியது. 1555-ல் போர்ச்சுக்கீசியப் பாதிரிமார்கள் 'கார்டில்லா' என்ற நூலைத் தமிழிலும் போர்ச்சுக்கீசிய மொழியிலும் அச்சடித்தனர். தமிழ் மொழிக்கு உரிய எழுத்துக்களில்லாததால் ரோமன் வரிவடி வில் தமிழை அச்சிட்டனர்.

இந்தியாவில் அச்சுக்கலை மலர்ந்த நாள் 6 செப். 1556. அபி சீனியா மன்னர்க்குப் போர்ச்சுக்கல் மன்னர் அனுப்பி வைத்த அச்சுக்கூடம் இடையில் கோவாவில் இறங்கியது. 1557-இல் முதல் நூலான Doctrina christam போர்ச்சுக்கீசிய மொழியில் அச்சாயிற்று.

ஸ்பெயின் நாட்டிலிருந்து 1564-க்குப் பின் இந்தியாவிற்கு வந்த பஸ்டிமான்டே பாதிரியார் மற்றொரு அச்சுப் பொறியைக் கொண்டு வந்தார். அவருடன் வந்த கன்சாள் வெஸ் (JOAO G ANSALVES) என்பவர் 1577-இல் தமிழ் உலோக எழுத்துக்களைக் கோவாவில் வார்த்தார். ஆனால் நூலேதும் அச்சிடவில்லை.

அதே சமயத்தில் பரியா REV. JOAODO FARIA) என்ற பாதிரியாரும் கொல்லத்தில் 1578-இல் தமிழ் அச்செழுத்துக்களை உருவாக்கினார். இதைக்கொண்டு 'தம்பிரான் வணக்கம்'[3] என்ற நூல் 1578-இல் அச்சிடப்பெற்றது. இந்திய மொழிகளிலே தமிழ்

மொழியாலியன்ற இந்நூலே முதன்முதல் அச்சிடப் பெற்றது. இந் நூலின் இறுதியில் கோவாவில் உண்டாக்கின எழுத்து மாதிரி வடிவம் கொடுக்கப் பெற்றுள்ளது.

கொல்லத்திலிருந்து கொச்சிக்கு மாற்றப்பெற்ற அச்சுச்கூடம் அம்பலக் காட்டில் செயல்பட்டது. ஹென்ரிக்ஸ் பாதிரியார்[4] 'கிரிசித்தியானி வணக்கம்' என்ற நூலை 1579-லும், 'அடியார் வரலாறு என்னும் Flos Sanctorum என்ற நூலை 1586-இலும் அச் சிட்டார். இவர் அச்சிட்ட ஒரு சில நூல்களுக்குப்பின் 1612 இல் தமிழ் அச்சுவேலை தடைப்பட்டது.

17-ம் நூற்றுண்டின் இடையில் தமிழ் எழுத்துக்களை உருவாக் கும் முயற்சி ஆம்ஸ்டர்டாம் நகரில் மேற்கொள்ளப்பட்டது. 1672-ல் பால்டியூஸ் (P. H. Baldaws) என்பார் தமிழ் நாட்டில் தாம் செய்த பயண அனுபவத்தை எழுதியுள்ள நூலில்[5] தமிழ் மொழி யைப் பற்றிக் குறிப்பிட்டு இரு பக்கங்கள் தமிழில் அச்சிட்டுள்ளார். 1679-இல் அதே நகரில் தமிழ்நாட்டுச் செடிகொடிகளைப் பற்றி விளக்க வெளிவந்த நூல்[6] செடிகொடிகளின் பெயர்களைத் தமிழ் எழுத்துக்களில் அச்சிட்டுள்ளது.

தமிழ் நாட்டிலும் அச்சுப்பணி கைவிடப் பெறவில்லை. மதுரை மிசனில் பணியாற்றிவந்த பிரயென்சா (Antaoce Proenza) என்ற பாதிரியார் தமிழ் – போர்ச்சுகீசிய மொழி அகராதியைத் தொகுத் தார். அது 1679-இல் அம்பலக்காட்டில் அச்சிடப்பெற்றது. அதற்குத் தேவையான தமிழ் எழுத்துக்களை மதுரையிலிருந்து இகனேசியஸ் அச்சுமோனி[7] மரத்தில் செய்து கொடுத்தார். போர்ச்சுகீசிய எழுத்துக்கள் உலோகத்தால் வார்க்கப்பட்டு அதில் 16, 546 தமிழ்ச் சொற்களுக்குப் போர்ச்சுகீசியம், இலத்தின் மொழி களில் பொருள் தரப்பட்டுள்ளது. மீண்டும் அச்சுப்பணி தொடர வில்லை.

18-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் தரங்கம்பாடி மிசனுக்கு ஜெர்மனியிலிருந்து வந்த சீகன்ப்பால்கு[8] என்ற டேனிஷ்பாதிரியாரே இன்றையத் தமிழ் அச்சுகலைக்கு நிலையான உருவைக் கொடுத் தவர். அவர் 1706-இல் தரங்கம்பாடிக்கு வந்தவுடன் லண்டனி லுள்ள கிறித்துவமதப் பரப்புச் சங்கத்திற்கு[9] அச்சகம் ஒன்று வேண்டுமென்று விண்ணப்பம் செய்தார். அதன் விளைவாக 1712-இல் அச்சுப்பொறி தரங்கம்பாடியை அடைந்தது. தமிழ் எழுத்துக்கள் ஜெர்மன் நாட்டிலுள்ள ஹாலி (Halle) என்கிற நகரி லிருந்து தருவிக்கப் பெற்றது. இவை பெரியதாக இருந்ததால் 1713-இல் தரங்கம்பாடியிலேயே தமிழ் எழுத்துக்கள் வார்க்கப் பெற்றன.

தரங்கம்பாடியில் 1713-இல் முதல் தமிழ் நூல் அச்சாயிற்று. இந்துக்களைக் கிறித்துவர்களாக்குவது எப்படி என்பதை விளக்கும் நூல் அது.[10] 1715-இல் பைபிளின் புதிய ஏற்பாடு சீகன்பால்கால் மொழி பெயர்க்கப்பெற்று அச்சாயிற்று. அதிலிருந்து தரங்கம்பாடி அச்சகம் சீராக வேலை செய்தது.

அதே சமயத்தில் ஹாலியிலும் தமிழ் நூல்கள் அச்சிடப் பெற்றன. 1716-இல் சீகன்பால்கு அங்குச் சென்றிருந்தபோது போர்ச்சுக்கீசிய மொழிகளில் தமிழ் இலக்கண நூலை[11] வெளியிட்டார்.

சென்னையில் பணியாற்றி வந்த சூல்ச் ஐயர் (Rev. BCHULIZE) 1742-இல் ஹாலிக்குத் திரும்பினர். சில தமிழ் நூல்களை அங்கேயே அச்சிட்டார். 'ஞானமந்திர செல்வப் பூங்காவனம்' என்னும் நூல் 1749-இல் அச்சிடப் பெற்றது. தமிழ் நாட்டில் அச்சுக்கலை வளர்ந்தபின் அம்முயற்சி ஹாலியில் கைவிடப் பெற்றது.

சென்னையில் அச்சுக்கலை தொடங்குவதற்குக் காரணமாயிருந்தது வேப்பேரி மிசன் ஆகும். சூல்ச் பாதிரியார் இம்மிசனை 1728-இல் நிறுவினர். அவருக்குப் பின் தரங்கம்பாடியிலிருந்து வந்த பெப்ரீசியல் (Rev. Fabricius) பாதிரியார் 1741-இல் தம் பனியைச் சென்னையில் தொடங்கினர். அப்போது சென்னை மிசன் இன்றுள்ள ஜார்ஜ் டவுன் பகுதியில் இருந்தது. 1746-இல் பிரெஞ்சுக்காரர் சென்னையைப் பிடித்துக் கொண்டபோது, மூன்று ஆண்டுகள் பழவேற்காட்டில் இருந்தது. மீண்டும் சென்னைக்குத் திரும்பியபோது, கம்பெனி அரசு வேப்பேரிலிருந்து ரோமன் கோயிலை 500 வராகனைப் பெற்றுக் கொண்டு பெப்ரீசியஸ் பாதிரியாரிடம் ஒப்படைத்தது.

1761-இல் கம்பெனியார் புதுச்சேரியைப் பிடித்தபோது, அங்கிருந்த அச்சுக்கூடத்தைக் கொண்டுவந்து பெப்ரீசியஸ் பாதிரியாரிடம் கொடுத்தது. ஹாலியிலிருந்து தமிழ் அச்சு எழுத்துக்கள் வந்தன. பெப்ரீசியஸ் புதிய ஏற்பாட்டை மொழி பெயர்த்துத் தமிழில் 1772-இல் புதிய அச்சுக்கூடத்தில் அடித்தார். இதுதான் சென்னையில் முதல் அச்சுக்கூடத்தின் தொடக்கமாகும். இதனையே வேப்பேரி மிசியோன் அச்சகம் என்றும், S. P. C. K. பிரஸ் என்ற பெயரிலும் குறிப்பிடுவர். இதுவே இன்றும் டையோசிசன் பிரஸ் என்ற பெயரில் இன்றும் வேப்பேரியில் இயங்கிவருகிறது. ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெறும் அச்சகம் இந்தியாவில் வேறெங்கும் இருக்குமா என்பது ஐயமே.

வேப்பேரி மிசன் அச்சகம் கிறித்துவ சமய நூல்களை வெளியிடுவதுடன் நில்லாது தமிழ் மொழியின் ஆக்கத்திற்கும் பயன்படக்கூடிய நூல்களை அச்சிட்டுப் பெரும்பணி ஆற்றியுள்ளது வேப்பேரி மிசன் 18-ஆம் நூற்றுண்டில் அச்சிட்ட நூல்களில். மிகவும் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவை இரு நூல்கள்.

1779-இல் பெப்ரீசியஸ் தமிழ் ஆங்கில அகராதியைப் பெரிதும் முயன்று தொகுத்து வெளிட்டார். முதன்முதல் அச்சான தமிழ்—ஆங்கில அகராதி அதுவேயாரும். அதற்கு ஆங்கிலத்தில் malabar and English Dictinary என்று பெயர். அதன் முகப்புப் பக்கத்தில் பெப்ரீசியன் தமிழை 'மலபார்' என்று குறிப்பிடும் பழக்கமிருப்பதை மிகத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறுர் (where in the words and phrases in Tamil commonly knorn as Malabar are explained In Englih)

தமிழையும், தமிழ்நாட்டையும் 'மலபார்' என்று குறிப்பிடும் பழக்கம் 16லிருந்து 18-ஆம் நூற்றுண்டு வரை ஐரோப்பியரிடை இருந்துள்ளது. அதன் பின்னரே தெளிவாக மலபார் என்று கேரளத்தைக் குறிப்பிடலாயினர்.

இவ்வகராதியினையடுத்து 1786-இல் முதல் ஆங்கிலம்-தமிழ் அகராதியைப் பெப்ரீசியஸ் வேப்பேரிமிசன் அச்சகத்தில் அச்சிட்டார். இவ்விரண்டு அகராதிகளுமே மிகப் பழமையானது. இவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ள தமிழ் எழுத்துக்களும் தெளிவில்லாதவை.

இவற்றைத் தொடர்ந்து வேப்பேரி மிசன் கிறிஸ்தவ சமய நூல்களை வெளியிட்டது. ஜான்பய்னயின் 'பில்கிரிம்ஸ் பிராக்ரஸ்' தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப் பெற்றது (1793), வேறு பாப்பு மாற்கம் (1798) கிறித்து மார்க்க ஆயத்த பொத்தகம் (1806) முதலியவை குறிப்பிடத்தக்கவை.

19-ஆம் நூற்றுண்டில் சமய நூல்களை வெளியிட்டதோடு, நல்ல தமிழ் இலக்கிய, பாட நூல்களையும் மிசன் வெளியிட்டது. நீதி நெறி விளக்கம் ஆங்கில மொழி பெயர்ப்புடன் ஸ்டோக்ஸ் (stokes) என்பவரால் (1830) வெளியிடப் பெற்றது.

பாளையங்கோட்டை மிசனில் பணியாற்றி வந்த இரேனியஸ் (Rhenius) ஐயர் பூவியல் பற்றி முதன்முதல் தமிழில் (1832) விரிவான நூலை எழுதினுர். இதனை வெளியிட்ட மிசன் மீண்டும் ராட்லர் (Rottler) பாதிரியார் விரிவாகத் தொகுத்த தமிழ்-ஆங்கில அகராதியை (1839) வெளியிட்டது. தரங்கை மிசனைச் சார்ந்த துறு (Drew) பாதிரியார் திருக்குறளில் முதல் 64 அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அவருக்குத் தமிழ் கற்

பித்த இயற்றமிழ் ஆசிரியர் இராமாநுசகவிராயர் பரிமேலழகர் உரையைத் தழுவிப் புத்துரையும் எழுதினர். இவ்விரண்டையும் இணைத்து வேப்பேரி மிசன் இரு தொகுதிகளாக (1852) வெளியிட்டது.

சாமுவேல் பிள்ளை என்பார் எழுதிய நன்னூல் ஆங்கில விளக்கம் (1951) அந்நூலை ஆங்கிலத்தில் அறிமுகப்படுத்த முயன்ற மிக அரிய பகுதியாகும். ஒரு சில பகுதிகளைத் தவிர நூல் முழுவதும் வெளிவராதது பெருங்குறையேயாகும். அடுத்து, தொல்காப்பியத்தையும், நன்னூலையும் ஒப்பு நோக்கிச் சாமுவேல் பிள்ளை வெளியிட்ட தொல்காப்பிய தன்னூல் (1858) ஒப்பிலக்கண ஆராய்ச்சிக்கு வித்திட்ட நூலாகும். இதுவும் எழுத்ததிகாரத்திற்கு மட்டுமே வெளி வந்தது.

சீவகசிந்தாமணியின் ஒரு பகுதி (நாமகள் இலம்பகம்) முதன் முதலில் அச்சேறியது. (1868) இம்மிசன் அச்சகத்தில் தான். பவர் (Bower) பாதிரியார் ஒவ்வொரு பாடலுக்கும் ஆங்கிலத்தில் தலைப்பு கொடுத்து வெளியிட்டார். எஞ்சிய இலம்பகங்களை அவர் வெளியிடாது போய்விட்டார்.

கால்டுவெலின் 'பாரதகண்டபுராதனம்' (1893) என்ற வரலாற்று நூல், வீரமாமுனிவரின் 'வேதியரொழுக்கம்' (1898) போன்ற பல நூல்களை அச்சிட்ட வேப்பேரிமிசன் அச்சகம் இன்றும் 'டையோசிசன் அச்சகம்' என்ற பெயரில் வேப்பேரியில் பணியாற்றிவருவது பெருமகிழ்ச்சிக்குரியதாகும்.

19-ம் நூற்றுண்டில்தான் தமிழ்நாட்டில் அச்சகங்கள் முறையாகத் தோன்றலாயின. அச்சுச்சட்டம் தனியார் அச்சகம் வைப்பதைத் தடை செய்திருந்ததால் 1835 வரை தனியார் அச்சகங்கள் தோன்றவில்லை. எனினும் அங்குமிங்குமாக ஓரிரு அச்சகங்கள் தோன்றின.

1835-க்கு முன் அரசின் சார்பில் புதிதாக நிறுவப்பட்ட 'கல்விச் சங்க அச்சுக்கூடத்தைத்' தவிர ஒன்றிரண்டு அச்சகங்கள் சென்னையில் இருந்திருக்கின்றன. 1811-இல் தமிழ் இலக்கண நூலான 'தமிழ் விளக்கம்' திருவேற்காடு சுப்பராய முதலியரால் அச்சிடப் பெற்றது, அதன் பின்னல் திருக்குறளையும், நாலடியாரையும் அச்சுவாகனமேற்றிய சென்னை மாசத்தினச் சரிதையின் அச்சுக் கூடத்தைக் குறிப்பிடவேண்டும். இவ்விரண்டையும் பழுதறப் பதிப்பித்தவர் திருநெல்வேலி அம்பலவாணக் கவிராயர். தஞ்சை நகரம் மலையப்ப பிள்ளை குமாரன் ஞானப்பிரகாசனுற் அச்சிற் பதிக்கப்பட்டது. இதில் பயன்படுத்தப்பட்டுள்ள அச்செழுத்துக்கள் எங்கிருந்து கிடைத்தன என்று தெரியவில்லை, அச்சும் மர

அச்சா அல்லது உலோக அச்சா என்று தெரியவில்லை. ஆனல் எழுத்துக்கள் தெளிவாக, படிப்பதற்கு எளிமையாக உள்ளன. குறள், நாலடி மூலத்தைத் தனித்தனியாகச் செம்மையான முறையில் பதித்துள்ளனர்.

1827.இல் சென்னையிலிருந்த கமர்ஷியல் பிரஸ், பூம்பாவை யார் விலாசம்' என்ற நூலை வெளியிட்டுள்ளது. ஞான சம்பந்தப் பெருமாள் பூம்பாவையை எலும்பிலிருந்து பெண்ணுருவாக்கியது இந்நூலில் பாடல் வடிவில் ஆறுமுக வள்ளலால் பாடப் பெற்றுள்ளது. இதில் பயன் படுத்தப் பட்டிருக்கும் எழுத்துக்கள் மிக அழகாக உள்ளன இவை உலோக எழுத்துக்கள்.

இவ்விரண்டு அச்சகங்களும் வேறு நூல்களை அச்சிட்டதாகத் தெரியவில்லை. இவ்விரண்டைத்தவிர வேறு அச்சகங்கள் 1830-க்கு முன் இருந்ததாகக்காணும்.

வேப்பேரி மிசனுக்கு அடுத்த நிலையில் விரிவான முறையில் அச்சகம் ஏற்பட்டது, சென்னைச் கல்விச் சங்கத்தார் ஆதரவில் தான். வெள்ளையர் அரசு 1812-இல் ஆங்கில நாட்டிலிருந்து இந்தியாவிற்குப் பணியாற்ற வரும் ஆங்கிலேயர்கட்கு இங்குள்ள மொழிகள் தெரிந்திருக்க வேண்டுமென்பதற்காகத் தமிழ். தெலுங்கு முதலிய தென்னிந்திய மொழிகளைக் கற்பிப்பதற்குச் செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் ஒரு கல்லூரியைத் தொடங்கியது. அதில் பயிலும் மாணவர்கட்கு பயன்படும் வகையில் புத்தகங்களை அச்சிட ஒரு அச்சகத்தையும் நிறுவியது.

1813-இல் கல்விச் சங்கத்து அச்சகம் தொடங்கியவுடன் அதே ஆண்டில் அக்கல்லூரியின் தலைமைப் புலவராகத் திகழ்ந்த திருச்சிற்றம்பல தேசிகன் என்பார் தமிழ் இலக்கணத்தை எளிய முறை கற்றுக் கொள்ள 'இலக்கணச் சுருக்கம்' என்னும் நூலை வெளியிட்டார். இதைப் பதிப்பிக்க அக்கல்லூரியை நிறுவக் காரணமாயிருந்த இதன் தலைவராய் எப். டபிள்யூ. எல்லிசு பேருதவி செய்தார். இவர்தான் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த எல்லிஸ்.

இந்நூலில் தமிழ் நெடுங்கணக்கு கொடுக்கப் பெற்றுள்ளது. அதில் குறில் எ, ஒ. ஆகியவற்றுக்கும் உயிர் மெய் எகர, ஒகர குற்றெழுத்துக்களுக்கும் தலையில் புள்ளியிடப் பெற்றுள்ளது, 'ஆண்டெய்தும் எகர ஒகரமெய் புள்ளி' என்ற நன்னூல் விதியை நினைவூட்டும்.

1855-இல் திருச்சிற்றம்பல தேசிகன் 'இராமாயண உத்தரகாண்டக் கதை'யை உரைநடையில் எழுதியுள்ளார்- இதுவரை குறிப்பிட்ட நூல்கள் அனைத்துமே புள்ளியிடப் பெறுது கல்வெட்டிலும், ஓலைச்சுவடிகளிலும் காணப் பெறுதல் போலவே அச்சிடப் பெற்றுள்ளன.

வீரமாமுனிவர் 17.ம் நூற்றூண்டில் தொகுத்த 'சதுரகராதி' இக்கல்விச் சங்கத்து அச்செழுத்தால் 1824-இல் முதலில் அச்சிடப் பெற்றது. இதில் ஒற்றுகள் சில இடங்களில் புள்ளி பெற்றும் பல இடங்களில் புள்ளியில்லாதும் அச்சிடப்பெற்றன. இதே முறையில் அதனைப் பதிப்பித்த தமிழ்த் தலைமைப் புலவர் தாண்டவ ராய முதலியார் பஞ்சதந்திரக் கதையையும், கதா மஞ்சரியை யும் 1826.இல் அச்சிட்டார்.

அக்கல்லூரியில் தமிழ்ப் புலவராகத் திகழ்ந்த திரு. வெங்கடா சல முதலியார் தமிழ் மாணுக்கர்களுக்குத் தமிழ்:நெடுங்கணக்கைக் கற்பிக்கத் தமிழ் அரிச்சுவடி (1827) எனும் நூலைச் கல்விச் சங் கத்தில் பதிப்பித்தார். இதில் எகர ஒகர நெடில்களின் மேல் புள்ளியிடப்பெற்றுள்ளது. ஈகாரத்தைக் குறிக்க இ என்ற எழுத்து பயன்படுத்தப்பட்டுள்ளது. வடமொழி நூலான 'மிருதி சந்தா மதுரைக் கந்தசாமிப் புலவரால் மொழி பெயர்க்கப் பெற்று 'தருமநூல்' விவகார சங்கிரகம் (1827) என்ற தலைப்பில் வெளி யிடப் பெற்றது.

திருமதி. திறிமர் (Mrs, Jrimmer) தொகுத்த கதைகளைத் தமிழ் கற்கும் மாணவர்கட்காகக் காமியப்ப முதலியாரும் கந்த சாமி முதலியாரும் மொழி பெயர்த்துக் கலிவியேணி என்ற பெய ரில் (1827) கல்விச் சங்கத்து அச்செழுத்தில் அச்சிட்டனர்.

தாண்டவராய முதலியார் தமிழ் இலக்கணத்தை வினவிடை வடிவில் மாணவர்களுக்குக் கற்பிக்க எண்ணி 'இலக்கண வின விடை'யை (1828) கல்விச் சங்கத்து அச்செழுத்தில் பதிப்பித்தார். அதில் எ, ஒ, இ குறில்கள் தலைப்பில் புள்ளி பெற்றுள்ளன.

இவ்வாறு 1813 வரை கல்விச் சங்கத்து அச்சகத்தில் அச்சான நூல்களில் நெடுங்கணக்கைப் பற்றிக் குறிப்பிடும்போது எகர ஒகரக் குறில்களுக்கும், நெடில்களுக்கும் மாறி மாறிப் புள்ளியிட்டிருக் கின்றனர். 1930-க்கு மேல் அச்சான நூல்கள் அனைத்தும் இன் றுள்ள வடிவைப் பெற்றுவிட்டன. 1827-இல் செயிண்ட் ஜார்ஜ் கோட்டையிலிருந்த கல்லூரி பொதுக் கல்விக்குழுவாக (Board of the Collage and for Public Instruction) அரசால் மாற்றப் பெற்று அதே ஆண்டில் நுங்கம் பாக்கத்தில் இப்போது டி. பி. ஐ. அலுவலகம் உள்ள இடத்திற்கு மாற்றப் பெற்றது. அத்துடன் அச்சகமும் புதிய அமைப்புக்கு மாற்றப் பெற்றது.

சென்னைக் கல்விச் சங்கத்தச்சகத்தின் பெயரில் வந்த நூல்கள் அவ்வாண்டுடன் நின்றுவிட்டன. பிறகு வந்த பாடநூல்கள் Public Instruction pressi என்ற பெயரில் வந்தன

1835-இல் இந்தியர்களும் அச்சகம் நடத்தலாம் என்ற சட்டம் வருவதற்கு முன்னரே ஈரிரு தனியார் அச்சகங்கள் இருந்ததை முன்னர்க் குறிப்பிட்டோம். 1830-க்குப் பின் ஓரிரு அச்சுக் கூடங்கள் தோன்றலாயின. சென்னையிலிருந்த ரவானு அச்சுக்கூடம் பல வைணவ சமய நூல்களை வெளியிட்டது. சென்னை கல்விச் சங்கத்தில் ஆசிரியராக இருந்த திரு. வேங்கடாசல முதலியார் திருவரங்கத்தூ சற்றிரு நாமம், தருவரங்கத்துமாலை. திருவரங்கக் கலம்பகம் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, திருவேங்கடமாலை. திருவேங்கடத் தந்தாதி, அடிகரந்தாதி, திருவரங்கத்தந்தாதி ஆகிய சிறு நூல்களை 1830-இல் பதிப்பித்தார், 1836-இல் இவர் தாமே 'சரஸ்வதி' அச்சுக்கூடம் ஒன்றை அமைத்துப் பல அரிய நூல்களை அவ்வச்சகத்தின் வழி வெளியிட்டார்.

திருத்தணியைச் சேர்ந்த வீரசைவக் குடும்பத்தைச் சார்ந்த கந்தப்பையர் குமாரர் சரவணப் பெருமாளையர் சென்னையில் பெரு மக்கள் கூடி அமைத்த விவேகக் கல்விச் சாலைத் தமிழ்த் தலைமைப் புலவராக இவர் திகழ்ந்தார்- இவர் 'கல்வி விளக்க அச்சுக்கூடம்' ஒன்றை அமைத்து 1832-ல் பழமலையந்தாதியை வெளியிட்டார். தொடர்ந்து அதன் வழி திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி (1835) கோடீசுவரக் கோவை (1836) கந்தரலங்காரம் (1836) அறப்பளீசுர சதகம் (1837) பஞ்சதந்திரக்கதை (1838) கோளதீபிகை (1839) மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (1840) போன்ற நூல்களை வெளியிட்டார். 1840-ல் இவர் மறைந்தவுடன் அவர் தம் தமையனுரான விசாகப் பெருமாளையர் தொடர்ந்து அச்சகத்தை நடத்தியதுடன் நல்ல நூல்களையும் பதிப்பித்தார். 1840-இல் இவர் பதிப்பித்த நன்னூல் காண்டிகையுரை இன்றும் பெயர்பெற்று விளங்குகிறது. 1835-க்குப் பின் சென்னைமாநகரில் பல அச்சகங்கள் தோன்றலாயின.

### குறிப்புகள்

1 கி. பி 868-இல் சீனுவில் அச்சிடப்பெற்ற 'ஹீரக சூத்ரம்' (Hiraka Sutra) என்ற புத்தமத நூலே நமக்குக் கிடைக்கும் முதல் அச்சு நூல்.
2 கூடன்பர்க் (Guten Berg) உலோக அச்சுக்களால் 1455-இல் டைபினை அச்சிட்டார்.
3 Doctrina Christam
4 Rev: Henrique Henriques
5 True and complete description of the famous East Indian Coasts of Malabar and Coromandal.
6 Horti Indici Malabarici
7 Ignacio Aichamoni
8 Ziegen Balg
9 Society for promoting christian knowledge.
10 The abomination of paganism and the way for the pagans to be saved
11 Grammatica Tamlica

# இந்தூர்க் கோட்டம்

## (ஒரு முன்னேடி அறிமுகம்)

### தாமரைக்கண்ணன்

**இந்தூர்க் கோட்டம்**

ஜெயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்தைப் போலவே இந்தூர்க் கோட்டமும் மிகவும் சிறப்புடன் விளங்கியிருந்தமை அண்மைகால ஆய்வுகளிலிருந்து நமக்குத் தெரிகிறது.

**புதிய கண்டுபிடிப்புகள்**

சென்ற ஆகஸ்டு '76ல் சென்னை செங்கற்பட்டு மாவட்டத் தொல்பொருள் ஆய்வுத்துறைப் பதிவு அலுவலர் திரு நடன. காசிநாதன் அவர்களும் நானும் செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தைச் சார்ந்த ஒரத்தி என்னும் கிராமத்திற்கு சென்ரோம்.

அங்குள்ள பழைய வைணவக் கோயிலின் எதிரில் இருக்கும் கொடிக்கம்பத்தின் கீழ் இருந்த தனிக் கற்பலகையில் உள்ள கல்வெட்டில் 'ஈதுர்க் கோட்டம்' என்ற குறிப்பு காணப்படுகிறது.

'ஈதுர்க் கோட்டம்' என்பது ஈசூர் கோட்டமாக இருக்கலாம் என்ற எண்ணம் எழுந்தது.

ஆனல்............

மதுராந்தகம் வட்டத்தில் இந்த ஒரத்தி கிராமத்திலிருந்து நேர் கிழக்கில் சுமார் 30 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள வெடாவில் கிடைத்துள்ள கோயில் கல்வெட்டுகள் 'இந்தூர்க் கோட்டம்' என்று ஒரு கோட்டத்தைக் குறிக்கின்றன.

ஒரத்தி கல்வெட்டின் காலம் தந்திவர்மப் போத்தரையனின் 14-வது ஆட்சியாண்டு (கி. பி. 795+14 = 809).

வெடால் கல்வெட்டின் காலம் முதலாம் இராஜராஜனின் 9-வது ஆட்சியாண்டு (அதாவது கி. பி. 985+9 = 994).

இந்த இரண்டு கல்வெட்டுகளில் சுமார் 185—ஆண்டுகள் காலத்தால் முந்தியது ஒரத்தி கல்வெட்டு.

இரண்டையும் ஒப்பு நோக்கிப்பார்த்தால் எழுத்துப் பிழை களாலோ அல்லது கால வழக்காற்ருலோ 'ஈதூர்க்கோட்டம்' என்னும் ஒரத்தி கல்வெட்டில் உள்ள பெயர் 'இந்தூர்க் கோட்டம்' இந்தூர்க்கோட்டம்' என்று மருவி வந்திருக்கலாம்.

மற்றும், ஈதுர்—ஈதூர் என்னும் பெயரில் உள்ள ஊர்களோ அல்லது அது மருவி வந்த ஊர்ப் பெயர்களோ அண்மையில் ஏதும் இல்லை. ஒரத்தி என்னும் ஊர் இருக்கிறது. அங்கே பண்டைச் சிறப்புடைய தடயங்கள் ஏதும் கிடைக்காததால் அந்த 'ஈஞர்' 'ஈதுர்க்கோட்டம்' என்று குறிப்பிடப்பட்டிருக்க முடியாது.

ஆகவே.........

இந்த 'இந்தூர்' என்பது தற்போது 'இந்தளூர்' என்று வழங்கப் பெறும் ஊராக இருத்தல் வேண்டும்.

மதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்துத் தனியூர் அச்சிறுபாக்கம் என்று (அச்சிறுப்பாக்கத்து) ஸ்ரீ ஆட்சி கொண்ட நாதர்கோயில் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றிருப்பதும், திருஞான சம்பந்த ருடைய பாடல் பெற்ற ஸ்தலமுமாகிய அச்சிறுபாக்கத்திற்குத் தென்கிழக்கில் சுமார் 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள "இந்தளூர்" தொன்மைச் சிறப்பு வாய்ந்த ஊராகும்.

**கல்வெட்டுகளில் இது வரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள இந்தூர்க் கோட்டத்து நாடுகள்**

இது வரை கிடைத்துள்ள கல்வெட்டுகளிலிருந்து 1. நெடுங்கல் நாடு 2. வேடல் நாடு 3. இடைக்கழிநாடு என்னும் மூன்று நாடுகள் இந்தூர்க் கோட்டத்தின் உட்பிரிவாக இருந்தது தெரிகிறது.

**நெடுங்கல் நாடு**

மதுராந்தகம் வட்டத்தின் தென்பகுதியில் முதன் முதலாக அண்மையில் எங்களால் கண்டு பிடிக்கப்பட்ட ஒரத்தி கல்வெட்டில்

ஸ்ரீ தந்தி போத்தரையர்க்குயாண்டு 14 வது ஈதுரக் கொட் டத்து நெடுங்கல் நாட்டு ஆற்றூர் இருந்து வாழும் கொற்றய (ந)ந்தர் மகன் நக்கன் செய்வித்த தூம்பு. குவணதச்சனெழுத செய் கை' என்ற செய்தித் தொடர் காணப்படுகிறது.

இந்த வட்டாரத்தில் இதுவரை கண்டுபிடிக்கப் பெற்றவற்றுள் இந்தக் கல்வெட்டில் மட்டுமே 'நெடுங்கல் நாடு' என்ற குறிப்பு வரு கிறது.

இந்தக் குறிப்பிலிருந்து ஈதுரக் கோட்டத்தில் நல்டுகெங் ஒரு நாடாக இருந்தது என்பதும், நெடுங்கல்லிலிருந்து கிழக்கில் சுமார் 5 கிலோ மீட்டர் தூரத்தில் இப்போது ஆத்தூர் என்று வழங்கப்படும் ஆற்றூர் என்னும் ஊர் நெடுங்கல் நாட்டின் உட்கிராமமாக இருந்தது என்பதும், அங்கே அநந்தர்களாகிய சமணர்கள் வாழ்ந்தார்கள் என்பதும், அவர்கள் ஏரிக்கு மதகு எடுப்பது போன்ற பொதுத் தொண்டுகளை (தம் ஊருக்கு மட்டும் அல்லாமல்) வெளியூர்களுக்கும் பரந்த மனப்பான்மையுடன் செய்துள்ளார்கள் என்பதும் நமக்குத் தெரிகிறது.

நெடுங்கல்லுக்கு வடக்கிலுள்ள கற்காலத்தாழிகள் கிடைக்கும் இடமாகிய பெரும்பேறு கல்வெட்டுல் 1. களத்தூர்க் கோட்டத்து தனியூர் ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகை பெரும்போரூர்' என்ற குறிப்பு வருவது ஊன்றிக்கவனிக்கத் தக்கது.

இதிலிருந்து களத்தூர்க் கோட்டத்தின் தெற்கு எல்லை ஊராக பெரும்பேறு இருந்தது என்பதும், பெரும்பேறிலிருந்து தெற்கில் சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள நெடுங்கல், ஈதுரக் கோட்டத்தில் தனி நாடாக 'நெடுங்கல் நாடாகப் பிரிந்து இணைக்கப்பட்டிருந்தது என்பது புலனாகிறது.

**இன்றுவரை கல்வெட்டுகள் கிடைத்துள்ள நெடுங்கல் நாட்டு ஊர்கள்**

(அ) நெடுங்கல் : இந்த 'நெடுங்கல்' என்னும் அதே பெயருடன், அச்சிறுபாக்கத்திலிருந்து சுமார் 8 கிலோமீட்டர் தூரம் தெற்கில், காசங்கால் ரெயில் நிலையத்திற்கு வடமேற்கில் இப்போதும் இருக்கிறது.

இவ்வூரில், கிணறுகள் தோண்டும்போது பந்துக்களைப் போன்று பெரிதும் சிறிதுமான உருண்டைக் கருங்கற்கள் சந்தன நிறத்தில் பூமிக்கு அடியிலிருந்து கிடைக்கின்றன. பீரங்கி, கலன் போன்ற போர்க் கருவிகளில் பயன்படுத்திய கற்களாக இவை இருக்கலாம் என்று மக்கள் நினைக்கிறார்கள்.

இங்கே செங்கல்லால் கட்டப்பட்ட ஒரு இடிந்த கோட்டை இருந்ததாகக் கூறுகிறார்கள். பூமிக்கு அடியிலிருந்து பழங்கால செங்கற்கள் சுமார் 9" நீளம் 6 அகலம் 3 கனத்தில் இப்போதும் கிடைக்கின்றன.

கோட்டை இருந்த இடம், 'கோட்டைக் கரைமேடு' என்று அழைக்கப்படுகிறது. அங்கே, 'கோட்டைக் காத்தான் கோயில்' என்று ஒரு கோயிலும் இருந்திருக்கின்றது.

(ஆ) உரத்தி ஆற்றூர், ஒரத்தி முதலிய ஊர்கள் நெடுங்கல் நாட்டைச் சார்ந்திருந்தன என்பது ஒரத்தி கல்வெட்டில் தெளிவாகத் தெரிகிறது.

''ஸ்ரீ கன்னர தேவர்க்கு யாண்டு 21-வது கங்க அதிகாரி கங்கையன் உரத்தி மாதேவர்க்குச் செறு கல்லேரிக் கீழ்......'' என்று வரும் கி.பி. 901-வது ஆண்டின் கல்வெட்டில் ஒரத்தி என்னும் ஊர் உரத்தி என்ற பெயருடன் இருந்திருக்கிறது.

அந்த கல்வெட்டின் மேற்பகுதி தமிழிலும் கீழ்ப்பகுதி கன்னடத்திலும் எழுதப்பட்டிருக்கிறது.

இதில், வீரன் ஒருவன் வாள் கொண்டுதன் தலையைத் தானே அறுத்துத் தலைபலி கொடுப்பதைப் போன்ற சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது. அந்த வீரனுக்கு மேலே நான்கைந்து சிற்பங்கள் காணப்படுகின்றன. ஒருவர் அமர்ந்த நிலையிலும், அவர் அருகில் வீரன் ஒருவன் நிற்கும் நிலையிலும் உள்ள இதனை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்.

ஒரத்தி மலை உச்சியில் சமணர் படுக்கைகள் இரண்டு இருக்கின்றன. அந்த மலையில் சமணத்துறவிகள் வாழ்ந்தார்கள் என்பதற்கு அது சான்றாக அமைகிறது.

ஒரத்தி ஏரியின் உள்ளும் ஒரு வீரனின் நடுகல் காணப்படுகிறது.

(இ) அனந்தமங்கலம்: ஒரத்தியிலிருந்து தெற்கில் 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள அனந்தமங்கலம் சமணர்கள் வாழ்ந்த பேரிடமாகத் தோன்றுகிறது.

னந்தமங்கலம் என்பது அனந்தமங்கலம் என்று ஆகி இருக்கலாம்.

1. இங்கேயுள்ள சிவன் கோயிலுக்கு விக்கிரமசோழன், குலோத்துங்க சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி ராஜராஜதேவன் முதலியோர் திருத்தொண்டுகள் செய்துள்ளனர்.

அனந்தமங்கலத்துக்கு வடக்கில் இப்போது 'சாமான் குன்னு' (சமணன் குன்று) என்று கூறப்படும் குன்று, அந்நாளில் 'ஜினகிரி' என்று வழங்கியது.

1. 'மதுரைக் கொண்ட பரகேசரிவர்மனின் 38-ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 945) வர்த்தமானப் பெரியடிகள் என்பவர் ஜினகிரியில் உள்ள ஒரு சமணத் துறவியின் உணவுக்காக ஐந்து கழஞ்சு பொன் அளித்தார்' என்பதிலிருந்து இதனை அறிகிறோம்.

அண்மையில் தமிழ்நாடு தொல்பொருள் துறையினர் இந்தச் சமணக் குன்றின் மேல் இரண்டு இடங்களில் செதுக்கப்பட்டுள்ள தீர்த்தங்கரர் சிலைகளைக் கண்டுபிடித்தனர்.

ஒரு சிலையின் கீழே, 'அரட்டராந நேமிகள்' என்றும் 'ரெட்ட நேமி அடிகள்' என்றும் உள்ள பத்தாம் நூற்றுண்டைச் சேர்ந்த பழந்தமிழ் எழுத்துக்களை அவர்கள் கண்டுபிடித்தது குறிப்பிடத் தக்க மகிழ்ச்சிச் செய்தியாகும்.

அனந்தமங்கலத்தில் காணப்படும் கல்வெட்டுக்கள் பிற்காலச் சோழர் காலத்தவை, அவற்றில் 'நெடுங்கல் நாடு' என்னும் குறிப்பு காணப்படவில்லை, ஆயினும், தந்திவர்மப் பல்லவன் காலத்தின் ஒரத்தி கல்வெட்டில் 'நெடுங்கல் நாடு' சிறப்புடன் குறிக்கப் [illegible]கால் நெடுங்கலுக்கு அண்மையில் தென்மேற்கில் உள்ள படு[illegible] 'நெடுங்கல் நாட்டுடன்' இணைந்திருக்கும் என்று அனந்தமங்கல[illegible] எண்ணலாம்,

அனந்தமங்கலத்தின் தென்பகுதிகள் [illegible]டைச் சங்க காலத்தில் ஓய்மா நாட்டைச் சார்ந்தவை என்பது குறிப்பிட[illegible]த்தக்கது.

**நெடுங்கல் நாட்டில் இன்னும் ஆராயவேண்டிய இரண்டு ஊர்கள்:**

நெடுங்கல்லுக்கு மேற்கே 4 கிலோமீட்டர் தூரத்தில் எள்ள கொங்கரை என்னும் ஊரின் தெற்குப் பக்கத்தில் இடிபாடடைந்து அடியோடு பாழ்பட்டுப் போன பழந்தடங்கள் உள்ளன. பல்லவர் காலத்திலோ அல்லது சோழர் காலத்திலோ வழிப்போக்கர்களுக்காகக் கட்டப்பெற்ற ஒரு சத்திரமும் இந்த ஊரில் குளக்கரையை ஒட்டியிருந்து அதுவும் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு அடியோடு இடிந்து பாழ்பட்டது. அந்தச் சத்திரத்தின் கட்டடம் செங்கல்லால் கட்டப்பெற்று மேற்கூரை விமான வளைவு பெற்றிருந்தது.

இன்னொரு ஊர் நெடுங்கலுக்கு வடமேற்கில் சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது சித்தாமூர்.

சித்தாமூர் ஏரியின் கீழ் உள்ள பரந்த நிலப்பரப்பில் பழங்கால பானை ஓடுகளும் பூமிக்கு அடியில் மண் தாழிகள் புதைந்து கிடக்கும் தடயங்களும் காணப்படுகின்றன. இந்த வட்டாரத்தில், பூமிக்கு அடியில் 50 சென்டிமீட்டர் சதுரமுள்ள சிறுசிறு கருங்கற் பலகைகள் அடுக்கடுக்காய் கிடைக்கின்றன.

இது மேலும் ஆராயப்பட்டால், நமக்குப் புதிய செய்திகள் கிடைக்கலாம்.

சித்தாமுருக்கு அருகில் தற்போது பாபுராயன்பேட்டை என்று அழைக்கப்படும் கிராமம் பழைய பதிவேடுகளில் 'மல்லன் பட்டினம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கே நாயக்க மன்னர் காலத்தில் கட்டப்பட்ட கோயிலும் இருக்கிறது. அது ஏழு மதிற்சுவர்களோடு கூடிய பெரிய கோயிலாக இருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

2, வேடல் நாடு (வெடால் நாடு)

இது கல்வெட்டுகளில் விடால் நாடு என்றும் வேடல் நாடு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்தளூரில் இருந்து நேர் கிழக்கில் சுமார் 20 கிலோமீட்டர் தூரத்தில் தற்போது வெடால் என்று அழைக்கப்பெறும் ஊர், இது.

வெடால் கிராமத்தின் சிவன் கோயிற் கல்வெட்டுகளிலிருந்து தெளிவாகச் சில செய்திகள் கிடைக்கின்றன.

வெடால் கிராமத்தில் வலிமை வாய்ந்த ஊர்ச்சபை 'மகா சபை' என்னும் பெயருடன் இருந்திருக்கிறது.

கிராமத்தில் உள்ள சிவன் கோயிலுக்கோ திருமடத்துக்கோ நிலம், பொன் முதலியவற்றை நன்கொடை அளித்தவர்கள் அந்த மகாசபையின் மூலமாகவே அளித்திருக்கிறார்கள் என்பதும், மகா சபையின் அங்கிகாரத்தைப் பெற்றே கோயில் திருப்பணிகள் நடந்திருக்கின்றன என்பதும் கல்வெட்டுச் செய்திகள்......

1. ''முதலாம் இராஜராஜனின் 9-வது ஆட்சியாண்டில் (கி. பி. 994) பல்லவன் இடைக்கழிநாட்டுக்கோன் என்னும்...ஏரன் சுத்தியின் மனைவி குளிர்கோயில் என்பவள், சுத்தப்பெருமான்—உமாபட்டாலகித் திருக்கோயில் பள்ளியறையில் நுந்தா விளக்கு வைப்பதற்கும் மற்ற திருப்பணிகளுக்கும் சில நிலங்களை நன்கொடையாக அளித்திருக்கிறாள். இறைவி உமாபட்டாலகியின் செப்புத் திருமேனி ஒன்றையும் செய்வித்திருக்கிறாள். இந்தூர்க் கோட்டத்தில் உள்ள விடால் நாட்டு, விடாலின் மகாசபையில் அவள் அளித்த நிலங்களுக்கு வரி விலக்கு அளித்திருக்கிறார்கள்'' என்று விடால் கோயில் கல்வெட்டு கூறுகிறது.

2, முதலாம் இராஜேந்திர சோழனின் 20-வது ஆட்சியாண்டில் (கி. பி. 1034) ஜெயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மா நாட்டு முன்னூறு என்னும் பண்டித சோழச் சதுர்வேதி மண்டத்து துட்டன் வீரதுங்கன் என்னும் சோழ கேரளப் பெரியரை

யன், விடாலில் உள்ள திருவடவாமுகாக்னீஸ்வரம் உடையார் கோயிலுக்கு இரண்டு விளக்குகள் எரிப்பதற்கு இரண்டு நிலத் துண்டுகள் கொடுத்ததை இந்தூர்க் கோட்டம் விடால் நாட்டு விடால் என்னும் சோழ கேரளச் சதுர் வேதி மங்கலம் மகாசபை பொன் கொடுத்து வாங்கியதை இன்னொரு கல்வெட்டு குறிக்கிறது.

மேற்கண்ட இரண்டு கல்வெட்டுகளிலிருந்தும் வெடால் விடால் நாடாகத் திகழ்ந்தது என்பதை அறிகிறோம்.

முதலாம் இராஜேந்திரனின் 36.வது ஆட்சியாண்டுக் கல் வெட்டு (கி. பி. 1045) ஒன்று கீழே உள்ள செய்தியை அறிவிக் கிறது.

1. ஜெயங்கொண்ட சோழமண்டலத்து இந்தூர்க் கோட் டத்து சோழ கேரள-சதுர்வேதி மங்கலத்து மஹாசபையினர் மலைய குலாந்தகப் பெரியரையன் என்பவனிடமிருந்து சில நிலங்களைக் கொடையாகப் பெற்றுக் கொண்டு வடவாமுகாக்னீஸ்வரம் உடை யார் கோயிலில் உள்ள ஆடவல்லார்க்கு நான்கு விளக்கு எரிப்ப தாகவும் உணவு படைப்பதாகவும் ஏற்று அவனிடம் 30 பணம் பெற்றுக்கொண்டனர். அந்த நிலத்துக்கு மஹாசபை வரி விலக்கு அளித்திருக்கிறது.

2. பரகேசரிவர்மன் முதலாம் இராஜேந்திரனின் 16வது ஆட்சியாண்டில் (கி. பி. 1030) பனையூர் நாட்டு, ஆனுங்கூர்க்கூற்றம் ஆனுங்கூரில் உள்ள வெளிப்பாக்கக் கிழான் அரங்கன் நமியநந்தி, பங்குனி மாதத்திலிருந்து நான்கு மாதங்களுக்கு அங்கிருந்த மடத் துக்கு விறகு அளிப்பதற்காக மடப்புறமாக இந்தூர்க் கோட் டத்து விடாலைச் சேர்ந்த திருமங்கலக்கிழான் அறங்கரையன் என்பானிடமிருந்து நிலம் வாங்கிக் கொடையாக அளித்தான்.

இந்தப் பனையூர் நாடு எது என்பதில் குழப்பம் தோன்றுகிறது.

விடாலுக்கும் இடைக்கழிநாட்டுக்கும் அண்மையில் உள்ள பனையூராக இருக்கலாம். ஆனால் அதன் பக்கத்தில் ஆனுங்கூர் எனும் ஊர் இல்லை. நாங்குளத்தூர் எனும் சிற்றூர் இருக்கிறது. ஆனுங்கூர் நாங்குளத்தூர் என்றும், கல்வெட்டில் காணப்படும் வெளிப்பாக்கம் வெளிக்காடு என்றும் ஆகியிருக்கலாம் என்று எண்ணலாம். ஆனால் விடாலைத் தாண்டியுள்ள பெரிய ஊராகிய சூனம்பேடு ஆனுங்கூர் என்ற பெயரிலும், சூனம்பேட்டை அடுத் துள்ள வில்லுவாக்கம் கிராமமே வெளிபாக்கம் என்ற பெயரிலும் இருந்திருக்கலாம் என்றும் கருதுதவற்கும் இடம் உண்டு,

பனையூர், இடைக்கழி நாட்டைச் சார்ந்திருப்பதால் அது தனி நாடாக இருந்திருக்க முடியாது என்பது உறுதிப்படுகிறது.

ஆகவே, தென்னாற்க்காடு மாவட்டம் விழுப்புரத்தை அடுத்து பனையூரும் ஆனங்கூரும் இருப்பதால் அந்த ஊரைச் சார்ந்தவர்கள் வெடால் கோயிலுக்குத் திருப்பணி செய்திருக்கலாம் என்பது உறுதிப்படுகிறது.

1. பதினோராம் நூற்றாண்டின் சிதைந்துபோன இன்னொரு கல்வெட்டிலிருந்து வெடால் இறைவனுக்கு, சித்திரை விஷுவிலும் திருவாதிரையிலும் விழாக்கள் எடுப்பதற்கும் திருவமுது படைப்பதற்கும் நிலக்கொடை அளித்திருப்பது தெரிகிறது.

2. விடாலில் உள்ள இறைவனின் திருநாமம் 'திருவடவாயி வாண்டார்' என்பதை பரிகேசரி வர்மன் முதலாம் இராஜேந்திரனின் 16-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டிலிருந்து (கி. பி. 1030) அறியும்போது நம் சிந்தனைக்கு விருந்து கிடைக்கிறது.

வடவாயிலாண்டர் என்னும் அழகிய பெயரில் உள்ள 'வடவாயில்' பிற்காலத்தில் 'வடால்' 'விடால்', 'வேடல்' என்று மருவி வந்திருக்கலாம்,

ஆக ,வடவாயில்' என்னும் கிராமத்தின் பெயரால் இறைவர் 'வடவாயிலாண்டார்' என்று அழைக்கப்பெற்றிருக்கலாம்; அல்லது, 'வடவாயில் ஆண்டவர்' என்னும் இறைவன் பெயரால் 'வடவாயில் 'வெடால்' என்னும் பெயர் இவ்வூருக்கு வந்திருக்கலாம்.

**நன்றிக்கடன் :**

சிதறிக் கிடந்த இந்தூர்க் கோட்டத்தின் செய்திகளை ஒன்று திரட்டுவதற்கும், புதிய நெடுங்கல் நாட்டுச் செய்திகளைக் கண்டறிவதற்கும் எனக்கு உறுதுணைபுரிந்து வழிகாட்டிய தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் மதிப்புக்குரிய டாக்டர் இரா. நாகசாமி அவர்களுக்கும் சென்னை செங்கற்பட்டு மாவட்டப் பதிவு அலுவலர் மதிப்புக்குரிய நடன. காசிநாதன் அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# காஞ்சியும் கலைகளும்

## கு. தாமோதரன்

தமிழ் நாட்டில் உள்ள நகரங்களில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நகரங்கள் ஒரு சிலவே ஆகும். அவற்றுள் காஞ்சி, உறையூர், பூம்புகார், தஞ்சை, மதுரை ஆகிய நகரங்கள் சிறப்புடையன. இவற்றுள் காஞ்சி மாநகர் தொன்மையான வரலாற்றினையும் கலைச் சிறப்பினையும் பெற்று இன்று வரை சிறந்து விளங்குகின்றன. தமிழகத்தின் வடபகுதியில் அமைந்துள்ள காஞ்சியம்பதி, பல்லவ, பாண்டிய, சோழ, விசயநகர மன்னர்களாலும் ஆட்சி செய்யப் பட்டு வந்துள்ளது. காஞ்சியம் பதிக்கு அண்மையில் அமைந்துள்ள மாமல்லபுரம் பல்லவர் காலத்தில் சிறப்பு பெற்று விளங்கியது. தமிழகத்தின் தலை சிறந்த கலைப் படைப்பைப்படைத்தளித்துள்ள தால் கலையின் சிகரமாக இப்பகுதி விளங்குகிறது.

**மாமல்லபுரத்துக் கற்களுக்கு கலைமெருகு கூட்டியவன் யார்?**

மாமல்லபுரத்தில் அமைந்த இயற்கையான குன்றுகளில் பல் வகையான கலைச் சிறப்பின் உயிர் ஓட்டத்தை உண்டாக்கியவர்கள் பல்லவர்கள் என்பதில் ஐயமில்லை. முதலாம் மகேந்திரவர்மன், தமிழகத்தின் முதன்முதலில் குகைக் கோயிலைத் தோற்றுவித்தவன் என்பதில் எந்தவித கருத்து மாற்றமும் இல்லை. இவன் காலத்தில் இயல், இசை, நாடகம், சிற்பம் முதலிய கலைகள் சிறப்புற்று விளங்கியதைப் போன்று குடைவரைக் கோயில்களும் உருவெடுத் தன. இவனுடைய மண்டகப்பட்டு வடமொழிக் கல்வெட்டு இதனைக் குறிக்கிறது.

விசித்திரசித்தன் என்ற பெயருடைய இம்மன்னன் பிரம்மா, சிவன், திருமால் ஆகிய மூவருக்கும் செங்கல், மரம், உலோகம், சுதை இன்றி நூதனமான இந்த ஆலயத்தை எடுத்துள்ளான் என்பது கருத்தாகும். இத்தகைய கோயில்கள் பல்லாவரம், வல்லம், மாமல்லபுரம் ஆகிய இடங்களில் உருவெடுத்தன. மகேந் திரவர்மன் காலத்துக் குகைகள் (Rock-cut temples) எளிமையான நீண்ட சதுர மண்டபம் போன்ற அமைப்பு உடையவை. அவற் றின் தூண்கள் மேலும் கீழும் நான்கு சதுரமுள்ளவை. நடுவில் எண்பட்டையினைப் பெற்றுள்ளன.

இவனுக்குப் பின்னர் வந்த நரசிம்மவர்மன் குடைவரைக் கோயில்களை மட்டும் எடுக்காமல் குன்றன்ன கோயில்களையும் எடுத்துள்ளான். அமர்ந்த சிம்மம் தாங்கும் தூண்களை இவன் காலத்துக் கட்டிடக் கலையில் காணலாம். சிம்மத்தூண்களை உடைய குகைகள் மாமல்லனால் தோற்றுவிக்கப்பட்டது.

மாமல்லனுக்குப் பிறகு இராஜசிம்மன் என்ற பட்டப்பெயரையுடைய இரண்டாம் நரசிம்மன் காலத்தில் காஞ்சி கைலாசநாதர் கோயில், மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயில், பனமலைக் கோயில் முதலியன தோற்றுவிக்கப்பட்டன. இவைகள் கட்டிடக் கோயில்களாகும். (structural temples).

மாமல்லபுரத்துக் கடற்கரை கோயிலில் இராஜ சிம்மனுடைய கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன. இதற்கு இராஜராஜன் காலத்திலும் சிறந்த வழிபாடு நடந்துள்ளது என்பது தெரிகிறது. இக்கோயிலுக்கு இராஜராஜன் பெயரால் ஒரு நந்தவனமும் அமைக்கப்பட்டிருக்கிறது என்பது சிறப்புடையதாகும்.

காஞ்சி கைலாசநாதர் கோயில் திருச்சுற்றுகளில் சிறு ஆலயங்கள் பல உள்ளன. ஒவ்வொன்றிலும் இராச சிம்மனின் பட்டப் பெயர்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. சிறு ஆலயங்கள் அவனுடைய பட்டத்தரசியான ரங்கபதாகை என்பவளால் கட்டப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இதிலுள்ள ஓவியங்கள் பல்லவ கால ஓவியக் கலைக்கு எடுத்துக் காட்டாக உள்ளன. இராச சிம்மன் காலத்தில் கலை, புதுப்பொலிவுடன் விளங்கியது. பல வகையான கலைப்படைப்புக்கள் குறிப்பாக மாமல்லைப் பகுதியில் அமைந்தது. இவன் காலத்தில்தான் பெருமளவிற்குக் கட்டிடக் கோயில்களும், குடைவரைச் சிற்பங்களும் உருவெடுத்தன. மாமல்லபுரத்துச் சிற்பங்களை உருவாக்கிய மன்னன் யார் என்ற கருத்து பலவாறாக நிலவி வருகிறது. இவற்றுள் தொல் பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் துணை கொண்டு மாமல்லபுரத்துச் சிற்பங்களைத் தோற்றுவித்தவன் 'அத்யந்த காமன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற, இராசசிம்மனே என்று குறித்துள்ளார். மாமல்லபுரத்துச் சிற்பங்கள் ஒரே மன்னன் காலத்தில் தோன்றியவை என்றும், பின்னர் அவன் இறந்தவுடன் பாதியிலே நின்றுவிட்டது என்று குறிக்கின்றார். பலமேலை நாட்டு அறிஞர்கள் இக்கருத்தினைப் போற்றியுள்ளனர்.

**காஞ்சிப் பகுதியில் கலை உருவெடுத்ததற்குக் காரணம்:**

உலகே போற்றிப் பாராட்டுகின்ற மாமல்லபுரத்துச் சிற்பங்கள் எந்த சூழ்நிலையில் உருவெடுத்தன என்று ஆராயும் போது நமக்கு

உணர்ச்சி மேலிடுகிறது. சிற்பக்கலை, கட்டடக்கலை, ஓவியக்கலை இன்னும் உள்ள பலவகைக் கலைகளையும் வெளிப்படுத்த மதமும், அதனுடன் இணைந்த கோயில்களுமே சிறந்த அரங்கங்களாக இருந்திருக்கின்றன என்பது உலக வரலாற்றில் எங்கும் காணக் கூடிய ஒன்று. பல்லவ மன்னர்கள் இந்து மதத்தினையும், சமண மதத்தையும் காழ்ப்பின்றிப் போற்றி வளர்த்ததால் அவர்களது தலைநகரான காஞ்சிப் பகுதி பலவகைக் கலைகள் உருப்பெறுவதற்குக் காரணமாக அமைந்து, மேலும் கடிகை போன்றவைகள் இருந்ததால் காஞ்சி சிறந்த கல்விக் கூடமாகவும், கலாசாரம், பண்பாட்டை ஊக்குவிக்கும் இடமாகவும் விளங்கியதால் பல்வேறு துறைகளில் திறன்மிக்கோர் இங்கு கூடினர். இதன் விளைவாக இங்கு பலவிதக் கலைகளும் தோன்றி செழிப்புடன் வளர்ந்தன.

ஓரிடத்தின் கலையின் சிறப்பிற்கு அங்கு நிலவும் பொருளாதார நிலைமை பெரிதும் :காரணமாகிறது. இக்கலை தோன்றிச் சிறந்த இரு நகரங்களுமே இவ்வகையில் சிறப்பிடம் பெறுவன. ஒன்று காஞ்சி பல்லவர்களின் தலைநகர். அங்கு பொருளாதார வறட்சிக்கு இடமே இல்லை; மற்றொன்று மாமல்லை. இதுவே அடுத்த சிறப்பு நகரான துறைமுகப்பட்டினம். கடல்மல்லையின் வாணிபச் சிறப்பு பெரிது. கரையில் பெரும் அளவில் கலங்கள் இயங்கிக் கொண்டிருந்தன. இங்கு நிதியின் குவையும், களிறும், குதிரையும் நவமணிகளும் கலங்களில் செல்வதும் வருவதுமாக மிகப் பெருமிதத்துடன் வாணிபம் நடந்தேறியது. இதனை திருமங்கை மன்னர்,

''புலன்கொள் நிதிக் குவையோடு புழைக்கைமா
களிற்றினமும்
நலங்கொள் நவமணிக்குவையும் சுமந்தெங்கும்
நான்றொசிந்து
கலங்களியங்கும் மல்லை கடல்மல்லைத் தலசயனம்''

என்று பாடுகின்றார். இத்தகைய சிறப்புக்கள் இங்கு கலைகள் பிறந்து செழிக்கக் காரணமாய் இருந்தன.

பல்லவர்களும், சாளுக்கியர்களும் ஓயாத போர் செய்து கொண்டிருந்த பகைவர்கள். நரசிம்ம வர்மன் தொடங்கி இரண்டு மூன்று தலைமுறைகளாகப் போர் நடந்து கொண்டே இருந்தது. குடைவரைக் கோயில்களைதான் வெற்றி கொண்ட வாதாபியில் பார்த்தனர் பல்லவர்கள். மங்களேசன் காலத்தைச் சார்ந்த (கி.பி. 6-ஆம் நூற்றாண்டு) குடைவரைக் கோயில்களை அவர்களது தலைநகரமான வாதாபியில் காணலாம். அக்கோயில்களின் எழிலையும், கலையையும் கண்ட பல்லவ மன்னன் அது போன்று தன் நாட்

டிலும் எழில் மிகு குடவரைகளைச் செய்ய விரும்பியதில் வியப்பு இல்லை. மகேந்திரன் காலத்திலேயே முதல் முதலில் குடவரைக் கோயில்கள் அமைக்கும் முறை தமிழகத்தில் தொடங்கி விட்ட தெனினும், இராஜசிம்மன் காலத்தில் தான் (மாமல்லை) முழுதுமாக வளர்ச்சி பெற்றது. இதுவும் அவர்கள் பகுதி ஏற்றமிகு இக்கலை பரிணமிக்க ஒரு காரணமாயிற்று எனலாம்.

**பகைவனையும் ஆட்கொண்ட பல்லவர் கலையின் சிறப்பு**

முதலாம்; நரசிம்ம வர்மனுக்கும், சாளுக்கிய மன்னன் இரண் புலிகேசிக்கும் மணிமங்கலம் என்ற இடத்தில் போர் மூண்டது. இங்கு சாளுக்கிய மன்னனை வெற்றி கொண்டு அவனுடைய முதுகில் பல்லவனின் சின்னத்தைப் பொறித்து வாதாபி வரை துரத்தி அடித்து, அந்நகரை அழித்ததோடு அமையாமல் அங்கு கல்வெட்டு களையும் பொறித்துள்ளான். சாளுக்கியர்களுக்கும் பல்லவர்களுக் கும் தீராத பகை இருந்து வந்தது. சாளுக்கிய மன்னன் ஆறும் விக்கிரமாதித்தன் இரண்டாம் புலிகேசியின் தோல்வியினை கண்டு சினங்கொண்டு காஞ்சியின் மீது போர் தொடுத்தான். அப் பொழுது முதல் பரமேஸ்வரவர்மன் காஞ்சிப் பகுதியினை ஆண்டு வந்தான். விக்கிரமாதித்தன் அவனை வெற்றி கொண்டான். இந்த வெற்றி வெறியாக மாறவில்லை. கலையின் சிறப்பினையும், அழகினையும் நிமிர்ந்து பார்க்கின்றான். அவன் வெற்றி அங்கே மண்டியிடுகிறது. பல்லவ மன்னர்கள் பகைவர்களாயிற்றே; அவர் களை வெற்றி கொண்டவன் நான்தானே, எனவே அவர்கள் வடித்த கோயில்களையும், சிற்பங்களையும் வெற்றி கொள்ள வேண்டாமா என்ற எண்ணம் அவனுக்கு எழவில்லை. மாறாக பல்லவ மன்னர்கள் வளர்த்த கலை அங்கே வெற்றி பெறுகிறது. கைலாசநாதர் கோயி லுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான் என்று பார்க்கின்றபொழுது, மாமல்லனின் கலைச்சிறப்பு மேற்படுகிறது.

**காஞ்சிப் பகுதியில் கட்டிடக் கலை**

பல்லவர் கட்டிடக் கலைச் சிறப்பைக் காஞ்சி, மாமல்லை, உத்திர மேரூர் போன்ற இடங்களில் நன்கறியலாம். குடைவரைகள், ஒற்றைக் கற்றளிகள், கட்டிடக் கோயில்கள், என்று மூன்று பிரிவில் பல்லவர் கட்டிடக் கலை அமைகின்றது. கடற்கரையிலும் சரி, மலை உச்சியிலும் சரி, சமபரப்பிலும் சரி வலிவான கட்டிடக் கோயில்களை அமைப்பதற்கு பல்லவர் கால சிற்பிகள் திறன் பெற்றிருந்தனர் என்பது சிறப்பானது. பல்லவர் கால சிற்பிகளின் பெயர்கள் பல நொண்டி வீரப்பன் குதிரைத் தொட்டிக் கல்வெட்டுகளாலும்,

உத்திரமேரூர் போன்ற கோயில் கல்வெட்டுகளாலும் அறியக் கிடைக்கின்றன. இராஜராஜனும் பிற சோழர்களும் எழுப்பிய பிரமாண்டமான கோயில்களுக்கு முன்னோடியாக கட்டிடக்கோயில் களை எழுப்பியவர்கள் பல்லவர்கள்.

சோழர் காலக் கட்டிடக் கலைச் சிறப்பைத் திருவொற்றியூர், மதுராந்தகம், வேளச்சேரி, மீஞ்சூர், திருவிடந்தை, பரமேஸ்வர மங்கலம், வடதிரு முல்லைவாயில் முதலிய இடங்களில் சிறக்கக் காண்கிறோம். திருவொற்றியூரில் இராசேந்திர சோழனே தான் ஆணை பிறப்பித்துக் கோயில் எடுத்துள்ளான். தொண்டை மண்டலத்தில் பல இடங்களில் தூங்கானை மாட அமைப்புக்களைக் காண்கின்றோம்.

விஜயநகரர் காலக் கோயில்களும் தொண்டை மண்டலத்தில் காணக் கிடைக்கின்றன. வானளாவும் காஞ்சி ஏகாம்பரர் கோயில் கோபுரம் காஞ்சியை அடைவதற்கு 12 மைல்களுக்கு அப்பாலேயே காட்சி தந்து சிறப்பு செய்கின்றன. அண்மையில் விட்டலருக்கு எடுக்கப்பட்ட விட்டலாபுரம் (கோவளத்திற்கருகில்) கோயில் ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. வெளி நாட்டவரான ஆங்கிலேயர், பிரஞ்சு நாட்டவர்களது கோட்டைகளும், பிரம்மாண்டமான கட்டிடங்களும் 18, 19-ஆம் நூற்றூண்டுக் கட்டிடங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

**சிற்பக்கலை**

தொண்டை மண்டலத்தில் சிற்பக்கலையும் சிறந்து விளங்கியது. கூத்தாடுபவர்களின் சிற்பங்கள் காஞ்சி தான் தோன்றீஸ்வரர் கோயிலில் காணக் கிடைக்கின்றது. (கி. பி. 5, 6-ஆம் நூற்றூண்டு). மாமல்லையில் பாறைச் சிற்பங்களாகவும், குடைவரைச் சிற்பங்களாகவும் எழிலுடன் காணக் கிடைக்கின்றன. பல்லவர் சிற்பங்கள் எளிமையாக, பட்டையான முப்புரிநூல் உருண்டு உயர்ந்த மகுடம், சப்பையான மூக்கு, அகலமற்ற முகம் பரந்தமார்பு ஆகியவற்றுடன் விளங்குகின்றன. சோழர் காலச் சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும் இப்பகுதியில் காணப்படுகின்றன. மைலாப்பூர் சேலமொழியம்மன் கோயிலில் காணப்படும் காளியின் செப்புத் திருமேனியும் திருவொற்றியூர் தக்ஷிணாமூர்த்தி செப்புத் திருமேனியும் முதலியவை சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

விஜயநகர நாயக்கர் சிற்பங்கள் பல்வேறு கோயில்களின் மண்டபத் தூண்களில் காணக் கிடைக்கின்றன,

**ஓவியக்கலை:**

தொண்டை மண்டலப் பகுதியில் ஓவியக்கலையும் சிறந்து விளங்கி உள்ளது. காஞ்சி கைலாச நாதர் கோயில் ஓவியங்கள் சிறப்புடையவை. பனமலையில் உள்ள பார்வதியின் ஓவியம் மிகவும் எழில் வாய்ந்தது. பல்லவர் கால ஓவியங்கள் அஜந்தாவில் உள்ள ஓவியங்களையும், இலங்கையில் உள்ள சிகிரியா ஓவியங்களை விஞ்சுகின்ற வகையில் அமைந்துள்ளன.

விஜயநகர நாயக்கர் கால ஓவியங்களுக்கு எடுத்துக்காட்டாக வரதராஜ பெருமாள் கோயில் ஓவியங்கள் விளங்குகின்றன.

# காஞ்சி

## முத்து. எத்திராசன்

கச்சி என்று அழைக்கப்பட்ட காஞ்சி தொண்டை நாட்டின் தலை நகரமாகவும், பின்னர் பல்லவர்களின் தலைநகரமாகவும் இருந்தது.

காஞ்சி அன்று பெருநகரமாக இருந்தது. நகரங்களில் சிறந்தது காஞ்சி என்ற பெயர் இன்றும் அப்பெருமையில் குறையாது கலையாலும், கைவண்ணமிக்கப் பட்டுத்துகிலாலும் சிறப்புற்று விளங்குகிறது. இத்தகையப் பெருமை வாய்ந்த காஞ்சி மாநகர் பழைமையிலும் மிகப்பழமை என்னும்படி கி. பி. 640-ல் இந்தியாவிற்கு வந்த சீனயாத்திரிகன் இயூன் சுவாங்என்பவன் கூற்றுக்கு இலக்காகி இருக்கிறது. அவன் காஞ்சியைப் பற்றிக் கூறுகையில் ''புத்தர் கி. மு. 5-ஆம் நூற்றுண்டில் காஞ்சிபுரத்திற்கு வந்து சமய உண்மைகளை உரைத்தார் என்றும், அசோகன் தூபிகள் பல எடுப்பித்து பௌத்தமதக் கொள்கைகளைப் பரப்பினன்'' என்றும் கூறியுள்ளான். அடுத்து பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் சுவாமிகள் காஞ்சிபுரத்தின் பழம் பெருமையைத் திருக்குறிப்புத் தொண்ட நாயனுர் புராணத்தில் குறிப்பிடுகிருர். கரிகாலன் இமயஞ் செல்லும் பொழுது வேடன் ஒரு வனல் காஞ்சி மாநகரின் பெருமை முதலியவற்றை!நன்கு அறிந்து அந்நகரத்தைத் தனதாக்கி, அதனை நான்கு காத தூரம் சுற்றெல்லை உடையதாக விரிவுபடுத்திக் குன்று போன்று மதிலை எழுப்பிப் பல மக்களை குடியேற்றினன் என்பதனை,

''என்றும் உள்ள இந் நகர்கலி யுகத்தில்
இலங்கும்வேற் கரிகாற்பெரு வளத்தோன்
வன்திறற் புலிஇமயமால் வரைமேல்
வைக்க ஏகுவோன் தனகிதன் வளமை
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருந்து காதநான் குட்பட வகுத்துக்
குன்றுபோலுமா மதில்புடை போக்கிக்
குடியிருத்தின கொள்கையின் விளங்கும்'',

என்ற பாடல் மூலமும் நமக்குக் கூறுகின்ருர். மேலும். இக்கரிகாலன், சாத்தன் அருளால் காஞ்சியில் செண்டு பெற்ருன் என்ப

தையும் அச்செண்டுகொண்டு இமயத்தைச் செண்டால் அடித்தான் என்பதனையும்,

கச்சி வளைக்கைச்சி காமக்கோட்டங் காவல்
மெச்சி யினிதிருக்கு மெய்சாத்தான் —கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
செம்பொற் கிரிதிரித்த செண்டு'' எனவரும் சிலப்பதிகாரம்

இந்திரவிழவூர் எடுத்தகாதை உரை மேற்கோளினுல் அறிய முடிகிறது.

கரிகாற்சோழனது ஆட்சிகாலம் கி. மு. 60 முதல் கி. மு. 2'ல்க்கு உட்பட்டதாக இருக்கலாம் என்பர் ஆராய்ச்சியாளர்.

சங்க இலக்கியமான பத்துப்பாட்டில் ஒன்ருன பெரும்பாணுற்றுப் படையில் காஞ்சிமா நகரம் திருமாலின் திருவுந்தியாகிய நான்முகனைப் பெற்ற பல இதழ்களையுடைய தாமரைப் பொகுட்டினைப் போன்று இருந்தது கச்சி' எனக் கூறுகிறது. இவ்வாறே திருமாலின் திருவுந்தித் தாமரையை மதுரை நகரத்திற்கு உவமையாக எடுத்துக் கூறுவதை,

''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை
பூவொடு புரையும் சீரூர் பூவின்
இதழகத் தனைய தெருவம் இதழகத்து
அரும்பொகுட் டனையதே அண்ணல் கோயில்''

என பரிபாடல் மூலம் அறிகிறேம்.

'மலர்தலை யுலகத்துள்ளும் பலர்தொழ
விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்'—என்று

பெரும்பாணுற்று வரிகள் அந்நகரத்தைச் சிறப்பித்துக் கூறும் பொழுது 'அந்நகர் உலகத்திலுள்ள எல்லா நகரங்களிலும் சிறந்ததாகப் பலரும் போற்றும்படியாக இருந்துள்ளது என்பதைக் காண்கின்றேம்.

'நகரே ஷு காஞ்சி'—என்ற வடமொழி வழக்கு இ-
உறுதிப்படுத்தும்.

மேலும், மணிமேகலையில் கா- ...றனை நன்கு
செய்தியைக் கச்சிமாநகர் புக்க
காதையில்தான் முதலில் கா- ...சிபுரத்தினைப் பற்றிய
மாநகர்' என்ற வரிய- காதையில் அறிகிறேம். இக்
நான்காவது வரி- ...சியை 'கச்சி'என்று 'பூங்கொடி கச்சி
என்ற வரியி- ...ல் குறிப்பிட்டபின் அதனை அடுத்துள்ள
'பொன்னெயிற் காஞ்சி'
...யில் 'காஞ்சி'யென
...ர மூலம் குறிப்பிடுகிறது. இதே போன்று,

கலிங்கத்துப் பரணியில் கருணாகரனை நோக்கிப் பேய்கள் புகழ்ந்து பாடினவாகக் கூறப்படும் 'மல்லையும் கச்சியும் பாடீரே' என்ற வரி, 'கச்சி' என காஞ்சியைக் கூறிப் பின், 'காளிக்குக் கூளி கூறியது' என்ற பகுதியில் உள்ள வரி 'காஞ்சனம்பொழி காஞ்சி', எனக் காஞ்சியை 'காஞ்சி' எனக் கூறுகிறது. இவற்றின் மூலம் நாம் இன்று வழங்கிவரும் காஞ்சிநகரத்தின் பெயரை நம் முன்னோர் 'கச்சி' என்றும் அழைத்தனர் எனக் கருதல் வேண்டும்.

இவ்வாறே தண்டியலங்காரம் என்னும் நூலில் மேற்கோள் பாடல்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் சில காஞ்சியைப் பற்றிக் கூறும் பாடல்களாகும். அப்பாடல்கள் பெரும்பாலும் 'கச்சி' என்றே காஞ்சியை அழைக்கின்றன.

'பொற்றேரான் கச்சி
மலிதேரான் கச்சி
மண்டூர் மதிற்கச்சி
கருவார் கச்சி
ஆனேற்றான் கச்சி'

ஆனால், ஒரு பாடல் மாத்திரம் 'வண்மைசால் சான்ற வருங் காஞ்சி வளம்பதி' என காஞ்சியைக் 'காஞ்சி' என்றே குறிப்பிடுகிறது. இஃதே போன்று 'யாப்பருங் கலக் காரிகை' (விருத்தி) நூலுள் வரும் மேற்கோள் பாடல்கள் காஞ்சியைப் பற்றிக் கூறுவன எல்லாம் காஞ்சியை 'கச்சி' என்றும், 'காஞ்சி' என்றும் குறிப்பிடுகின்றன. இவ்வாறே பல்லவர் மரபில் வந்தவனான பல்லவ மன்னன் மூன்றாம் நந்திவர்மனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்துப் பாடப் பட்ட நந்திக் கலம்பகமும் காஞ்சியைக் 'கச்சி', 'காஞ்சி' என்றே குறிப்பிடுகின்றன.

பிற்காலச் சோழர் காலத்தில் இயற்றப்பட்ட பெரியபுராணம் காஞ்சியைத் 'திண்காஞ்சி நகர்' என்றே குறிப்பிடுகிறது. பிற்காலத்தில் திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர் இயற்றிய காஞ்சிப் புராணம் என்னும் நூலும், திருக்கச்சிக்கச்சாலை தேசிகர் இயற்றிய 'காஞ்சிப் புராணம்' என்னும் நூலும் காஞ்சியைக் 'காஞ்சி' என்றே அழைப்பதனைக் காணலாம்.

பெயர்க் காரணம்:-

''க + அஞ்சி—காஞ்சி எனப் பிரித்து, க-பிரமம், அஞ்சி-உஞ்சித்தல் எனவே, பிரம தேவனால் விரும்பிப் பூசித்துப் பேறு பெற்ற தலம் எனப் பொருள்படும் என்றும், க—தலைமை, காஞ்சி —பேரின்பதம் தருவது என்றும், நிலமகட்குக் காஞ்சி என்னும்

உந்தித்தானத்தை ஒத்தது என்றும் காரணப் பொருள் கூறுவதும் உண்டு'', எனக் கூறுவர். இவையெல்லாம் பொருந்தாத கூற்றுகளாகவே கொள்ளவேண்டும். காரணம், 'கச்சி' என்றே காஞ்சியை பெரும்பாணாற்றுப் படை போன்ற சங்க இலக்கியங்கள் நமக்கு எடுத்துக் கூறுகின்றன. 'கச்சி' என்ற பெயர் எப்படி இந் நகர்க்கு வந்திருக்கவேண்டும் என்று சற்று ஆராய்வோமானல் நமக்கு முதலில் ஒலிப்பது 'கச்சி' என்ற சொல்லாகும்.

'கட்சி' என்ற சொல்லும், 'கச்சி' என்ற சொல்லும் ஒலிப்பில் சிறுமாற்றமே ஒழிய வேறொன்றுமில்லை. 'க' விற்கும், 'சி'க்கும் இடையில் 'டகர' ஒற்றும் 'சகர' ஒற்றுமே மாற்றம். ஒலியமைப்பில் சிறிது வேறுபட்டுள்ளதால் ஒலிப்பவர் வாயில் 'கட்சி' என்ற சொல் 'கச்சி' என்றே வழங்கப்பட்டுவிட்டது. இப்பொழுது 'கட்சி' என்ற சொல்லுக்குப் பொருள் காண்போமானல், அது காட்டில் மயில் வாழ்கின்ற பகுதியைக் குறிப்பது எனலாம். 'கட்சி' என்ற சொல்லுக்கு காடு, கூடு, புகலிடம், சேக்கை, ஒதுக்கிடம் என்று பல பொருட்களைக் கூறுவர். சங்க இலக்கியங்களை 'நோக்குவோமானல் பெரும்பாலும் மயில்கள் வாழ்கின்ற காட்டுப் பகுதியைக் குறிப்பிடக் 'கட்சி' என்ற சொல்லைக் குறிப்பிட்டனர் என்பதனை பின்வரும் எடுத்துக் காட்டுகள் நமக்குத் தெளிவாக்குகின்றன.

''வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா'' — (நற்றிணை —13)

''சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதின்
கானமஞ்ஞை கட்சி சேர்க்கும்
கல்லகத் ததுஎம் ஊரே'' —(நற்றிணை — 276)

நனவுறு கட்சியின் நன்மயில் ஆல
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்'' - (அகம் —392)

மணிவரைக் கட்சி மடமயிலாலு நம்
மலர்ந்த வள்ளியங் கானம்'' – (ஐங்குறு 250)

உச்சி நின்ற வுவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலி'' —(புறநானூ 60)

ஆகவே, இன்றுள்ள காஞ்சி மாநகரம், காடுகொன்று நாடாக்கி வளம்படுத்தியதற்கு முன் மயில்கள் வாழ்ந்த அழகிய காடாக இருந்திருத்தல் கூடும். ஏனெனில் நிலமுழுதும் ஒரு காலத்தில் காடாக வல்லவோ இருந்தன. அவ்வாறு மயில்கள் வாழ்ந்த இடங்கள்

ஊராகத் திரியும்போது அவை அம்மயில்களின் பெயராலேயே அழைக்கப்படுவதை மயிலாப்பூர், மயிலம், மயிலாடுந்துறை, மயிலாடும் பாறை போன்ற ஊர்கள் இன்றும் இருப்பதிலிருந்து நாம் அறிகின்ரேம்.

மேலும், இதை நினைவுபடுத்துவதற்காக வேண்டிதானே என்னவோ அந்நகரத்தை அமைத்தவர்கள் அதனை மயில் வடிவாக அமைத்திருந்தனர் என்பதனை பெயர் அறியாதப் புலவர் பாடிச் சென்ற பாடல் மூலம் தெளிவாக நாம் அறிகின்ரேம். அப்புலவர் பாடிய பாடல் தண்டியலங்கார நூலில் மேற்கோள் பாடலாக நமக்குக் கிடைத்திருக்கிறது. அப்பாடல் வருமாறு,

''ஏரியிரண்டும் சிறகா வெயில் வயிருக
காருடைய பீலி கடிகாவா —நீர்வண்ணன்
அத்தியூர் வாயா வணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு''

இவற்றையெல்லாம் நோக்குங்கால் மயில் வாழ்ந்த இடத்தில் அமைந்த நகரத்தை 'கட்சி' என்ற சொல்லால் அழைக்க அது ஒலி மயக்கத்தால் 'கச்சி' என்று கற்ருேர் முதல் கல்லாதார் வரை அழைக்கப்பட்டு நாளடைவில் வடமொழியாளர் :(சமஸ்கிருதம்) வாயில் 'காஞ்சி' என மருவி இன்று அந்நகரம் காஞ்சி என்று எல்லோரும் அழைக்கும்படியாய் ஆயிற்று. எடுத்துக்காட்டாக, 'மயிலாடுந்துறை' என்ற ஊர்ப் பெயர் வடமொழியாளரால் 'மயூரம்' என்று அழைக்கப்பட்டு, இன்று 'மாயவரமாக'க் காட்சி அளிப்பது போலாம். இவ்வழக்கு 'மணிமேகலை' நூல் எழுந்த காலத்தே வழங்கத் தலைப்பட்டு விட்டதை அந்நூலின் மூலம் நாம் காணலாம்.

இனி, 'கச்சி' எனக்கொண்டு பொருள் காண்போமானல் அது ஆடவர்கள் இடுப்பில் அணியும் துணி. அதாவது ஆடை நெகிழாமல் இருப்பதற்காக வேண்டி கட்டப்பட்ட துணியின் பெயராகும் எனலாம். அல்லது பெண்கள் மார்பில் அணியும் இரவிக்கை போன்ற ஆடையும் எனலாம்.

காஞ்சி, திருவேங்கிடம் முதல் தெற்கே குமரிமுனை வரை இருந்த தமிழ்ப் பகுதிக்குக் கச்சி போன்று அமைந்திருந்தது எனப் பொருள் கொள்ளினும் அமையும். இந்தப் பொருளில் ஒரு புலவர் 'கச்சி' என்ற நகரைக் குறிப்பிட்டு, 'கச்சி' என்ற சொல்லால் சொல் விளையாட்டுப் புரிந்துள்ளமையைக் காண்போம்.

கச்சிக்கு அரங்கன் மனுநீதி வேந்தன்
கனவரைப் மேல்
கச்சிக்கு சொல்லி முலை பூணுமோ
சிறுகையில் அள

கச்சிக்கு வாரி முடித்திடுமோ இன்று காளை பின்னே
கச்சிக்கு எனச் சென்று இராமேசுவரம் கண்ட
காட்சி நன்றே (தனிப்பாடல் திரட்டு கழகவெளியீடு)

'கச்சி' என்ற சொல் திரிந்து 'காஞ்சி' யாக வழங்கப்பட்டபோது அதன் பொருள் 'மேகலாபரணம்' போன்று அந்நகர் வீற்றிருந்தது. அதனால் அப்பெயர் ஏற்பட்டது என்றும் பொருள் கொள்வர். சேக்கிழார் சுவாமிகள் இக்கருத்தினரே. அவர் தாம் இயற்றிய பெரிய புராணத்தில்,

தண்காஞ்சி மென்சினைப் பூங் கொம்பராடல்
சார்ந்தசைய அதன்மருங்கு சுரும்பு தாழ்ந்து
பண்காஞ்சி இசைபாடும் பழன்வேலிப்
பணைமருதம் புடையயுடைத்தாய்ப் பாரில் நீடும்
திண்காஞ்சி நகர் நொச்சி இஞ்சி சூழ்ந்த
செழுங்கிடங்கு திருமறைகள் ஒலிக்குந் தெய்வ
வண்காஞ்சி அல்குல்மலை வல்லி காக்க
வளர் கருணைக் கடலுலகஞ்சூழ்ந்தால் மானும்

என்று குறிப்பிடுகிறார்.

# மேலூர் கோவிலும் கல்வெட்டுக்களும்

வி. ரங்கனாதன்

''தொண்டை நாடு சான்றோருடைத்து'' என்ற முதுமொழியுடன் சோழ மண்டலத்திற்கு இணையாக எண்ணிலடங்காத்திருக் கோயில்களையும் தன்னகத்தே கொண்டது. தமிழகத்தில் பல் வேறு மன்னர்கள் ஆட்சி செய்தபோது தோன்றிய கோயில்கள் அம்மன்னர்களின் பக்தியையும் பண்பாட்டையும் பறைசாற்றும் சான்றுகளாக அமைந்தன. கல்வெட்டுகள் சரித்திரம் பேசுகின்றன. அத்தகைய கல்வெட்டுகள் சில ''மேலூர்'' என்ற இடத்தில் காணப்படுகின்றன. அதனை ஈண்டு காண்போம்.

தமிழ் நாட்டின் தலைநகரிலிருந்து 25 கல் வடக்கே, வடகாஞ்சி எனப் பெயர்பெற்ற மீஞ்சூர் என்ற திருத்தலம் அமைந்துள்ளது. அங்கிருந்து 3 கல் தெற்கே மேலூர் என்ற கிராமம் காணப்படுகிறது. அங்கு எழுந்தருளியிருக்கும் திரு உடையம்மன், திருமணங்கீஸ்வரர் ஆலயத்தில் காணப்படும் கல்வெட்டுகள் கோவிலின் புராதனப் பெருமையைப் பறைசாற்றுவதாக அமைந்துள்ளன.

இவ்வூர் வல்லூர் கிராமத்தைச் சேர்ந்தது. கல்வெட்டுக் காலத்தில் இது வல்லூர் என்றே அழைக்கப்பட்டது. இங்குள்ள திருக் கோவில் திருமணங்கர் உடையார்கோவில் என அழைக்கப் பட்டது. ஆகவே திருக்கோவில் உள்ள பகுதிக்குத் ''திருமணங்கா'' என்ற பெயர் முதன் முதலில் அமைந்திருக்க வேண்டும். ''கா'' எழுத்தில் முடியும் ஊர்கள் தமிழகத்தில் இருந்ததுண்டு. ''குரங்குக்கா'' என்ற தலம் சோழ நாட்டில் இருக்கிறது. இத்தலம் ''திருமணங்கா'' என்று வழங்கப்பெற்றிருக்கவேண்டும். கலியுகம் 4817 ஆம் ஆண்டில் (கி. பி. 1715ல்) பொறிக்கப்பட்ட கல்வெட்டில் இவ்வூர் மேலையூர், என்றும் இக்கோவில் திருமணங்கீஸ்வரம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. தற்போது மேலூர் என்றும் திருமணங்கீஸ்வரம் என்றும் வழங்கப்படுகிறது.

இத்திருக்கோவில் மிகப் பழமையானது, இதற்குத் தனிப் பட்டப் புராணமில்லை. முன்னர் கிழக்கே கடலும், தெற்கே திருவொற்றியூரும், மேற்கே குசத்தலை நதியும், வடக்கே திருவெள்ளையலும் எல்லையாக இருந்திருக்கிறது. இவ்வாலயத்தில் ஏழு கல் வெட்டுக்கள் உள்ளன. இவற்றுள் ஐந்து கி. பி. 1250 முதல் 1292க்கு இறுதியாக உள்ள ஆண்டுகளுக்குட்பட்டதாக இருக்க

வேண்டும். இவற்றுள் ஒன்று கி. பி. 1266 ஆம் ஆண்டில் பாண்டிய நாட்டு அரசனை சுந்தரபாண்டியத்தேவர் (கி. பி. 1251—கி. பி. 1272) காலத்தது. இத்திருக்கோவிலுக்கு எழுந்தருளி தரிசனம் செய்து கோயிலின் சீர்கேடான நிலையைக் குறித்து மனம் வருந்தித் திருப்பணிக்குப் பொருள் கொடுத்தமையை அறிவிக்கின்றது.

மற்ற நான்கும் இப்பாண்டி மன்னன் ஆணைக்குட்பட்டிருந்த ஜெயங்கொண்ட சோழ மண்டலம் என பெயர் பெற்று விளங்கிய தொண்டை நன்னாட்டிற்கு அரசப் பிரதிநிதியாக இருந்த விஜய கண்ட கோபால தேவர் (கி. பி. 1250-கி. பி. 1252) காலத்தவை. இவர் இங்கு அமைந்திருந்த திருப்பாலைவன உடையார் திருவுருவத்தின் வழிப்பாட்டிற்கு நூறு பொற்காசுகள் அளித்தார்.

பாண்டி மன்னர்களுக்குப் பிறகு பாண்டிய நாட்டை ஆண்டு வந்த நாயக்கர் பரம்பரையில் ''இராசகாவிதா'' நாயகருடைய விசேஷ குணங்களைப் பாராட்டி அவாது பிரதிநிதியாயிருந்த திருமலை நாயக்கர் முயற்சியால் இவ்வூரில் உள்ளோரும் அடுத்துள்ளோரும் திருக்கோவிலில் பல சிறப்பு விழாக்கள் செய்வதாக இசைந்தனர் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது.

மற்றொரு கல்வெட்டு ஜெயங்கொண்ட சோழமண்டலமாகிய தொண்டை நாட்டில் விக்கிரம சோழவளநாடு என்னும் புழல் கோட்டத்துள் ஞாயிறு நாட்டில் விளங்கும் வல்லூர் கிராமத்துள் திருமணங்கா உள்ளது எனக் குறிக்கின்றது.

கி. பி. 1715ல் வெட்டப்பட்ட கல்வெட்டு ''பெரியபாளையத்தில் கண்ணந்தை மகரிஷி கோத்திரத்து ஒரு வணிகப்பெருமகனால் யாகசாலையும் மடைப்பள்ளியும் கட்டப்பட்டன'' எனத் தெரிவிக்கின்றது.

வருடந்தோறும் ஆடி, தை மாதங்களில் பௌர்ணமி கூடிய வெள்ளிக்கிழமையில் மூன்று அம்மன் தரிசனத்திற்கு உட்பட்டத் தலங்களுள் இது தலையாயது. மற்ற இரு தலங்கள் திருவொற்றியூரும், வடதிருமுல்லைவாயிலுமாகும். மேலூரில் திருஉடையம்மன், திருவொற்றியூரில் கொடியுடையம்மன் ஆகியவற்றை அன்பர்கள் தரிசிப்பர். இம்மூன்று அம்மன் சிலைகளும் ஒரே சிற்பியால் செதுக்கப்பட்டதாகச் செவி வழிச் செய்தி கூறுகிறது.

ஆதியில் செங்கல்லாலான கோவில் திகழ்ந்தது. பின்னர் சோழர் காலத்தில் கற்றளி எடுக்கப்பட்டது. ஆனால் சோழர்களால் கட்டப்பட்டது அல்ல. சதுராகாரமாக திருப்பணி செய்யப்பட்டது. இத்திருப்பணிக்குப் பின்னும் சுதைக்கட்டடம் முன்னர்

விருத்தி செய்யப்பட்டு வாயில் அமைத்து, விநாயகர், மயிலுடன் கூடிய பாலசுப்பிரமணியர் திருவுருவங்கள் பிரதிஷ்டை செய்யப் பட்டன. மூலத்தான மாடங்களில் விநயகர், தட்சிணமூர்த்தி, விஷ்ணு மூர்த்தி, பிரம்மா, துர்க்கை உருவங்கள் அமைந்துள்ளன. தட்சிணமூர்த்தியின் உருவம் மிகப்பெரியது. கம்பீரமானது. பிரம்மாவின் உருவம் மிக சுந்தரமானது. சுற்றியுள்ள பிரகாரத்தில் விநாயகர், அப்பர், சுந்தரர், சம்பந்தர், சூரியர் கிழக்கிலும், நான்கு தோளுடன் கூடிய வீரபத்திரர், நின்ற விநாயகர் தெற்கிலும், விநாயகர், நாகர், காசி விஸ்வநாதர், விசாலாட்சி, திருக்காளத்தி நாதர், பூங்கோதை, முருகன், இலக்குமி மேற்கிலும் 25 ஆண்டு களுக்கு முன் பிரதிஷ்டை செய்த சண்டேஸ்வரர், மஹாலிங்கம், நந்தி, பைரவர் வடக்கிலும் உள்ளன.

மேற்குப் பிரகாரத்தில் ஒரு சுரங்கம் தென்படுகிறது. இது செங்கல்லாலான ஒரு அறையாகும். இதற்கு யாதொரு வாயிலு மில்லை. இருந்து கருங்கல்லால் அடைக்கப்பட்டிருக்க வேண்டும். இது ஓர் சைவப் பெரியார் யோகப் பயிற்சிக்கு அமைத்துக் கொண்ட இடம்போல் காணப்படுகிறது. அவரைப் பற்றி அறிந் தாரில்லை.

கர்ப்பக் கிரகத்துள் மேலாக ஒரு மச்சுக் காணப்படுகிறது. அங்கு செல்வதற்கு ஒரு சிறு வழியுண்டு. இறைவனது மூலலிங்கம் சதுராகாரமானது. பீடத்தின் மேலுள்ளது. அவரது திருமேனி செப்புக் கலசத்தால் மூடப்பட்டுள்ளது. தானே தோன்றிய சுயம்பு மூர்த்தியாக விளங்குகிறார். ஆதியில் புற்று வடிவாக இருந்தார் என்றும் அங்கு பசுக்கள் தாமே பால் பொழிந்தன வென்றும், கரவாப் பசுக்களும், தாமே பால் சொரிவதைக் கண்ணுற்ற அன்பர் கள் இங்கு யாதோ விசேடமுண்டு என்று மண்ணைப் பறித்து இத் திரு உருவம் கண்டனர் என்றும் சிதையாதிருக்கும் பொருட்டுக் கவசம் செய்தனர் என்றும் கர்ண பரம்பரைச் செய்திகள் கூறு கின்றன. இவற்றின் சேடமான புற்று திருஉடை நாச்சியார் சன்னதியில் இன்றும் இருக்கக் காண்கிறோம்.

மூலத் தானத்தைச் சேர்ந்த இரண்டு துவாரபாலகர்களும், வெளியே இரு துவாரபாலகர்களும் இருக்கின்றனர். மூலத்தானக் கோவிலைச் சேர்ந்த இருபத்தி நான்கு தம்பங்கள் கொண்ட மண் டபமும் உண்டு. இதில் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஒரு தூணில் மூன்று விலங்குகள் ஒரே விலங்கு போல் செதுக்கப் பட்டுள்ளது.

# கல்வெட்டில் காஞ்சி நூலகம்

சி. எம். கணபதி

பரந்த இப்பாரத கண்டத்தில் பண்டைக் காலந் தொட்டே, பற்பல பல்கலைக் கழகங்களும் சுவடிச் சாலைகளும் குருகுல வாசங்களும் பெருமளவில் இருந்து வந்தன என்பதற்கு இலக்கியச் சான்றுகளும் வரலாற்றுச் சான்றுகளும் கல்வெட்டு சான்றுகளும் ஏராளம் உள. பல்கலைக் கழகங்கள் மட்டுமன்றி சொல்வல்ல புலவர்களும் இருந்தனர்.

வட இந்தியாவிலே, நாலந்தா, விக்ரமசிலா, பாடலிபுத்திரம், தாமிரலிப்தி போன்ற நகரங்களில் பண்டைக் காலத்தில் மிகப் பெரிய பல்கலைக் கழங்களும் அவைகளோடு கூடவே நூலகங்களும் இருந்தனவென்று கி. பி. ஏழாம் நூற்றுண்டில் இந்தியாவிற்கு வந்த சீன யாத்ரிகர் யுவான் சுவாங் தனது வரலாற்று நூலிலே வடித்துள்ளார். தென்னிந்தியாவைப் பற்றிக் குறிப்பிடுகின்ற போது, குறிப்பாகக் காஞ்சியைப் பற்றியும் அங்குள்ள கல்விக் கழகம், நூலகம் முதலியன பற்றியும் மட்டும் ஓரிரு வரிகளில் சுருக்கமாகக் கூறியுள்ளார்.

ஆயினும், வட இந்தியாவைப் போன்று தென் இந்தியாவிலும் பல இடங்களில் பற்பல கல்விக் கழகங்களும், சுவடிச் சாலைகளும் இருந்தன என்பதை இங்கேயுள்ள கல்வெட்டுக்கள் நமக்கு எடுத்தியம்புகின்றன.

தமிழ்நாட்டில், திருச்சி மாவட்டத்தில் ஸ்ரீரங்கத்திலும், தென் ஆற்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திலும், நெல்லை மாவட்டத்தில் சேரன்மாதேவியிலும், செங்கை மாமட்டத்தில் காஞ்சியிலும், ஆந்திர மாநிலத்தில் நாகவாரி அக்ரகாரம் என்னுமிடத்திலும், மைசூர் மாநிலத்தில் சிருங்கேரியிலும் பண்டையக் கல்விச் சாலைகளும் நூலகங்களும் இருந்தன என்பதை கி. பி. 11, 12, 13, 14-ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டுக்கள் நமக்கு எடுத்தியம்புகின்றன. ஆனுல் கி. பி. 11-ஆம் நூற்றுண்டிற்கு முன்னர் தென்னிந்தியாவில் தொன்மையான நூலகங்கள் எதுவும் இருந்ததாகக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை.

ஆந்திர மாநிலத்தில் ஹைதராபாத்திற்கு அருகிலுள்ள நாகவாரி அக்ரகாரம் (நாகை) என்னுமிடத்தில் இருந்த நூலகத்தைப்

பற்றி கி. பி. 1058 ஆம் ஆண்டைச் சேர்ந்த திரிலோகிய 'மல்லனின் செப்புப் பட்டயம் நமக்குக் கூறுகின்றது.[1] தென்னிந்தியாவிலுள்ள பண்டைய நூலகங்களைப் பற்றிக் கூறும் கல்வெட்டுகளில் இதுவே மிகவும் பழமையானதும் முதன்மையானதுமாகக் கருதப்படுகிறது. அடுத்து தமிழ்நாட்டில் திருச்சி மாவட்டத்தில் சீரங்கத்தில் உள்ள அரங்கநாதர் ஆலயத்தில் பண்டைய சுவடிச் சாலையொன்று இருந்த தாக அக்கோயிலின் 13-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டி லிருந்து தெரிய வருகிறது.[2] மற்றும் நெல்லை மாவட்டத்தில் சேரன் மாதேவியிலுள்ள திரௌபதி அம்மன் ஆலயத்தில் தொன்மையான நூலகமொன்று இருந்ததாக அக்கோயிலுள்ள 13-ஆம் நூற்றுண் டைச் சேர்ந்த பாண்டியர் கல்வெட்டுக் கூறுகிறது.[3] அடுத்து, தென்னுற்காடு மாவட்டத்தில் தில்லைச்சிற்றம்பலவன் திருக்கோயி லிலும் பழம்பெரும் சுவடிச் சாலையொன்று இருந்ததாக இவ்வால யத்தில் உள்ள 13-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த பாண்டியர் கல்வெட் டினுல் தெரியக் கிடைக்கின்றன.[4] மேலும் செங்கை மாவட்டத்தில் காஞ்சி வரதராசப் பெருமாள் கோவிலிலுள்ள 13 ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டொன்றும் அக்கோயில் மடத்தில் ஒரு பழமையான நூலகம் இருந்த செய்தியைக் கூறுகிறது.[5]

இறுதியாக (விஜய நகர மன்னர்கனின் ஆட்சிக் காலத்தில்) மைசூர் மாநிலத்தில் சிருங்கேரியில் உள்ள சங்கரர் மடத்தில் பண்டை நூலகம் ஒன்று இருந்ததாக அங்குள்ள ஆவணங்கள் பகர் கின்றன.[6] மேற்கூறிய தென்னிந்தியப் பண்டை நூலகங்கள் அனைத்திலும் காஞ்சியிலிருந்த நூலகத்தினைப் பற்றி ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கமெனலாம்.

கல்வெட்டுக்கள் பண்டைய நூலகங்களை சரஸ்வதி பண்டாரம்' என்றும் 'புஸ்தக பண்டாரம்' என்றும் குறிப்பிடுகின்றன, இதில் 'பண்டாரம்' என்பது 'கருவூலம்' என்ற பொருள்பட அமைந் துள்ளது.

எனவே சரஸ்வதி பண்டாரம் என்ற தொடர் கல்விக் கடவு ளான கலைமகள் உறைவிடம். அதாவது 4 நூற்கள் உறைகின்ற இடம் என்ற பொருள் படவும், புஸ்தகபண்டாரம், என்ற தொடர் இன்று நாம் கூறி வருகின்ற நூலகம்-நூல்நிலையம் என்ற பொருள் படவும் அமைந்துள்ளது கண்டு இன்புறத் தக்கதெனலாம்.

சங்க இலக்கியங்களோ அல்லது அதே காலத்திய மற்றைய இலக்கியங்களோ அன்றைய தமிழகத்தின் கல்வி நிலை குறித்து யாதொன்றும் பகரவில்லை. ஆனல் சங்க இலக்கியங்களான் நாலடி யாரிலும், ஏலாதியிலும் எழுத்தோலை, எழுத்தாணி, புத்தகம் என்ற சொற்கள் காணக்கிடைக்கின்றன.

கல்லென்று தந்தை கழற அதனையோர்
சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்-மெல்ல
எழுத்தோலை பல்லார் முன் நீட்ட விளியா
வழுக்கோலை கொண்டு விடும் (253)

என்ற நாலடியாரில் வரும் இப்பாடலில் எழுத்தோலை என்ற சொல் வந்துள்ளதைக் காணலாம்.

ஊனுேடு கறை எழுத்தாணி புத்தகம்
பேனுேடு மெண்ணு மெழுத்திவை-மானுேடு
கேட்டெழுதி ரேயதி வாழ் வார்க்கியந்தர் ரிம்மையான்
வேட்டெழுத வாழ்வார் விரிந்து (62)

என்ற ஏலாதிப் பாடலிலும் எழுத்தாணி புத்தகம் என்ற சொற்கள் வந்துள்ளதைக் காணலாம். இவ்வாறு எழுத்தாணி, எழுத்தோலை, புத்தகம் என்ற சொற்கள் மட்டும் காண்கின்றனவேயொழிய இந்த எழுத்தோலைகள், அல்லது இந்தப் புத்தகங்கள், எங்கோ தனியொரு புலவரிடமோ அல்லது பொது இடத்திலோ சேகரித்து வைக்கப்பட்டு பாதுகாப்பாகப் பராமரித்து வரப்பட்டது என்பதற்கு எந்தவிதமான இலக்கியச் சான்றும் கிட்டவில்லை. இன்னும் சங்க காலத்தில் கல்வி பெரும்பாலும் கற்று வல்ல புலவர்களாலேயே கற்பிக்கப்பட்டிருக்க வேண்டும்மென்றும் மேலும் இப்புலவர்கள் ஒரே இடத்தில் தங்காது இடம் விட்டு இடம் பெயர்ந்து சென்று நாடு தோறும் நற்கல்வி புகட்டி வந்திருக்கவேண்டுமென்றும் யூகிக்க இடமுண்டு. இவ்வாறு இடம் பெயர்ந்து செல்கின்ற போது புலவர்கள் தங்களிடமுள்ள ஓலைச் சுவடிகளையும் உடன் எடுத்துக் சென்றிருக்கவேண்டுமென்பதும் அவ்வாறு எடுத்துச் செல்லப்பட்ட சுவடிகள் நாளடைவில் ஒழுங்கான பராமரிப்பின்றி சிதைந்தோ அழிந்தோ போயிருக்கலாமெனவும் எண்ண இடமுண்டு. எனவே, மேற்கூறிய இலக்கியச் சான்றுகள் சிலவற்றை நோக்குகின்றபோது சங்காலத்தமிழகத்திலும்சிறுசிறு அளவிலாவது சுவடிச்சாலைகள்-நூலகங்கள் இருந்திருக்கவேண்டுமென எண்ண இடமுண்டு.

கிறிஸ்து பிறப்பதற்கு 500 ஆண்டுகட்கு முன்னரே தோன்றி பழமை மிக்க வரலாறு படைத்த பெரு நகரம் இப்பல்லவர்கள் காஞ்சி. ஆண்டுகள் தோறும் ஆளும் மரபினர் மாறிய போதிலும் தலை முறை தலை முறையாக இது தலைநகரமாகவே இருந்து வந்தது. இன்றும் மாவட்டத்தின் தலைநகராக இருந்து வருகிறது. இதன் காரணமாக கல்விக்கும், கலைக்கும் இன்றளவும் இந்நகரம் நிலைக்களனாக இருந்து வருகிறது. வானளாவிய

கோபுரங்களும். எழில்மிக்க கோயில்களும் காணுமிடம் எங்கும் கவினுறு காட்சி நல்குகின்றன.

பக்தியிலும் முக்தியிலும் பண்டு தொட்டு இன்று வரை சிறந்து விளங்குவது இப்பல்லவர் காஞ்சி. இந்தியாவில் உள்ள ஏனைய வரலாற்றுப் புகழ்பெற்ற நகரங்களில் ஏதாவதொரு மதமே ஏற்றம் பெற்றிருக்க, இப்பல்லவர் காஞ்சியில் மட்டும் எல்லா மதமும் செல்வாக்குப் பெற்றிருந்த செய்தி தெள்ளத் தெளிவாகத் தெரியக் கிடக்கின்றது. பல்லவர் காஞ்சியின் பண்டைய சிறப்புக்கள் இன்னும் பல எனலாம். காஞ்சியிலே அசோகன் எழுப்பிய ஸ்தூபியினை யுவான்சுவாங் குறிப்பிட்டுள்ளார். காசி, வாதாபி, தக்காணம், நாலந்தா போன்று காஞ்சியும் புகழ்மிக்க பல்கலைக் கழகமாக விளங்கி வந்துள்ளது.

வடசொல்லுக்கும் தென் சொல்லுக்கும் வரம்பாய் விளங்கும் காஞ்சி என்ற கருத்துப் படக் காஞ்சிப்புராணத்தில் காஞ்சிபுரம் கூறப்பட்டுள்ளது. ஈராயிரம் ஆண்டுகளாக வடமொழிக் கல்வி இங்கு வளர்ந்து வந்திருக்கிறது. பல்லவர் காலத்தில் விந்தியப் புகழ் பெற்ற பெரியதொரு வடமொழிக் கல்லூரி-'காஞ்சிக் கடிகா' என்ற பெயரில் சிறந்து விளங்கியதாகச் செப்புப்பட்டயங்களும் கல்வெட்டுக்களும் கூறுகின்றன. ஆதிசங்கரர் காமகோடி பீடத்தைக் காஞ்சியில் நிறுவி கல்வியும் புகட்டினர் என்பர். அரசியல் அறிஞரான கௌடில்யரும், வைணவத்தத்துவங்களுக்கு விளக்கம் தந்த இராமாநுசரும் கல்வி பயின்றது காஞ்சியில்தான். ஆனந்த தீர்த்தரின் துவைத மடமும் 15 ஆம் நூற்றுண்டில் குஜராத்திலிருந்து காஞ்சிக்கு வந்த வல்லபாச்சாரியார் வழியினரும், பச்சையப்ப வள்ளலும் சேர்ந்து நிறுவிய வடமொழிக் கல்விக் கழகங்கள் இன்றும் இங்கே உள்ளன. வடமொழியில் துறை போய பெரும்புலவர்களான வேதாந்த தேசிகர் வேங்கடாத் வரி, முத்து சாமி தீட்சிதர் போன்றோர் இங்கு வாழ்ந்து வந்திருக்கின்றனர்.

கி. மு. 2-ஆம் நூற்றுண்டில் பதஞ்சலி முனிவர் இயற்றிய பதஞ்சலி மாபாடியம் காஞ்சியில் செய்யப்பட்டதாகக் கருத இடமுண்டு. மகேந்திரவர்மன் மத்தவிலாச பிரகசனம் என்ற நகைச் சுவை நாடகத்தை கி. பி. 7-ஆம் நூற்றுண்டில் இயற்றினன். ஹீன யான பௌத்த நூல்களை எழுதியதன் கராணமாக சீனுவிலும் திபேத்திலும் ஜப்பானிலும் இன்றும் பாராட்டப்படும் தின்னகர் கச்சியிலேயே கல்வி கற்றூர். புகழ் மிக்க நாலாந்தா பல்கலைக்கழகத்தின் தலைவராகவும் பேராசிரியராகவும் இருந்த தர்மபாலர் காஞ்சிபுரத்தினர் என்று வரலாறு கூறுகிறது. இவ்வாறு கல்வியில் எல்லா வகையிலும் ஏற்றம் பெற்றுள்ள பல்லவர் காஞ்சியில் கல்வியின் அங்கங்களில் ஒன்றுன நூலக அமைப்பு,

நூற்கருவூலங்கள், சுவடிச்சாலைகள் இல்லாமல் இருக்க இட-மேயில்லையெனத் தெளியலாம். எனவே, அங்ஙனம் பண்டைய சுவடிச்சாலைகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்த காஞ்சியில் 14.ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக் கூறும் ஒரு நூலகத்தினைப் பற்றிக் கீழே காண்போம்.

கல்வெட்டு

1. திருமுகப்படி. 'ஸ்வஸ்தி) ஏதத் ஸுராஸுராதீச மௌலிப் பிரபாருணம் ஸ்ரீமத் உறஸ்திகிரி சஷ்ய தேவ தேவாஷ்ய ஸாஸனம் உ. விகாரி ஸம்வத்ஸராது மேஷ ஞாயிற்று பூர்வ பாக்ஷத்துப் பிரதமையும் வெள்ளிக்கிழமையும்,

2. பெற்ற அஷ்வதி நாள் அபிஷேக மண்டபத்து வீரவல்லா என் சிம் ஹாஸனத்து அரியென வல்லான் பந்தல் கீழ் நாமும் நம் பெண்டுகளுடன் சடகோபன் பாட்டுக் கேளாநிற்க நம் வீடு கருமம் கேட்கும்,

3. பெருமாள் தாசனும் நம்பட்டர்களும் சொல்லக் கேட்டு பிரஹ்ம தந்த்ர ஜுயன் என்று நாம் பேர் குடுத்த வைஷ்ணவ தாசனுக்கு நாம் இவனுக்கு எண்டான மடமும் மடத்தை நோக்கி,

4. வரும் க்ஷேத்திரமும் ஸமாராதனமும் அதுக்கு வேண்டும் முத்துக்களும் இவன் தேடின பொஸ்தகங்களும் இதுக்கு வேண்டும் உபகரணங்களும் நம் ராமானுஜன் தர்ஷனம் நடக்கைக்கான இவனுக்கு

5. பின்பும் இவன் நியமித்த இவனுடைய சிஷ்யர்கள் பரம்பரையாக இவையிற்றைக் கைக்கொண்டு நடத்திப் போடக் கடவர்கள் ஆகவும் இவனை நம் ராமானுஜ முடையாரும் நம் சமயத்தில் உள்ளாரும் கை

6. கைக்கொண்டு நடத்திப் போடச் சொன்னோம். இச் செய்தியைக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளும் படி இவனுக்கு நாம முதிட்டபடியும் உடுத்தபடியும் பூசினபடியும் குடுத்தோம். இப்படிக்குத்

(7) திருவாய் மலர்ந்தருவினபடிக்கு கோயில்கணக்கு பேரருளாளப் பிறையன் எழுத்து உ. இத்திருமுகம் எழுதின சகாப்தம் ஆயிரத்து இருநூற்று எண்பத்து இரண்டாவது உ.

இக்கல்வெட்டு காஞ்சி வரதாராஜ சுவாமி கோயிலில் இரண்டாவது பிரகாரத்தின் வடக்குச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. தமிழ் கிரந்த எழுத்துக்களில் வடசொற்கலந்த தமிழ்மொழியில் வரையப்பட்டுள்ளது. இதில் எந்த அரசனுடைய பெயரும் குறிப்பிடப்படவில்லை.

கோயிலில் இசை நிகழ்ச்சி நடைபெறுகிறது. அதைக் காண்பதற்குத் தனது பெண்டுகளுடன் மன்னன் அங்கே வருகின்றான். அந்த இடத்தில் கோயில் பட்டர்களும் பெருமாள் பக்தர்களில் ஒருவரும் மன்னனிடம் வேண்டுகின்றனர். மன்னன் அவனால் வைஷ்ணவத் தாசன் என்று பெயர் சூட்டப்பட்ட ஒருவனுக்கு மடமும் மடம் சார்ந்த இடமும் அதில் வரும் வருமானமும் மடப் பராமரிப்புக்கு வேண்டும் பொன்னும் வழங்க ஆணையிடுகிறான். அத்துடன் அக்கோயிலில் நடக்கும், இராமாநுஜ தரிசனத்துக்கு வேண்டிய புத்தகங்களும் அவைகளை நல்ல முறையில் வைத்துப் பாதுகாப்பதற்கு வேண்டிய எல்லா உபகரணங்களும் வழங்குகின்றான். மேற்கூறிய இந்த நிர்வாகத்தினை இவன் மட்டுமின்றி இவனால் நியமிக்கப்படுகின்ற சிஷ்யர்களும் பரம்பரையாக நடத்தி வருவதற்கு வேண்டிய ஆணையும் பிறப்பிக்கப்படுகிறது. இதுவே கல்வெட்டிலுள்ள முக்கிய விவரங்களாகும்.

இதிலிருந்து நாம் அறிவது இக்கோயிலில் கோயில் திருவிழாக்களிலோ அல்லது மற்றைய பூஜைகள் நடைபெறகின்றபோதோ, இராமானுஜ தரிசனம் என்ற இசை நிகழ்ச்சி நடத்தி வந்ததாகவும் அந்த இசை நிகழ்ச்சிக்கு வேண்டிய இசை நூற்களும் அவைகளை வைத்துப் பாதுகாப்பதற்கு வேண்டிய அனைத்து உபகரணங்களும் வழங்கப்பட்ட செய்தி தெரிய வருகிறது. எனவே, இவ்வாறு அன்றே நூற்களைச் சேகரித்துப் பாதுகாத்து வந்த சாலைகள் இருந்து வந்தன எனவும் தெரிய வருகிறது.

## குறிப்புகள்

1 HAS. 8, P. 7
2 139 of 1938—39
3 695 of 1016—17
4 168 and 169 of 1961—62
5 EI., vol XXV, No 34
6 283 of 1936—37

# சென்னையும் செங்கற்பட்டும்

**'சோமலெ'**

சென்னை, செங்கற்பட்டு ஆகிய இரண்டு மாவட்டங்களும் ஒன்றோடொன்று மிகவும் இணைந்துள்ளன. சென்னை மாநகரின் வளர்ச்சியைச் செங்கற்பட்டு மாவட்டம் பெரிதும் பாதித்திருக்கிறது. இதுபோல, செங்கற்பட்டு மாவட்டத்தின் வரலாற்றையும் இன்றைய முன்னேற்றத்தையும் சென்னை மாநகர் உருவாக்கியிருக்கிறது. இவற்றை இக்கட்டுரையில் சுட்டிக் காட்டுவேன்.

சென்னை மாநகரைப் புரிந்துகொள்ளச் செங்கற்பட்டு மாவட்டத்தின் வரலாற்றை அறிவதும், செங்கற்பட்டு மாவட்டத்தின் பிரச்சினைகளையும் நிலையையும் நன்றாக உணர்வதற்குச் சென்னை நகரின் வரலாற்றைத் தெரிந்து கொள்வதும் இன்றியமையாதது என்பதை வற்புறுத்துவதே என்னுடைய நோக்கம்.

## 1 பரப்பு

செங்கற்பட்டு மாவட்டத்தின் பரப்பு அளவை முதலில் காண்போம். நீலகிரி மாவட்டத்தின் எல்லை 100 ஆண்டுகளாகவும், அதற்கும் முன்னரும் கூட அப்படியே இருந்து வந்திருக்கிறது, அதில் மாறுதல் ஏற்படவில்லை. ஆனால் செங்கற்பட்டு மாவட்டத்தின் எல்லை ஒரு நிலையாக இல்லாமல், மாறிக்கொண்டே வந்திருக்கிறது. இதற்குக் காரணம் சென்னை மாநகரம் விரிவடைய விரிவடைய அது செங்கற்பட்டு மாவட்டத்தின் பகுதிகளை விழுங்கிவிடுகிறது. எனவே சென்னை வளர வளர, செங்கற்பட்டு கரைகிறது. காலப்போக்கில் செங்கற்பட்டு என்ற தனி மாவட்டம் இல்லாமல், அது சென்னையோடு இரண்டறக் கலந்துவிடும் என்று கூடச் சிலர் கருதுகிறார்கள்.

இந்தக் கருத்தின் விளைவாக, ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. ஏற்கெனவே உள்ள மாவட்டங்கள் பெரிதாக இருப்பதால் அவற்றை இரண்டாகப் பிரிக்கவேண்டும், மாவட்டங்கள் சிறிய அளவினதாக இருப்பதே நிர்வாகத்துக்குச் சாலச் சிறந்தது என்ற எண்ணம் ஏற்றம் பெற்றிருந்தும் புதிதாக ஒரு வட்டம் செங்கற்பட்டு மாவட்டத்துடன் இணைக்கப்பட்டது.

திருத்தணி வட்டம், 1956 வரை வடஆற்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியாக இருந்தது. ஆனால் புதிதாக ஆந்திர மாநிலம் ஏற்பட்டபோது அது, அந்த மாநிலத்தில் சேர்க்கப்பட்டது. பிறகு, அங்கு வாழும் தமிழ் பேசும் மக்கள் செய்த கிளர்ச்சியால் மீண்டும் அதைத் தமிழ்நாட்டின் பகுதியாக ஆக்கிக் கொள்ள ஆந்திர அரசு இசைந்தது. எனினும், வட ஆற்காட்டிலிருந்து பிரிக்கப்பட்ட அந்தத் திருத்தணி வட்டம் மீண்டும் அந்த மாவட்டத்துடன் சேர்க்கப்படாமல், செங்கற்பட்டு மாவட்டத்துடன் சேர்க்கப்பட்டது. இன்றுங்கூட, திருத்தணி வட்டத்தில் திருவாலாங்காடு முதலிய பகுதிகளிலிருந்து திருத்தணிக்கு வடஆற்காடு மாவட்டத்தின் வழியாகத்தான் செல்லவேண்டும் என்ற நிலை இருக்கிறது. இதையெல்லாம் பொருட்படுத்தாமல், செங்கற்பட்டுடன் திருத்தணியை இணைத்ததற்குக் காரணம் எதிர் காலத்திலும் ஒரு தனி மாவட்டமாகச் செங்கற்பட்டு நிலவவேண்டும் என்ற விருப்பமே ஆகும்.

சில இடங்களில் கடல் அரிப்பாலும் செங்கற்பட்டு மாவட்டத்தின் எல்லைகள் சுருங்கி வருகின்றன.

## 2. மக்களும் மக்கள் தொகையும்

சென்னைக்கு 1639-ல் ஆங்கிலேயர் வந்து சேர்ந்தனர். அதனால் ஒரு பெருநகரம் உருவாகத் தொடங்கியது. வெளிநாடுகளைச் சேர்ந்த மக்கள் நூற்றுக் கணக்கிலும் இந்தியாவின் பல பகுதிகளைச் சேர்ந்த மக்கள் ஆயிரக் கணக்கிலும் கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் சில லட்சம் பேரும் சென்னையில் குடியேறினர். எனவே, அருகேயுள்ள செங்கற்பட்டு மாவட்டத்து மக்கள் சென்னைக்குப் பெரிய அளவில் குடியேறியதில் வியப்பில்லை. அவர்கள் தங்களுடைய பூர்வீகமான ஊர்ப் பெயர்களையும் அங்கு நிலைநாட்டினர்.

அமைந்தகரை என்று ஒரு சிற்றூர் திருக்கழுக்குன்றத்துக்கு அருகே உள்ளது. அங்கிருந்து மக்கள் குடியேறிய பகுதி சென்னையின் புறநகராக இப்போது அமிஞ்சிக்கரை, அமைந்தகரை என்னும் பெயர்களால் வழங்கிவருகிறது.

இவ்வாறே காஞ்சிபுரத்துக்கு அருகேயுள்ள முத்தயாலுப்பேட்டை என்னும் ஊரினர் சென்னை தம்புசெட்டித் தெரு-மன்னடிப் பகுதிகளில் குடியேறினர். அப்பகுதி இன்றும் முத்தயாலுப்பேட்டை என்ற பெயரால் நிலவி வருகிறது.

திருவள்ளூர் வட்டம், மப்பேடு என்னும் ஊரினை அடுத்தது நுங்கம்பாக்கம். அவ்வூரினர் சென்னையில் வாழ்வதற்குத் தேர்ந்தெடுத்தப் பகுதியும் நுங்கம்பாக்கம் ஆயிற்று.

சென்னைப் பல்கலைக் கழகம் இயங்கி வரும் பகுதி சேப்பாக்கம் எனப்படுகிறது. இதன் சரியான பெயர் சேத்துப்பாக்கம். மதுராந்தகம் வட்டத்தில் சித்தாமூருக்கு அருகே சேத்துப்பாக்கம் என்ற ஓர் ஊர் உள்ளது.

ஸ்ரீபெரும்புதூர் வட்டம், திருமணம் என்ற ஊர்க்காரர்கள் சென்னை தண்டையார்ப் பேட்டையில் குடியேறினர் என்பது தண்டையார்ப்பேட்டையிலுள்ள கோயில் கல்வெட்டிலிருந்து தெரிகிறது. திருமணத்திலிருந்து சென்னையில் குடியேறியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் தமிழறிஞர் செல்வகேசவராய முதலியார்.

திருபோரூருக்கு அருகே ஒரு கோடம்பாக்கம் உள்ளது.

காஞ்சிபுரம் வட்டத்துப் பெருநகர் அருகே சேத்துப்பட்டு என்ற ஓர் ஊர் உள்ளது. இதுவே 'சேத்பட்' என்ற பெயரில் உள்ள சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பகுதியின் பெயராகும்.

இப்படி இன்னும் எவ்வளவோ சொல்லிக்கொண்டு போகலாம்.

சென்னைநகரின் தெருப் பெயர்களிலும் செங்கற்பட்டு மாவட்டத்தின் மணம் வீசுவதை, ஓரளவு தொட்டுக் காட்டியும் சுட்டிக் காட்டியும், எஞ்சியதை உங்கள் ஆராய்ச்சிக்கு விட்டு விடுவேன்.

ஆலந்தூர் சுப்பிரமணிய ஆச்சாரி தெரு
சந்திரபாக்கம் முத்துசாமி முதலியார் தெரு
காஞ்சிபுரம் முனிசாமி மேஸ்திரி தெரு
காஞ்சிபுரம் பச்சையப்ப முதலி தெரு
காஞ்சிபுரம் சபாபதி முதலி தெரு
கோவலம் முத்துக்கிராமணி தெரு
மனிதார் சவுட்ரி தெரு
போரூர் சோமசுந்தர முதலி தெரு
தொட்டிக்கலை குமரப்ப முதலி தெரு

செங்கற்பட்டு மாவட்டத்துப் பெருமக்கள் சென்னையில் கல்வி பெருக ஆற்றிய பணிகளை நினைவூட்டும் பெயர்களும் உண்டு. சான்று: பச்சையப்பன் கல்லூரி, பூண்டி ரெங்கநாத முதலியார் விடுதி.

இந்து பிள்ளைகளுக்கு இந்த நாட்டுச் சரித்திரங்களையும், ஆங்கில மொழியையும் கற்பிக்சப் பச்சையப்ப முதலியார் ஒரு லட்சம் வராகன் அளித்த செய்தி திருவல்லிக்கேணி கோயில் கல்வெட்டில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

செங்கற்பட்டு மாவட்டத்து மக்கள்மட்டும் சென்னைக்குக் குடியேறவில்லை. அவர்களோடு சேர்ந்து செங்கற்பட்டு மண்ணும் காடும் மலையும் சென்னைக்குச் செல்லுகின்றன. மண், சூளைகளில் செங்கல்லாகி சென்னையில் வீடு கட்ட உதவுகிறது. காடுகள் அழிக்கப்பட்டு சென்னையில் சமையலுக்கு விறகாகப் பயன்படுகின்றன. மலைகளில் கல் உடைத்து, சென்னை நகரில் பல வகையான தேவைகளுக்கு அனுப்பப்படுகின்றது. மலைகளிலிருந்து மட்டுமின்றி சிலசமயம் செங்கற்பட்டு மாவட்டத்தில் தேடாமல் உள்ள கோயில்களின் கல்வெட்டுக்களும் சென்னைக்குச் சென்று விடுகின்றன. சென்னையிலுள்ள சில கோயில்களில் செங்கற்பட்டு மாவட்டத்துக் கோயில்களில் இருக்கவேண்டிய கற்கள், கல்வெட்டுக்கள் காணப்படுவதற்கு இதுவே காரணமாக இருக்கலாம்.

சென்னை கந்தசாமி கோயிலில் திருப்போரூர்க் கல்வெட்டும், மயிலாப்பூர் கபாலீசுவரர் திருக்கோயிலில் திருவான்மியூர்க்குரிய கல்வெட்டும், திரிசூலம் கோயிலுக்கு உரிய கல்வெட்டும் உள்ளன.

மயிலாப்பூரிலுள்ள காரணீசுவரர் கோயில் கல்வெட்டில், பல்லாவரம் என்பது பல்லவர்புரம் என்ற சொல்லின் மரூஉ என்ற கருத்துக்கு ஆதாரம் கிடைக்கிறது.

செங்கற்பட்டு மாவட்டத்தில் மக்கள் தொகை மற்ற மாவட்டங்களைவிடக் கூடுதலான விகிதத்தில் பெருகி வருகிறது. இதற்குக் காரணம் இது சென்னை நகரை ஒட்டியிருப்பதால், பிற மாவட்டங்களிலிருந்து சென்னைக்கு வருபவர்கள் நகரத்தின் சந்தடியிலிருந்து சற்று விடுதலை பெற, கிராமியச் சூழலிலுள்ள செங்கற்பட்டு மாவட்டத்தின் பகுதிகளைத் தேர்ந்தெடுப்பதே ஆகும்.

சென்னை நகரில் 1942-ல் ஜப்பானியர் குண்டு வீசியவுடன், நகரம் காலி செய்யப்பட்டது. அப்போது சென்னை நகர மக்களில் பெரும்பாலோர் செங்கற்பட்டு மாவட்டத்தில்தான் தஞ்சம் புகுந்தனர். இவ்வாறு வெளியேறிய மகாமகோபாத்தியாய டாக்டர். உ. வே. சாமிநாதஐயர் திருக்கழுக்குன்றத்தில் தங்கியிருந்து அங்கேயே உயிர்நீத்தார்.

காஞ்சிபுரம், செங்கற்பட்டு முதலிய இம்மாவட்டத்தின் பல ஊர்களில் ரிக்ஷா போக்குவரத்து ஏற்படுவதற்கும், சென்னை நகரத்தைக் காலிசெய்து கொண்டு வந்த ரிக்ஷா இழுப்பவர்களே காரணமாக இருந்தனர்.

இம்மாவட்டத்திலுள்ள வேடந்தாங்கலில் பறவைகள் புகலிடம் உள்ளது. பகல் முழுவதும் நெடுந்தூரம் பறந்து சென்று இரைதேடும் பறவைகள் இரவில் வேடந்தாங்கலுக்குத் திரும்புகின்றன. இவ்வாறே செங்கற்பட்டு மாவட்டத்தில் பல்லாயிரம் மக்கள் பகலில் சென்னையில் தங்கித் தங்கள் தொழில்களைக் கவனித்து இரவில் வீடு திரும்புகின்றனர். இக்காரணத்தால் செங்கற்பட்டு மாவட்டத்தின் மக்கள் தொகை பகலைவிட இரவில் 50,000 அல்லது 60,000 கூடுதலாக இருக்கிறது.

# திருமுக்கூடல் கல்வெட்டு

## புலவர் ப. அண்ணுமலை

### செங்கற்பட்டு மாவட்டம்

திருமுக்கூடல் செங்கற்பட்டு மாவட்டத்தில் காஞ்சிபுரத்திலிருந்து செங்கற்பட்டுக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் காஞ்சியிலிருந்து 20 கி. மீ தொலைவில் பாலாற்றின் தென்கரையில் அமைந்திருக்கும் இயற்கை அழகு நிறைந்த சிற்றூராகும்.

பாலாறு, செய்யாறு, வேகவதி என்னும் மூன்று ஆறுகளும் கலந்து ஒன்றுகும் இடமாதலால் இவ்வூர் திருமுக்கூடல் எனப் பெயர் பெற்றது. இது தீர்த்தப் புகழ்பெற்ற தலமாகும். ஆற்றின் கரையிலுள்ள அருள்மிகு வேங்கடேசப் பெருமாள் திருக்கோவில் வரலாற்றுப் புகழ் வாய்ந்த அரிய கல்வெட்டுகள் பலவற்றையுடையது. பிற்காலச் சோழர் காலத்தில் இத்திருக்கோவில் செழித்த நிலையில் விளங்கியதை இதன் கண்ணுள்ள கல்வெட்டுக் குறிப்புகளே உணர்த்துகின்றன. வரலாற்றுராய்ச்சிப் பேராசிரியர்கள் பலரும் இக்கோயிற் கல்வெட்டுச் செய்திகளைத் தம் ஆராய்ச்சிகளில் குறிப்பிட்டுள்ளனர்.

திருக்கோயில் விமானம் சோழர் காலத் தூங்கானைமாட அமைப்புடையது. பண்டை நாளில் இக்கோவிலில் நடன சாலை, ஆதுலர் சாலை (மருத்துவமனை), பல்கலைக் கழகம் முதலியன இருந்தனவென்பது கல்வெட்டுகளால் அறியப்படுகிறது. தற்கால ஆவணங்களிலும் நடைமுறையிலும் அவைகளுள் சில காணப்படுகின்றன.

### வரலாற்றுக் கல்வெட்டு

இத்திருக்கோவிலின் கருப்பக் கிருகச் சுவரின் வெளிப்புறத்தில் வீரராசேந்திர சோழன் (கி. பி. 1063 - 1070) புகழ் கூறும் மெய்க்கீர்த்தி அமைந்த கல்வெட்டு காணப்படுகிறது. இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுகள் பலவற்றிலும் மிக நீளமான கல்வெட்டு இதுவே என்பது அறியப்படுகிறது. அப்பெருவேந்தன் ஆண்ட நீண்ட வரலாற்றையும், போர்ச் செயலையும், அவனது குடும்பம் பற்றியும் விரிவாக இக்கல்வெட்டுக் கூறுகிறது. வீரராசேந்திர சோழன் ஆவணி மாதத்தில் ஆயிலிய நாளில் பிறந்தான் என்பதை இக்கல்வெட்டு தெளிவாகக் கூறுகிறது. இச்செய்தி அவனது வேறு

கல்வெட்டுகளில் இல்லை என்பர் ஆசிரியர். வீரராசேந்திரன் சேர மன்னரை வென்று வந்த வரலாற்றை இக்கல்வெட்டு கூறுகிறது.

**கல்வெட்டு கூறும் சிறப்புச் செய்தி**

பல்கலைக் கழகம்: வீரராசேந்திர சோழனால் இக்கோயிலில் பல்கலைக் கழகம் ஒன்று நிறுவப் பெற்றிருந்தது. அப்பல்கலைக் கழகத்தில் பயிலும் மாணவருக்கு உணவும் உறையுளும் அளித்ததோடு அரசியலார், தலைமுழுக்குக்கும் விளக்குக்கும் எண்ணெயும் அளித்தனர். ஊரிலுள்ள மக்களுள் கல்வி பயில முடியாதவர் கேள்வியறிவு பெறும் வண்ணம் சில நூல்கள் கோவிலில் படித்து விளக்கப்பட்டன. அதற்கென 'வியாக்யான மண்டபம்' இருந்தது. அவ்விடம் இப்போதும் உள்ளது. அறிஞர்கள் சொற்போர் விளைக்கும் பட்டி மண்டபமும் பல்கலைக் கழகத்தில் இருந்தது. ஆதுலர் சாலை (மருத்துவமனை): கல்வி பயிலும் மாணவருக்கும் ஊரிலுள்ளோருக்கும் நோய் கண்டபோது மருத்துவம் செய்யத்தக்க ஆதுலர் சாலையும் இக்கோவிலினுள்ளே இருந்ததெனவும் அதில் ஓராண்டிற்கு வேண்டிய மருந்து வகைகள் இருந்தன எனவும் ஒரு மருத்துவனும் ஒரு 'சல்லியக் கிரியை பண்ணுவான்' (Surgeon) என்பானும் பரம்பரை உரிமையுடையோராய் மருத்துவம் செய்தனர் எனவும் இக்கல்வெட்டினால் நாம் அறிய முடிகிறது. நடனசாலை: இத்திருக்கோவிலில் நடனசாலை ஒன்று இருந்ததாயும் அதற்குத் தனியே நிவந்தங்கள் விடப்பட்டிருந்தன என்றும் கல்வெட்டுக் கூறுகிறது. இதை இன்னும் கோயில் பதிவேடுகளிலும் ஆவணங்களிலும் நடைமுறையிலும் காண முடிகிறது. திருவிழா நடைபெறும்போது நடனமாடும் நடன மகளுக்கு விடப்பட்ட மானியம் 'தேவதாசி மானியம்' என்னும் பெயரில் இன்றும் வழங்கி வருகிறது. நடன சாலையில் நாட்டியம் கற்றுக்கொடுத்து வந்த நட்டுவனுர்க்கு விடப்பட்ட மானியம் நட்டுவர்மானியம். அதே பெயரில் இப்போதும் அழைக்கப்படுகிறது. நடனம் ஆடுகையில் மத்தளம் வாசிப்பவனுக்கு விடப்பட்ட மானியம் மத்தள மானியம். இன்றும் அப்பெயரிலேயே வழங்கி வருகிறது. நாட்டியத்திற்குத் தாளம் வாசித்தவனுக்கும் மானியம் வழங்கப் பட்டிருக்கிறது. திருவிழாவின் போது முரசு முழக்கும் ஒருவனுக்கு விடப்பட்ட மானியம் இன்று 'டமார' மானியம் எனப்படுகிறது. இவையல்லாமல் பண்டார மானியம், பஞ்சாங்க மானியம், குயவன் மானியம், வாத்திய மானியம், அர்ச்சகர் மானியம் மட்டும் மூன்று முறை விடப்பட்டுள்ளது. வில்லியனிக்கும் மானியம் உண்டென்பது தெரிகிறது. இவற்றுள் வாச்சியமானியம் என்பது கோவிற் பூசையின் போது மேளவாச்சியங்களை வாசிப்பவர்களுக்கு விடப்பட்டது. அம்மானியத்தைத் தொன்று தொட்டுப் பயிரிட்டு உண்டு பரம்பரையாய்த்

திருத்தொண்டு செய்து வருவோரை இன்றும் இங்கு காண முடிகிறது.

### திருக்கோவிலின் தற்கால நிலை

கோயிலின் பின்புறம் பல்கலைக் கழகமும் மாணவர் விடுதியும் இருந்த இடங்கள் சிதைந்து மண்மேடாய்க் காணப்படுகின்றன. பல்கலைக் கழகத்திலிருந்த பட்டி மண்டபம் இன்று அழிந்த நிலையில் கற்குவியலாய்க் கிடக்கிறது. பழைய வியாக்யான மண்டபம் 'பஞ்சாங்க மண்டபம்' என்னும் பெயரில் ஆண்டுதோறும் பஞ்சாங்கம் படித்துக் காட்டும் இடமாயுள்ளது. அதற்குரிய மானியத்தைப் பெற்று பஞ்சாங்கம் படிப்பவரும் இருக்கின்றனர். கோயில் அர்ச்சகர் முன்னாளில் தென் கலைத் தமிழ் வைணவராயிருந்தும் இந்நாளில் தெலுங்கு பேசும் வடகலையினராயிருப்பது தெரிகிறது. திருக்கோயிலின் முன்புறம் திருவிளங்கோயில் ஒன்றும் காணப்படுகிறது. கோயிலின் வெளிச்சுற்று மதிலின் வெளிப்புறத்தில் சிறப்பான கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவை சுண்ணாம்பு பூசி மறைக்கப்பட்டுள்ளன. அதனை அகற்றினால் அரிய பல செய்திகள் புலப்படலாம்.

கோவிலின் வெளிச்சுற்று அழிந்தபோது அவ்விடங்களிலிருந்த கற்சிலைகளையும் ஐம்பொன் படிமங்களையும் கொண்டு வந்து கோவிலின் உள்ளிடத்தில் நிலவறை அகழ்ந்து புதைத்து வைத்துள்ளனர். கருவறையின் வடக்கில் சுரங்கப் பாதை ஒன்று காணப்படுகிறது. அது மூடப்பட்டு முந்நூறு ஆண்டுகள் ஆகின்றன என்று அறிந்தோர் கூறுகின்னர். அச்சுரங்க அறையிலும் ஐம்பொன்படிமங்களும் பிறவும் வைக்கப்பட்டுள்ளன என்று கூறுகின்றனர். இப்போதும் சில ஐம்பொன் படிமங்கள் வழிபாடு செய்யப்படாமல் மரப் பெட்டியினுள் வைக்கப்பட்டுள்ளன. கோவிலின் சுவர்களும் மேற்பரப்பும் இடிந்து கலன்பட்டுப் பாதுகாப்பிழந்த நிலையிலுள்ளன.

# மதுராந்தகம் அன்றும் இன்றும்

க. த. திருநாவுக்கரசு

## மதுராந்தகம்

செங்கற்பட்டு மாவட்டத்தில் நீர்வளமும், நிலவளமும் வாய்ந்த வட்டம் (தாலுகா) மதுராந்தகம் எனச் சொல்லத் தேவை இல்லை. மதுராந்தகம் 'வெற்றிலை' 40 ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவில் பல்வேறு நகரங்களுக்கும் பர்மாவிற்கும் ஏற்றுமதி செய்யப்படுவதை நாடு நன்கறியும். இவ்வூர் நெடுங் காலமாகச் சிறப்புடன் விளங்கி வருகிறது.

அதன் பெயரே வரலாற்றுச் செய்தி ஒன்றை அறிவிப்பதாக அமைந்துள்ளது. கி. பி. 9-ம் நூற்றுண்டு முதல், இப்பெயரால் அவ்வூர் வழங்கி வருகிறது. இன்றைக்குச் சென்னைக்குத் தெற்கே, 80 கி. மீ. தொலைவில் இருக்கும் அவ்வூர், சோழப் பேரரசர் காலத்தில் மதுராந்தகச் சதுர்வேதிமங்கலம் எனும் பெயரோடு சிறப்புற்று விளங்கியது.

4 (சதுர்) வேதங்களில் வல்ல அந்தணர்க்கு மானியமாகக் கொடுக்கப்பட்ட ஊர் என்பதே சதுர்வேதிமங்கலம் என்பதற்குப் பொருளாகும். மதுராந்தகம் என்னும் பெயர் சோழர் ஆட்சியில், அவ்வூருக்கு இடப்பெற்றதாகும். பல்லவர் காலத்தில் அவ்வூருக்கு வழங்கிய பெயர் தெரியவில்லை.

சோழப் பேரரசிற்கு நல்லதோர் அடிப்படை அமைத்தவன் ஆதித்த சோழனுவான். (கி. மு. 871-907). அவனுடைய மகன் பராந்தக சோழன் மதுரையைக் கைப்பற்றினுன். திருவாலங் காட்டுச் செப்பேடு அவனை 'மதுராந்தகன்' எனப் போற்றுகிறது. அவனுக்குப் பிறகு மதுரையை, பாண்டி மண்டலத்தைச் சோழர்கள் இழந்தனர். மீண்டும் 2-ம் பராந்தகனுகிய சுந்தர சோழன் 'மதுரை கொண்ட கோ இராச கேசரிவர்மன் எனவும், 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் ஸ்ரீசுந்தர சோழ தேவர்'[2] என்றும் போற்றப்பட்டான். கொடும்பாளூரில் காணப்படும் கல்வெட்டு ஒன்று, இவனை மதுராந்தகன் சுந்தர சோழன்[3] என்று சுட்டுகிறது. 'மதுரைக்கு (பாண்டிய நாட்டிற்கு) அழிவினை உண்டாக்கும் யமன்' என்பது மதுராந்தகன் எனும் சொல்லிற்குப் பொருளாகும். இச் சிறப்புப் பெயரால், பின்னர் வந்த சோழ அரசர்கள் குறிப்பிடப்படு கின்றனர். மதுராந்தகன் உத்தமசோழன் அவன் மகன் மதுராந்

தகன் கண்டராதித்தன் என்று பெயர் பெற்றிருந்தனர். பேரரசன் முதலாம் இராசேந்திரனுடைய இளமைப் பெயர் மதுராந்தகன். பின்னர் வந்த வீரராசேந்திரனுக்கு மதுராந்தகன் எனும் பெயர் வழங்கியது.

2-ம் இராசேந்திர சோழன் மகளுக்கு மதுராந்தகி எனும் பெயரும் வழங்கியதைச் சரித்திரம் பேசுகிறது. இவளே முதற் குலோத்துங்க சோழனின் பட்டத்தரசியாவாள்.

இவர்களுள் முதன்முதல் மதுராந்தகன் எனும் சிறப்புப் பெயர் பூண்டவன் முதற் பராந்தக (கி. பி. 907-955) சோழனுவான் என்பது புலனுகின்றது. இவனுடைய ஆட்சிக் காலத்தில் தொண்டை மண்டலம் சோழருடைய ஆட்சியின் கீழ் இருந்து வந்தது. உலகப் புகழ்மிக்க உத்திர மேரூர்க் கல்வெட்டுகள் இவன் காலத்தில் பொறிக்கப்பட்டவை. எனவே, தன்னுடைய நினைவாக வெற்றியைக் கொண்டாடும் வகையில் இவனே 'மதுராந் தகச் சதுர்வேதிமங்கலம்' எனும் பெயரில், தானமாகக் கொடுத் திருக்கவேண்டும். ''ஜெயங்கொண்ட சோழமண்டலத்துக் களத் தூர்க் கோட்டத்துத் தனியூர் மதுராந்தகச் சதுர் வேதி மங்க லத்து''[3] என்பது பரகேசரி வன்மரின் 7-ம் ஆண்டுக் கல்வெட்டு. இப்பரகேசரிவர்மன், 'மதுரை'யும், ஈழமும் கொண்ட கோப்பர கேசரிவர்மன்' எனப்படும் முதலாம் பராந்தகனுகவே இருத்தல் கூடும்.

அக்காலத்தில் தொண்டை மண்டலத்திற்கு 'ஜெயங்கொண்ட சோழமண்டலம்' என்பது பெயர். தொண்டை மண்டலத்தின் 24 கோட்டங்களுள் களத்தூர் (இன்றைய பொன்விளைந்த களத் தூர்) கோட்டம் ஒன்று. அதில், ''பிறருடைய கண்காணிப்பு இல்லாமல், நிர்வாகம் முழுவதையும் ஊரில் உள்ள ஓரினத்தாரே நடத்திச் செல்லும் உரிமை பெற்றது'' மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் எனும் ஊர். இதனுல்தான், அதனைத் தனியூர் எனக் கல்வெட்டு வாசகம் குறிப்பிடுகிறது. அவ்வூரில் கிரமவித்தன், வாஜயோஜி, சோமயாஜி, பட்டன் என்னும் பல்வகைப்பட்ட பிராமணர்கள் வாழ்ந்து வந்தனர். இவர்களை உறுப்பினராகக் கொண்ட 'மகாசபை' (ஊராட்சி மன்றம்) ஒன்று இருந்தது. அம்மன்றமே, அவ்வூரின் நிர்வாகத்தைக் கவனித்து வந்தது. முதற் குலோத்துங்க சோழனுடைய காலத்தில் அம்மகாசபையினர் கூடி, நிர்வாகப் பணிகளைக் கவனித்த மண்டபத்திற்குச் செம்பியன் மாதேவிப் பெருமண்டபம் என்பது பெயராகும்.[4] கண்டராதித்த சோழனின் மனைவியும் மதுராந்தக உத்தம சோழரின் தாயாரு மாகிய செம்பியன் மாதேவியின் பெயரால் நிறுவப்பட்ட மண்டபம்

என்பது தெரிகிறது. அம்மண்டபம் சந்தைகூடும் இடத்திற்குத் தென்பகுதியில் மிகவும் பாழடைந்த நிலையில் 30 ஆண்டுகளுக்கு முன்வரை இருந்து வந்தது.

### கோயில்கள்

மதுராந்தகத்தில் பழமையான கோயில்கள் 3 உள்ளன. இன்றைக்கு அங்குள்ள ஏரிகாத்த பெருமாள் என வழங்கப்படும் கோதண்டராமர் கோயிலையே, மக்கள் நன்கு அறிவர். ஆனால், அங்குக் கடப்பேரி எனும் பகுதியில் உள்ள திரு வெண்காடுடைய மகாதேவர் கோயில் எனும் சிவன் கோயிலும், வடதிருச்சிற்றம் பலம் எனும் முருகன் கோயிலையும் அறிந்தவர்கள் சிலரேயாவர்.

### 1. திருநாவுக்கரசர்

18-ம் நூற்றுண்டிற்குப் பிறகு 'ஏரிகாத்த பெருமாள்' எனும் பெயரோடு இக்கோயில் புகழ் பெறலாயிற்று. கி. பி. 10 நூற்றுண்டில் அக்கோயிலுக்கு திருவயோத்தி பெருமாள் கோயில் எனும் பெயரே வழங்கியது. 11-ம் நூற்றுண்டில் கோதண்டராமப் பெருமாள் கோயில் என்று வழங்கியதை இராமானுஜசாரியாரின் வரலாற்றிலிருந்து அறிகிறோம். முதலாம் பராந்தகச் சோழனுடைய தந்தை, ஆதித்த சோழன் என்பதை நாம் முன்னரே கண்டோம். அவனுக்குக் கோதண்டராமன் எனும் மற்றுமொரு பெயர் வழங்கியதைக் கன்னியாகுமரிக் கல்வெட்டால் அறிகிறோம்.[5] அவன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிய பொழுது, தன்னுடைய பெயரால், கட்டிய கோயிலாக அது இருக்கலாம். அல்லது அவனுடைய மகன் முதலாம் பராந்தகன் இவ்வூரைப் பிரமதேயமாக அளித்தபோது அமைத்த கோயிலாகவும் இருக்கலாம். இவ்வூரில் உள்ள மிகப் பழமையான கோயில் இத் திருமால் கோயிலாகும்.

வைணவத் தலங்களுள் இக்கோயிலுக்கு ஒரு தனிச்சிறப்புண்டு. பாஷிய காரரான ஸ்ரீராமானுஜசாரியார் முதன் முதல் பெரிய நம்பியை மதுராந்தகத்திலேயே கி. பி. 1045-ல் சந்தித்தார். பெரிய நம்பி அவர்கள், கோதண்டராமர் கோயிலில்; உள்ள (இன்றும் இருக்கின்ற) மகிழ மரத்தடியில் 'பஞ்சசமஸ்காரம்' 'மந்திர ரத்தினம்', 'த்வயம்' எனும் இரட்டைப் பேருண்மைகளான தத்துவம் ஆகியவற்றை உபதேசித்தார். அதனால் ஸ்ரீவைஷ்ணவருக்கு மதுராந்தகம் புனிதத்தலமாயிற்று. இதனால்தான் 14-ம் நூற்றுண்டில் வாழ்ந்து மறைவான மாமுனிகள், மதுராந்தகத்தை அடைந்ததும்,

ஈதோ கிளியாறிவ் வூரோ திருமதுரை?
ஈதோ திருமகிழும் கோபுரமும்-ஈதோ
பெரிய நம்பி நாமுகந்து பின் எதிரா சர்க்குத்
துயமளித்த தூய பதி'

என்று வியந்து பாடினர்.[6]

கருங்குழியையும், மதுராந்தகத்தையும் பிரிப்பது கிளியாறு. மதுராந்தகப் பேரேரியில் தோன்றி, 16 கி. மீ. ஓடிப் பாலாற்றில் கலப்பது இக்கிளியாறு. இக்காலத்தில் இதனைக் கல்லாறு என்பர். 'திருமதுரை' என்பது, மதுராந்தகத்தையே. 'திரு' எனும் இடை கொடுத்துப் பாடியுள்ளார். துயம் என்பது துவயம் எனும் இரட்டைப் பேருண்மை மந்திரமாகும்.

10-ம் நூற்றுண்டில், இக்கோயிலுக்குத் தேவதானமாக நிறைய நிலம் கொடுக்கப்பட்டது. அந்நிலங்களுக்கு எல்லை கூறுகின்ற பொழுது இன்றுள்ள செங்காட்டூர், செய்யூர், பெரும்பாக்கம் எனும் ஊர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன. அத்தேவதானத்தில் கையொப்பமிட்ட ஊராட்சி மன்ற உறுப்பினர் ஒருவருடைய பெயர் பட்டனுன 4000 ஆசாரியன் என்பதாகும். இப்பெயர் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் நாட்டிலே பெற்றிருந்த செல்வாக்கை நினைவுபடுத்துகிறது.

இக்கோயிலில் திருவாய்ப்பாடியாழ்வார் கோயில் (கண்ணன் கோயில்) ஒன்று இருந்தமை கல்வெட்டுக்களால் தெரிகிறது.[7]

**சிவன் கோயில்**

மதுராந்தகத்தின் கிழக்குப் பகுதியில், இரயிலடிக்கு அருகில், பிற்காலச் சோழர் கலைப்பாதையில் அழகியதோர் கோயிலைக் காணலாம். இதனைக் கடப்பேரி சிவன் கோயிலென ஊரார் கூறுவர்; சோழவேந்தர் காலத்திய கல்வெட்டுக்கள் திருவெண்காடுடைய மகாதேவர் கோயில் எனக் குறிக்கின்றன. தலபுராணம் 'சுவேதாரண்யேசுவரர்' கோயிலென வடமொழியில் இக்கோயிலைச் சுட்டுகிறது.

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் (கி. பி. 1085ல்) பல்லவர் மரபில் செங்கேணிக்குடியில் தோன்றியவனுன பள்ளி, செங்கேணி சாத்தன் சோழனுன, சேனுதிபதி வாணு (தி) ராஜா என்பவர் திருக்கற்றளியாகத் திருவெண்காடுடைய மகாதேவர் கோயிலை அமைத்தார்.[8] அன்றாடம் பூசை, திருவிழா முதலியவற்றை நடத்துவதற்காக அவன் 2000 பொற்காசுகளை ஊராட்சி மன்றத்தினரிடம் ஒப்புவித்தான். அதை, அவர்கள் சபாவிநியோக

மாக ஏற்றுக்கொண்டு, அக்காசுக்கு விலையாக என்றத்தூர் (இக் காலத்தில் ஜமீன் எண்டந்தூர் என வழங்கும்) எனும் ஊரைத் தேவ தானமாக இக்கோயிலுக்கு விட்டனர்.[9]

இக்கோயில், 5 மடங்களைக் கொண்ட கோபுரத்தோடு வீறுடன் விளங்குகிறது. இக்கோயிலுக்கு முன்புறம் குளமும், வடபுறம் பூஞ் சோலையும் உள்ளது. திருவெண்காடுடையார் கோயிலைச்சுற்றிலும் உள்ள மாடவீதிக்குத் திருவெண்காட்டுப் பெருந்தெரு எனப் பெய ரிட்டனர். சிவப்பிராமணர்கள் அங்கு வாழ்ந்தனர். அவர்களே கோயில் வழிபாட்டைச் செய்து வந்தனர்.

இக்கோயிலுக்கு நந்தாவிளக்கு ஏற்றும் திருப்பணிக்கு அறக் கட்டளைகள் நிறுவியவர் பலராவர்.[10] அவர்களுள் புலியூர் நாட்டு வேளா(ள)ர் மகள் பெரியாள் என்பவள், செய்யூர் பரிக்கிரகத்துப் பெரியாளிடம் நிலத்தை வாங்கித் தாம் விட்ட 96 ஆடுகளைப்பேணிக் காக்கவும், நந்தாவிளக்கு ஏற்றவும் நிவந்தம் வழங்கினாள் என்பதும், அப்போது பொன்னம்பலக் கூத்தப்பட்டன் எனும் சிவபிராமணன் குத்துவிளக்கு ஒன்றைக் கோயிலுக்கு வழங்கினான் என்பதும் குறிப் பிடத்தக்கதாகும்.[11]

கி.பி. 13-ம் நூற்றாண்டில், குலசேகர பாண்டியன் (கி.பி. 1268-1308) படையெடுத்து வந்தான். அப்பொழுது அவனுடைய படைத் தலைவன் கைக்கோள முதலிகளில், விரதமுடித்த பெருமாள் மகன் திருநெல்வேலி உடையான் என்பவன், மதுராந்தகத்தில் தங்கினான். அவன் திருவெண்காட்டு மகாதேவர் கோயிலில் பாண்டீசுவர நாய கர், புவனபதி நாச்சியார் எனும் திருமேனிகளை (உற்சவ மூர்த்தி களை) எழுந்தருளச் செய்து அவர்களுடைய பூசைகளுக்காகத் திரு நாமத்துக் காணியும் வழங்கியுள்ளான்.[12]

இக்கோயிலின் தல விருட்சம், கொக்கு மந்தாரை எனப்படும் கோங்க மரமாகும். இக்கோயிலை அடுத்துத் தில்லை வாழ் அந்தணர் மடம் ஒன்று இருந்தது. அதை நிருவகிப்பதற்கும், சிவயோகி களுக்கும் துறவிகளுக்கும் உணவளிக்கவும் நிலையான அறக்கட்டளை ஏற்படுத்தப்பட்டிருந்தது.

2-ம் இராசாதிராசன் காலத்தில் (கி. பி. 1163-1179) மதுராந் தகத்தில் தினசிந்தாமணித் தெருவில் வாழ்ந்த வியாபாரிகள், திரு வெண்காடுடைய மகாதேவிக்கு எண்ணெய்க் காப்பு அபிடேகத் திற்கு நிவந்தம் அளித்தனர்.[13] கிருஷ்ண தேவராயர் ஆட்சிக் காலத்தில் மதுராந்தகத்தில் வடக்கேயுள்ள உட்கிடைவூரான (பிடாகைப்பற்று) கருங்குழியிலிருந்து ஒருவர், அவ்வூர் நிலத்தில்

தனக்குரிய ஒரு பகுதியை, இக்கோயிலில் திருத்தேர்த்திருவிழா நடத்துவதற்கும், அமுது படிக்கும் உரிய திருநாமத்துக் காணியாகக் கொடுத்துள்ளார்.[14]

**முருகன் கோயில்**

மதுராந்தகம் ஊருக்கு வடகிழக்கே, பத்தாண்டுகளுக்கு முன்பு வரை வயல்வெளியில் மண்மேடாக இருந்த பகுதியை அகழ்ந்து, முருகன் கோயிலின் இடிபாடையும், ஆறுமுகசாமி, தெய்வயானை, வள்ளிநாச்சியார் ஆகியோரின் கற்சிலைகளையும் கண்டெடுத்தனர். அச்சிலைகளைக் கொண்டு, முருகன் கோயில் ஒன்றையும் எழுப்பி யுள்ளனர். அங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளும், வேறு பல சிலைகளும் அங்கு ஒரு சிவன் கோயில் இருந்தமைக்குச் சான்று பகரு கின்றன. அச்சிவன் கோயிலில் முருகனுடைய சன்னதி 400 ஆண்டு களுக்கு முன்பு சிறப்புற்று விளங்கியதாகத் தெரிகிறது. முருக பக்த ரான அருணகிரிநாதர்,

''மகவெனப் பத்மம் தனிற்பிறந்த
மதுராந்தகத்து வடதிருச்சிற்றம்பலத்து
அமர்ந்த பெருமாளே'' (திருப்புகழ் 728)

என்றும்,

''மயில்தாண்ட விட்கு முதுகுலப்
பொற் குன்றிடித்த சங்கர
மதுராந்தகத்து வடதிருச் சிற்றம்
பலத்தமர்ந்த பெருமாளே'' (திருப்புகழ் 729)

என்றும் பாடியுள்ள வடதிருச்சிற்றம்பலம் இம்முருகன் கோயிலாகக் கருதப்படுகிறது.

**மதுராந்தகத்தின் அமைப்பு**

சதுர்வேதிமங்கலமான மதுராந்தகத்தின் பல பகுதிகளாக மதுராந்தகச் சேரி, இருமுடி சோழச் சேரி, சிங்களாந்தகச்சேரி, வீரசோழச்சேரி, ஸ்ரீகோதண்டராமச்சேரி, ஸ்ரீபரகேசரிச்சேரி, சூரசூழாமணிச்சேரி, திரிபுவன மகாதேவிச்சேரி,[15] பள்ளிச்சேரி,[16] ஸ்ரீபராந்தகச்சேரி[17] எனும் குடியிருப்புகள் இருந்தன.

2-ம் இராசாதிராசன் காலத்தில் (கி. பி. 1179) முதற் குலோத்துங்கன் மனைவியான மதுராந்தகி எனப்பட்ட தினசிந்தா மணியின் பெயரால் தினசிந்தாமணி தெரு என ஒன்று இருந்தது. அதில் வணிகர்கள் வாழ்ந்து வந்தனர்.[18]

விக்கிரம சோழனுடைய மதுராந்தகக் கல்வெட்டு ஒன்று அந்நகரின் வடமேற்கே சென்ற பெருவழி முக்கோல் (18 அடி) அகலமுடையதாக இருந்ததைத் தெரிவிக்கிறது.[19]

மதுராந்தகத்தின் மேற்குப் பகுதியில் உள்ள பெரிய ஏரிக்கு வீரசோழப் பேரேரி என்பது பெயர்.[20] அதிலிருந்து வடக்குப் பகுதியில் ஓடிய பெரிய கால்வாய்க்கு, வீரசோழன் வாய்க்கால் எனும் பெயர் வழங்கியது. இக்காலத்தில், இதனைத் 'தண்ணீர்க் கால்வாய்' எனச் சுட்டுகின்றனர்.

கி. பி. 17-ம் நூற்றுண்டில் கருநாடக நவாபுகளின் ஆட்சியின் கீழ், மதுராந்தகம் பொலிவிழந்தது. அதற்கு அருகிலுள்ள கருங்குழியில், நவாபின் பிரதிநிதி ஒரு சிறுகோட்டையைக் கட்டிக் கொண்டு வாழ்ந்தார். அக்கோட்டையைக் கி. பி. 1781-ஆம் ஆண்டு ஆங்கிலேயர் சார்பாக காப்டன் டேவிஸ் என்பவன் பீரங்கிப் படையைக் கொண்டு முற்றுகையிட்டு இறுதியில் வெற்றியும் பெற்றுன். கோட்டையின் இடிபாடுகளை இன்றும் காணலாம்.

1912 வரை கருங்குழியே, தாலுகாவின் தலைநகரமாக இருந்து வந்தது. அதன்பிறகு மதுராந்தகம் வட்டாட்சித் தலைநகராயிற்று. 1974 முதல் கருங்குழியும், மதுராந்தகமும் ஒன்றுக சேர்க்கப்பட்டு மதுராந்தகம் நகராட்சியாக அமைக்கப்பட்டுள்ளது.

## குறிப்புகள்

1. S. I. I. 3. Nos. 115—118.
2. Ep. Ind. 9, No. 15; 302 of 1908
3. Ins. of Pudukkottah state, No. 82.
3. S. I. I. 5, 376—377.
4. ,, 2, 382.
5. Pr. Ar. Se. 3, No. 34; v. 55
6. ஆசாரிய இருதயம், பக். 25
7. S. I. I. 5; p. 378.
8. ,, 5; p. 382
9. Ibid; p. 383.
10. ,, 4. }p. 379, 380, 381.
11. ,, p. 381
12. ,, p. 380
13. S. I. I. 5; 378.
14. ,, p. 380
15. ,, p. 383
16. ,, p. 377
17. ,, p. 380
18. ,, p. 378
19. ,, p. 377—378
20. ,, p. 382.

# நெசவுத் தொழிலும் காஞ்சியும்

## அ. அப்துல் மஜீத்

மனிதனின் இன்றியமையாத அடிப்படைத் தேவைகளில் முக்கியத்துவம் வாய்ந்தன உண்ண உணவு, உடுத்த உடை, வசிக்க இல்லம். இந்த அடிப்படைத் தேவைகளில் இரண்டாவதாக விளங்கும் உடை இல்லையெனில் மனிதனுடைய வாழ்வு முழுமை பெற்ற வாழ்வாக அமையாது. இதனுல்தான் இன்றும் நம் தமிழ் மக்கள் ''ஆடையில்லாதவன் அரைமனிதன்'' என்ற பழமொழியைக் கூறுகின்றனர். ஆடையைத் தயாரிக்கும் தொழில் நெசவுத் தொழிலாகும். இந்நெசவுத் தொழிலுக்கு வேறு எந்தத் தொழிலும் நிகரில்லை என்பதனை ''செய்யும் தொழிலில் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை நேர்'' என்ற பழமொழி நிலவி வருவது கண்கூடாகும்.

இந்நெசவுத் தொழில் புதிய கற்காலத்தில் ஆரம்பமாயிற்றென்று தொல்பொருள் வரலாற்றறிஞர் திரு. எச். டி. சங்காலியா அவர்கள் கூறுகின்ருர்.[1] ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்டுள்ள இரும்பினுலான தக்களிகள் இத்தொழிலின் தொன்மைச் சிறப்பிற்குச் சான்ருக விளங்குகின்றன. அரிக்கமேடு, உறையூர், வசவசமுத்திரம், காஞ்சிபுரம் முதலிய இடங்களில் நடைபெற்றுள்ள அகழ்வாராய்ச்சிகளில் நெசவுத் தொழிலுக்குரிய பழம்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளது இத்தொழிலின் தொன்மைக்கு மெருகூட்டுகிறது. தொல்காப்பியத்தில் ஆடையைப் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால் இந்நெசவுத் தொழிலின் தொன்மை நன்கு விளங்கும்.[2]

நெசவுத் தொழில் செய்வதற்குப் பருத்தி மிகவும் இன்றியமையாத ஒரு மூலப்பொருளாக விளங்கியது. பருத்தியை நம் பண்டையத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். தமிழகத்தில் பருத்தி மிகுதியாக இருந்ததென்பதைப் ''பருத்தி வேலிச் சீறூர்'' என்ற புறநானூற்று அடியால் அறிகிருேம்.[3] இப்பருத்தியேயன்றி இலவமரம், கோங்குமரம் முதலிய மரங்களிலிருந்து வேண்டிய பஞ்சு சேகரித்து நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்டது. இலவமரம்,[4] கோங்கு மரங்களைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

பஞ்சைப் பயன்படுத்தி நெய்த ஆடைகளையல்லாமல் பட்டு நூலைப் பயன்படுத்திப் பட்டாடை நெய்தனர் என்பதையும், எலியி

னுடைய மயிரைப் பயன்படுத்தி ஆடை நெய்தனர் என்பதையும் ''நூலினும் மயிரினும் நூழை நுற்பட்டினும்''[6] என்ற சிலப்பதிகார அடியால் அறியலாம்.

பருத்திப் பஞ்சை அதனுடைய கொட்டையிலிருந்து பிரித் தெடுக்க வில்லினைப் பயன்படுத்தினர் என்பதை அகநானூற்று[7] வரியாலும், நற்றிணை[8] வரியாலும் அறியலாம். பிரித்தெடுத்த பஞ்சை மகளிர் இராட்டையால் நூற்றனர் என்று புறநானூறு கூறுகிறது.[9] இராட்டையால் நூற்ற நூல் மிகவும் நுண்மையாக இருந்ததென்பதை ''நுணங்கு நுண்பனுவல்'' என்ற நற்றிணை அடி நன்கு உணர்த்தும்.[10]

நுண்மையான நூலைக் கொண்டு நெய்யப்பட்ட ஆடையி னுடைய இழைகளின் வரிசை காண்பதற்கு இயலாத வகையில் அமைந்திருந்ததென்பதைப் புறம் கூறும்.[11] இவ்வாறு திறமையுடன் நெய்யப்பட்ட ஆடைகள் அரும்பி மலர்ந்த பகன்றைப் பூ போன்றும்,[12] மூங்கிலின் உட்புறத்தேயுள்ள தோல்போன்றும்,[13] பாம்பு உரித்த தோல் போன்றும்,[14] புகையை விரித்தாற் போன்றும்,[15] பாலாவியைப் போன்றும்[16] விளங்கின.

நீலநிறத் துணிகளும், செந்நிறத் துணிகளும் இருந்தனவென்று இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். துணிகளுக்கு நீல நிறம் ஏற்றப்பட்டதை கி. பி. 12 அல்லது 13-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தொல்காப்பிய சொல்லதிகாரத்திற்கு உரை எழுதிய சேனாவரையர் ''நீலுண் துகில்'' என்று குறிப்பிடுகிறார். பண்டைக் காலத்தில் காடுகளில் முளைத்திருக்கும் செடிகளின் தழைகளையும், மரப்பட்டை களையும், அவுரிச் செடிகளையும் வண்ணம் தயாரிக்கப் பயன்படுத்தி இருக்கலாம். வண்ணம் தயாரிக்க அவுரிச் செடிகள் பயன்படுத்தப் பட்டன. இதனால்தான் இச்செடிகள் மேலைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன போலும்.

நம் தமிழ் இலக்கியங்கள் நெசவுத் தொழில் செய்தவர்களைக் காருகர்[17] என்றும், கம்மியர்[18] என்றும் குறிப்பிடுகின்றன. ஆனால் தமிழகத்தில் காணப்படும் கல்வெட்டுகளில் காருகர் என்ற சொல்லோ, கம்மியர் என்ற சொல்லோ இடம் பெறவில்லை. கல்வெட்டுகள் நெசவாளர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது கைக் கோளார்,[19] காவியர்,[20] சோழிய சாலியர்,[21] பட்ட சாலியர்,[22] சேனியர்[23] என்று மட்டும் குறிக்கின்றன. இவர்கள் நெசவுத் தொழிலைச் செய்யும் பல்வேறு பிரிவினர்கள். கி.பி. 12 அல்லது 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உரையாசிரியர் மயிலைநாதர் நெசவுத்

தொழில் செய்த பல்வேறு பிரிவினர்களைக் கோலிகன், சாலிகன், பட்டணவன், சேனியன் என்று குறிப்பிட்டுள்ளார்.

நெசவுத் தொழில் செய்பவர்களின் மீதும், அவர்களுடைய தொழிலுக்குப் பயன்பட்ட பஞ்சின் மீதும், பட்டு நூலின் மீதும் பட்டாடை மீதும், தறியின் மீதும், அவர்கள் குடியிருந்த இல்லங்கள் மீதும், தம் பண்டையத் தமிழ் அரசுகள் பேர்கடமை,[24] பஞ்சு பீலி,[25] பட்டாடை நூலாயம்,[26] தறி இறை,[27] பறைத்தறி,[28] சாலிகத்தறி,[29] தூரகத்தறி,[30] வாசல்வரி,[31] போன்ற வரிகளை விதித்து அரசின் வருவாயைப் பெருக்கி ஆட்சி செலுத்தினர் என்பதைக் கல்வெட்டுகள் மூலம் அறிகின்றோம்.

நெசவுத் தொழிலைச் செய்து வந்த கைக்கோளர்களும், பட்ட சாலியர்களும், சாலியர்களும் காஞ்சிபுரத்திலும், அதனைச் சுற்றியிருந்த ஊர்களிலும், குறிப்பாகச் செங்கற்பட்டு மாவட்டத்தின் பெரும் பகுதிகளில் வாழ்ந்திருந்தனர் என்பதனைச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள களத்தூர், நெரும்பூர், திருக்கச்சூர், திருக்கழுக்குன்றம், திருவிடந்தை, காஞ்சிபுரம் முதலிய ஊர்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளின் மூலம் அறிகிறோம்.

காஞ்சிபுரத்தில் இன்றும் நெசவுத் தொழில் சிறந்து விளங்குவதால் பண்டைக் காலத்திலிருந்து நெசவாளர்கள் வாழும் முக்கிய இடங்களில் ஒன்றாக இது திகழ்ந்தது. உத்தம சோழன் காலத்தில் (கி.பி. 970-985) வெளியிடப்பட்ட செப்புப் பட்டயம் நெசவுத் தொழிலைப் பற்றி அறிவதற்கு மிகவும் உறுதுணையாக உள்ளது. இம்மன்னனுடைய காலத்தில் நெசவுத்தொழில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்திருந்தது. குறிப்பாக, காஞ்சிபுரத்தில் வாழ்ந்த நெசவுத் தொழில் புரியும் மக்கள் ஆலயங்களிலும், அரசியலிலும் மிகவும் ஈடுபாடுடையவர்களாக இருந்தனர். காஞ்சிபுரத்தில் நெசவாளர்கள் வாழ்ந்த பகுதிகள் நான்கு இருந்தன. அவை 'பாடிகள்' என்று அழைக்கப்பட்டன. இங்கு வசித்தவர்கள் 'பட்டசாலியர்கள்' ஆவர். இவர்கள் பட்டாடை நெய்பவர்கள். அரசர்களுக்கும், அவர்களுடைய குடும்பத்தினர்களுக்கு மட்டுமே ஆடை நெய்பவர்கள். உத்தம சோழன் இவர்களைக் காஞ்சிபுரத்திலுள்ள ஊரகம் என்ற கோயிலின் நிதி சம்பந்தப்பட்ட விவகாரங்களைக் கவனிக்கும்படி நியமித்தான். மேலும் சோழ நியமம் என்ற இடத்தில் வசித்திருந்த பட்டாடை நெய்பவர்களின் மீது விதித்திருந்த வரியை நீக்கி ஆலய சம்பந்தப்பட்டக் கணக்குகளை மாதம் ஒருமுறை பரிசோதிக்கும்படி நெசவாளர்களுக்குப் பொறுப்பை அளித்தான்,[32]

காஞ்சிபுரத்திலுள்ள இரண்டாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டிய தேவனின் (கி.பி. 1276-90) 14-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு கைக்கோளர்களையும், சாலிய நெசவாளர்களையும் குறிப்பதுடன், இவர்கள் பயன்படுத்திவரும் ஒவ்வொரு தறிக்கும் ஆண்டு ஒன்றுக்கு ஆறுபணம் வரி செலுத்த வேண்டுமெனக் குறிப்பிடுகிறது.[33]

கி.பி. 1725ஆம் ஆண்டைச் சேர்ந்த ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள மண்டபத்தைக் ''கைக்கோளச் சாவடி'' என்று குறிப்பிடப்படுகிறது.

பண்டையக் காலத்திலிருந்து நெசவுத் தொழிலைச் செய்து வரும் கைக்கோளர் என்ற பிரிவினரின் வழித்தோன்றல்கள் இன்றும் காஞ்சிபுரத்திலும், கோயம்புத்தூர், சேலம், திருச்சி மாவட்டத்தில் கரூர் முதலிய இடங்களிலும் வசித்து வருகின்றனர். கைக்கோளர்கள் இம்மண்ணில் தோன்றிய வரலாற்றைச் செவிவழிச் செய்திகளின் துணைகொண்டு எட்கார்ட் தர்ஷ்ட்டன் என்னும் பெரியார் நன்குக நிறுவியுள்ளார்.

கைக்கோளர் என்ற சொல் வடமொழியில் வீரபாகு என்ற பெயருக்குச் சமமான சொல்லாகும். கைக்கோளர்கள் செங்குந்தர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்களை இவ்வாறு அழைப்பதற்கும், ஒரு புராணக்கதையுண்டு. ஒரு சமயம் புவியில் வாழும் மக்களைச் சில அரக்கர்கள் துன்புறுத்த முயன்றனர். மக்கள் சிவனுடைய உதவியை நாடினர். சிவனும் அவ்வரக்கர்கள் மீது சினங்கொண்டு, தன்னுடைய கண்களிலிருந்து ஆறு நெருப்புப் பொறிகளை வெளியிட்டான். இச்செய்கையைக் கண்ட பார்வதி பயந்து, சிவனுடைய அறைக்குச் செல்லும்போது அவனுடைய கால்களிலணிந்திருந்த சலங்கையிலிருந்து 9 மணிகள் கீழே விழ, அம்மணிகளைச் சிவபெருமான் 9 பெண்களாக மாற்றி, ஒவ்வொரு பெண்ணையும், ஒவ்வொரு வீரனை ஈன்றெடுக்கச் செய்கிறான். அந்த 9 வீரர்களும் சுப்ரமணியருடைய தலைமையின் கீழ்ச் சென்று, அந்த அரக்கர்களை அழிக்கின்றனர். இவ்வீரர்களில் ஒருவன்தான் வீரபாகு என்பவன். இவனுடைய வழித் தோன்றல்கள்தான் கைக்கோளர் ஆவர். அரக்கர்களை அழித்தபின், சிவபெருமான் அவ்வீரர்களை இசை பயின்று, இசைவல்லுநர்களாக ஆகவேண்டுமென்றும், அதற்குப் பின்னர் ஒரு தொழில் புரிபவர்களாக ஆக வேண்டுமென்றும், அத்தொழில் எந்த உயிருள்ள ஜீவனையும் அழிக்கவோ, காயப்படுத்தவோ கூடாத தொழிலாக விளங்க வேண்டுமென்றும் பணிக்க, அத்தகைய தொழில் நெசவுத் தொழிலே என்று கருதி கைக்கோளர்கள் நெசவுத்

தொழிலைப் பயின்றனர். 'கைக்கோள்' என்ற சொல் சுப்ரமணியர் ஏந்தியுள்ள இரத்தின வேலைக் குறிப்பதாகவும் கருதப்படுகிறது.

நெசவாளர்களில் தற்போது 6 வகைக் கிளைப்பிரிவினர்கள் இருக்கின்றனர். இவர்கள்: 1. சோழிய முதலி 2. ரெட்டுகார முதலி 3. சிறுதாலி 4. பெருதாலி 5. சீர்பாதம், 6. சேவகவிருத்தி என்பவராவர். இப்பிரிவினர்களைத் தவிர ஒத்தக்கார முதலி, அறுத்து கட்டி முதலி, ததிங்கின முதலி, வெள்ளைக்கார முதலி, கொங்க முதலி போன்ற பிரிவினர்கள் இன்றும் கரூர் வட்டத்திலுள்ளனர்.

தற்போது காஞ்சிபுரத்தில் கைக்கோளர்களின் வழித்தோன்றல்களில் இரு பிரிவினர் உள்ளனர். இவர்களில் ஒரு பிரிவினர் அய்யம்பேட்டையிலும், பிறிதொரு பிரிவினர் பிள்ளையார் பாளையத்திலும் வசிக்கின்றனர். இங்குள்ள கைக்கோளர்கள் பெரும்பாலும் சைவராக உள்ளனர்.

காஞ்சிபுரம் கைக்கோளர்களின் தலைமைபிடமாகக் கருதப்படுகிறது. இத்தலைமையிடத்திலிருந்து தன் சமுதாயத்தினரை ஆள்பவன் மஹாநாட்டன் என அழைக்கப்படுகின்றான். காஞ்சிபுரம் இவர்களுக்கு மஹா நாடாக விளங்குகிறது. இம்மஹாநாடு 4 திசைநாடுகளைக் கொண்டுள்ளது. கைக்கோளர் சமூகத்தினர் தாங்கள் வாழும் இடங்களை 72 நாடுகளாக–தேசங்களாகப் பிரித்துக் கொண்டனர். அவைகளில் 44 நாடுகள் மேற்கிலும், 28 நாடுகள் கிழக்கிலும் உள்ளன. இச்சமுதாயத்தினரின் தலைவன் பெரியத்தனக்காரன்–பட்டக்காரன் என்றழைக்கப்படுகிறார். இவருக்கு உதவிபுரிபவர் செங்கிலி–கிராமணி என்றழைக்கப்படுகிறார்.

நெசவுத் தொழில் தமிழர்களின் தொன்மையான தொழில். தொழில்களின் வரிசையில் வேளாண்மைக்குப் பிறகு நம் நாட்டில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது இத்தொழிலேயாகும். இத்தொழிலைச் செய்து வந்தவர்களின் வழித்தோன்றல்கள் இன்றும் காஞ்சிபுரத்தில் நெசவுத் தொழிலை மேற்கொண்டுள்ளது போற்றத்தக்கதாகும்.

## குறிப்புகள்

1. Dr. H. D. Sankalia; Pre and Proto History of India and Pakistan.
2. தொல்காப்பியம், பொருளதிகாரம்—262—2
3. புறநானூறு—289—1
4. அகநானூறு 11:3
5. பரிபாடல் 19—79

6. சிலப்பதிகாரம் 14—205—7
7. அகநானூறு 133—5
8. நற்றிணை 247—4
9. புறநானூறு 326—5
10. நற்றிணை—358
11. புறநானூறு 383—10—11
12. புறநானூறு—398— 17
13. புறநானூறு 383
14. புறநானூறு—383—10
15. புறநானூறு—393—19
16. பெரும்பாணாற்றுப்படை—469
17. மணிமேகலை 23—105
18. மதுரைக்காஞ்சி 521
19. 303 of 1909
20. 300 of 1909
21. 269 of 1913
22. Museum plates of Uttamachola
23. 28 of 1913
24. 293 of 1910
25. S. I. I IV. 371
26. 221 of 1910
27. 729 & 730 of 1887
28. S. I. I. 1. 64
29. ,,
30. ,,
31. 276 of 1912
32. Museum plates of Uttamachola
33. 300 of 1909

# திருவல்லம் தமிழ்க் கல்வெட்டில் வரும் வயந்தப் பிரியன்-கந்தசேனன்

ச. வேலுச்சாமி

திருவல்லம் செங்கற்பட்டிலிருந்து திருக்கழுக்குன்றம் செல்லும் பாதையில் இரண்டாவது கல்லில் உள்ளது. இவ்வூரில் குன்றில் குடையப்பட்டிருக்கும் குடைவரைக் கோயில் 'வயிந்தீஸ்வரம்' என்றழைக்கப்படுகிறது. மூன்று குகைகளில் நடுக்குகை பெரியது. அதன் வாயிலுள்ள இரண்டு தூண்களில் ஒரு தமிழ்க்கல்வெட்டுள்ளது. மகேந்திரன் காலத்துத் தமிழ்க் கல்வெட்டுகளில் பழைமையானது இது என்பர்.[1]

### திருவல்லம் கல்வெட்டு

''பகாப்பிடுகு லளிதாங்குரன்
சத்துரு மல்லன் குணபரன்
மயேந்திரப் போத்தரசரு அடியான்
வயந்தப் பிரி அரசர் மகன் கந்தசேனன்
செய்வித்த தேவகுலம்''[2]

இக்கல்வெட்டு மகேந்திரன் (கி. பி. 600 முதல் 630) காலத்தது என்பது இதில் வரும் செய்தியால் அறியக் கிடக்கிறது.

### கல்வெட்டால் அறியும் செய்தி

இக்கல்வெட்டில் முதல் இரண்டு வரிகளில் மகேந்திரவர்மன் சிறப்புப் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. அடுத்த மூன்று வரிகளில் 'மகேந்திரனது சிற்றரசனான வயந்தப்பிரியன் மகன் கந்தசேனன் குடைவித்த கோயில்' என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. 'செய்வித்த' 'அறுபித்த' 'கொட்பித்த' என்ற கல்வெட்டுத் தொடர்கள் கல்லை வெட்டிச் செய்த என்ற பொருளில் வருவன. எனவே, 'செய்வித்த தேவகுலம்' என்பதனாலேயே கந்தசேனனாலேயே குடையப்பட்ட கோயில் என்பது போதரும். தேவகுலம்-கோயில். 'ஊரார்-னுர் தேவகுலம்' என்பது பண்டைய இலக்கியத் தொடர். இது இன்று வயிந்தீஸ்வர முடையார் திருக்கோயில் என்று வழங்கப் படுகிறது. பூஜை முதலியன் இன்றும் நடந்து வருகின்றன.

வயந்தப் பிரியனும், அவன் மகனான கந்தசேனனும் மகேந்திரன் ஆட்சியில் அவன் கீழிருந்த சிற்றரசர்கள். இவர்கள் எந்த அரச

மரபைச் சார்ந்தவர் என்ற வினு எழுகிறது. இதற்கு விடைகாண முற்படுவோம்.

'இக்குகைக் கோயில் அமைத்த கந்த சேனன் (ஸ்கந்தசேனன்) என்பவரும், திருக்கழுக்குன்றத்து மலையில் வேதகிரீஸ்வரர் கோயிலிலுள்ள சாசனம் கூறுகின்ற ஸ்கந்த சிஷ்யன் என்பரும் ஒருவரே என்று கருதுகின்றனர்'. இக்கருத்தை மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் மறுத்துக் கந்த சிஷ்யனும், கந்தசேனனும் வேறு வேருனவர் என்று கூறுகிருர்.[6]

மேலும், 'கந்த சிஷ்யன் என்ற இரண்டாம் கந்தவர்மன் திருக்கழுக்குன்றத்துக் கோவிலுக்கு நிபந்தம் விட்டிருந்தான். அது மீட்டும் முதல் நரசிம்மவர்மன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது என்று இராசராச சோழனது கல்வெட்டுக் குறிக்கிறது[7]. எனவே, கந்தசேனனும், கந்தசிஷ்யனும் வேறு வேருனவர் என்பது தெரிகிறது. கந்தசிஷ்யன் இரண்டாம் கந்தவர்மன் என்பது உறுதிப்படுகிறது.

**காஞ்சியில் வாகாடகர் ஆட்சி**

வாகாடகர் கி. பி. 4, 5-ஆம் நூற்ருண்டுகளில் பேராரிலும், மத்தியப் பிரதேசத்திலும் பிரபலமாக ஆண்டுவந்தனர். இவர்கள் குப்தர், விஷ்ணு குண்டின், கதம்பர். முதலிய வம்சத்தினருடன் மணத் தொடர்பு கொண்டிருந்தார்கள்.[8] வாகாடகர்களுள் பேரரசனுக விளங்கிய முதலாம் பிருதிவிசேனன் (கி.பி. 350-390) தெற்கு நோக்கிப் படையெடுத்தான். கதம்ப அரசனைப் போரில் முறியடித்தான்.[9] இப்படையெடுப்பு கி. பி. 350-360-ல் நடந்திருக்கலாம்.[10] இந்தப் பிருதிவிசேனனே கதம்பரை வென்று பிறகு, அணித்திருந்த பல்லவரைத் தாக்கிக் காஞ்சியைக் கைப்பற்றியிருக்கலாம். தன் இளவரசன் அல்லது தானைத் தலைவனுன 'சத்தியசேனன்' என்பவனைக் காஞ்சிக்கு அரசனுக்கி மீண்டிருக்கலாம்[11] என்கிருர் டாக்டர். மா. இராசமாணிக்கனுர். எனவே, வாகாடக மன்னன் சத்தியசேனன் நான்காம் நூற்ருண்டின் இறுதியில் காஞ்சியை ஆண்டிருக்கின்ருன் என்பது உறுதிப்படுகிறது.

**பல்லவர் காஞ்சியை மீட்டல்**

மூன்ரும் நந்திவர்மனது வேலூர்ப்பாளையப் பட்டயம் 'கந்த சிஷ்யன் இரு பிறப்பாளர் தம் கடிகாவைச் சத்தியசேனன் என்ற அரசனிடமிருந்து மீட்டான். அவனுக்குப்பின் வந்த குமாரவிஷ்ணு காஞ்சியைக் கைப்பற்றினுன்' என்ற செய்தி குறிக்கப்பட்டுள்ளது. எனவே இக்கூற்றிலிருந்து வாகாடகர் ஆட்சியில் காஞ்சியும்,

பகுதியும் இருந்தன என்பது புலனாகிறது. காஞ்சியைக் கைப்பற்றிய குமாரவிஷ்ணுசத்தியசேனனைக் ,காஞ்சியை விட்டு ஓட்டினானே ஒழிய நாட்டை விட்டே ஓட்டியதாகத் தெரியவில்லை.

**கந்தசேனன் யார்?**

மேலே கூறிய வாகாடக ஆட்சி பற்றி ஆய்கிற போது, வாகாடகர் அரசன் சத்தியசேனன் வலிமை குன்றினான். ஆனால் அவன் பல்லவ நாட்டின் ஒரு பகுதியை ஆண்டிருக்கிறான். அவனுக்குப் பின் வந்தவர்கள் பல்லவப் பேரரசர்களுக்கு அடங்கிய சிற்றரசராக இருந்திருக்கின்றனர். திருவல்லம் குகைக் கோயிலை வெட்டுவித்த கந்தசேனன் வாகாடக அரச மரபில் வந்தவனாக இருக்கலாம். 'நாங்கள் பேரரச மரபில் வந்தவர்கள் ஆனால் இன்று பல்லவப் பேரரசிற்கு அடங்கிய சிற்றரசர் ஆகிவிட்டோம்' என்று நமக்கு எடுத்துக் காட்டுவது போலத் தாம் வெட்டிய கல்வெட்டில், 'மயேந்திரப் போத்தரசரு அடியான் வயந்தப் பிரி அரசரு மகன் கந்தசேனன்' வெட்டி வைத்துள்ள வாசகம் உள்ளது. ''சேனன்'' என்ற சிறப்புப் பட்டத்தை அக்காலத்தில் பெற்றிருந்தவர்கள் வாகாடகர் என்பது, கந்தசேனன் அம்மரபினன் என்று கருதச் சான்றாக அமைந்துள்ளது.

முடிவு

இதுவரை நாம் சிந்தித்தவற்றிலிருந்து திருவல்லத்துக் குடைவரை கோயிலிலுள்ள மகேந்திரன் காலத்துக் கல்வெட்டு பழைய தமிழ் கல்வெட்டு என்பதும், அதைக் கந்தசேனன் தன் தந்தை வயந்தப் பிரியன் பெயரால் வெட்டுவித்தான் என்பதும், இக்கந்தசேனன் வாகாடக அரச மரபில் வந்தவன் என்பதும், அவன் மகேந்திரனது சிற்றரசனாக வல்லம் பகுதியை ஆண்டான் என்பதும் அறிய வருகின்றன.

## குறிப்புகள்

1. மயிலை. சீனி. வேங்கடசாமி, மகேந்திரன், பக்கம் 59
2. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு—பக்கம் 91
3. புகழியூர்க் கல்வெட்டு
4. மீனாட்சிபுரம் கல்வெட்டு
5. S. I. I. XII Introduction. Page 2. 3 & 9.
6. மகேந்திரவர்மன்—பக்கம் 59 அடிக்குறிப்பு
7. கே. ஏ. என். சாஸ்திரி, சோழர்கள்; Vol. II. Part I, p 486
8. கலைக்களஞ்சியம் தொகுதி 1, ப. 650
9. Dubrui, Ancient History of Dekkhan, pp 98—100
10. R. Gopalan, Pallava's of Kanchi, p 71
11. டாக்டர். மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப. 60

# திருநின்றவூர்

## ஜி. சி. பட்டாபிராம்

காஞ்சிக்கு வரும் கலா ரசிகர்கள் ராஜசிம்மன் கட்டிய கைலாச நாதர் கோவிலைக் கண்டு களிக்காமல் திரும்ப முடியாது. இது ராஜசிம்மன் கல்லில் எழுப்பிய காப்பியம். இந்தக் கலைக் கோவிலை பார்த்து ரசித்த சாளுக்கிய மன்னர் இதைப் போலவே தன் நகரில் லோகமாதேவி ஈஸ்வரர் என்ற அழகிய கோவிலைப் பல கலைஞர்களைக் காஞ்சியிலிருந்து தன் தலைநகருக்கு அழைத்துப் போய் கட்டினான். இதை விருபாக்ஷர் கோவில் என அழைக்கிறார்கள். இக்கோயிலின் அழகைக் கண்டு ரசித்த ராய மன்னன் இவ்விருபாக்ஷர் கோவிலை மாதிரியாக வைத்துக் கொண்டு எல்லோராவில், கைலாசர் கோவிலைக் கட்டினான். ராஜசிம்மனது கட்டிடக் கலை காஞ்சியில் இருந்து எல்லோரா வரை சென்று வெற்றி கண்டது. உலகப் புகழ் பெற்ற எல்லோரா கைலாசர் கோவில் பல்லவர் பாணியை அடிப்படையாகக் கொண்டது.

ராஜசிம்மன் காஞ்சியின் இந்த அழகான கோவிலைக் கட்டிக் கொண்டிருந்தபொழுது பூசலார் என்ற ஒரு சிவபக்தர் ஒரு சிவன் கோவிலைக் காஞ்சிக்கு அருகில் இருக்கும் தான் பிறந்த திருநின்ற ஊரில் கட்டினார். சேக்கிழார் வெகு அழகாக

''அடி முதல் உபானம் ஆதி
ஆகிய படிகள் எல்லாம்
வடிவுறு தொழில்கள் முற்ற
மனதினால் வகுத்துமான
முடிவுறு சிகரம் தானும்
முன்னிய முழத்திற் கொண்டு
நெடிது நாள் கூடக் கோவில்
திறம்படி நினைவால் செய்தார்''

என்று கூறுகிறார்.

பல்லவ அரசன் ராஜசிம்மன் போல் பெரும் செல்வத்தால் கோயில் கட்ட முடியாவிட்டாலும் அவர் பக்தி முயற்சியால் மான சிகமாகவே தம் ஊரின் குளக்கரையில் உட்கார்ந்து கொண்டு தியானித்தவாரே கோயிலைக் கட்டினர். கைலாசநாதர் கோவில் முடிந்தது.

''காடவர் கோமான் கச்சிக்
கற்றளி எடுத்து முற்ற
மாடெல்லாம் சிவனுக்காகப்
பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமா லறியாதாரைத்
தாபிக்கும் அன்னாள் முன்னாள்
ஏடலார் கொன்றை வேய்ந்தார்
இரவிடை கனவில் எய்தி''

பூசலாரும் அரசனும் ஒரே நாளில் கும்பாபிஷேகம் வைத்துக் கொண்டதால் சிவபெருமான் அரசன் கனவில் தோன்றி 'நின்ற ஊர் பூசல் அன்பன் நெடிது நாள் நினைவில் செய்த, நன்று நீடால யது நாளை நாம் புகுவோம். நீ இங்கு ஒன்றிய செய்தல் நாளை ஒழித்த பின் கொள்வாய் என்று சொன்னார். அரசன் பரிவாரங் களுடன் திருநின்ற ஊருக்குச் சென்று உண்மையை அறிந்து பல்லவ சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் பக்தி உயர்ந்தது என்று தெளிந்து பூசலாரை வணங்கித் திரும்பினான்.

பிறகு சேக்கிழார்,

''நீண்ட செஞ்சடையனார்க்கு
நினைப்பினால் கோயிலாக்கிப்
பூண்ட அன்பிடை யறாத
பூசலார் பொற்றாள் போற்றி''

என்று பூசலார் கதையை முடிக்கிறார். மாசிலாப் பூசலார் 'மன தினால் முயன்ற கோயில்' கச்சியில் ராஜசிம்மன் அமைத்த, பல கலா ரசிகர்களால் புகழ்கிற, கற்றளியைவிடச் சிறந்தது எனச் சேக்கிழார் எடுத்துரைக்கிறார்.

இது ஒரு அழகிய சிறுகதை போல் தோன்றுகிறது. சாண்டில்ய உபனிஷத்தில் வண்டி ஓட்டும் ரெய்வசனைத் தேடி ஜனஸ்ருதியின் பேரன் பல்லாக்ஷன் என்ற அரசன் போவதையும், அலக்ஸாண்ட ரும் ஸ்ரீயாஜினிஸ் கதையையும் ஞாபகம் ஊட்டுகிறது. ஆனால் இது நிஜமாகவே நடந்திருக்கலாம். கைலாசநாதர் கோவிலில் உள்ள ஒரு கல்வெட்டு நற்குணங்கள் விலகி நிற்கும் இக்கலியுகத்தில் ராஜசிம்மன் அசரீரி வாக்கை கேட்ட பெருமையுடையவன் எனக் கூறி பல புராணபுருஷர்கள் அசரீரியைக் கேட்டதையும் குறிக்கிறது.

இச்சரித்திர நிகழ்ச்சிகள் நடந்த திருநின்ற ஊர் இன்று தின்ன னூர் என அழைக்கப்பட்டு சென்னைக்கு அருகில் இருக்கும் திரு வள்ளூரை அடுத்து இருக்கிறது. பஸ்ஸிலும் ரயிலிலும் வசதி யாக செல்லலாம். கைலாசநாதர் கோயிலைக் கண்டு களித்த கலா

ரசிகர்கள் இந்த ஊருக்குக் கட்டாயம் செல்ல வேண்டும். இது ஒரு புனிதமான இடம்.

பூசலார் சரிதத்தைப் படித்த பக்தர்கள் பூசலார் ஞாபகமாக இங்கு ஒரு கோவில் கட்டி இருக்கிறார்கள். கோயில் வெகு சிறிது. கோபுரம் கிடையாது. ஒரு தகரக்கொட்டகை அதன் அழகைக் கெடுக்கிறது. கோவிலில் இருந்த கல்வெட்டுக்கள் சிதிலமாகி இருப்பதால் நமக்கு இக்கோவில் எப்போது யாரால் கட்டப்பட்டது என்பது அறிய முடியவில்லை. கி. பி. 1905-ல் தேவ கோட்டை சீதை ஆச்சி இக்கோவிலைத் தேடிக் கண்டுபிடித்துத் திருப்பணி செய்திருக்கிறார்கள்.

ஸ்வாமியின் பெயர் ஹிருதயாலயேஸ்வரர். அம்பாளின் பெயர் மரகதாம்பிகை. கருவறையில் லிங்கத்திற்கு அருகிலேயே பூசலாரின் சிலையும் உள்ளது. பூசலாரின் செப்பு விக்கிரகம் ஹிருதயத்தின் அருகில் லிங்கத்துடன் அமைக்கப்பட்டிருக்கிறது. அழகாக இல்லை. ஆனால் இக்கோயிலில் உள்ள பிக்ஷாடனர் மோஹினி விக்ரகங்கள் அழகானவை. கோவிலைப்பார்ப்பவர்களுக்கு பூசலாரின் உயர்ந்த பக்திக்கு ஏற்பக் கோயில் அமையவில்லை எனத் தோன்றுகிறது.

இக்கோவிலுக்கு அருகிலேயே திருமங்கையாழ்வாரால் போற்றப்பட்ட பக்தவத்ஸலர் கோயில் உள்ளது. இப்பெருமாளைப் பாரவிப் பெருமாள் என அழகான தமிழ்ப் பெயரால் அழைக்கிறார்கள், அம்பாள் பெயர் என்னைப்பெற்ற தாயார். அதை வடமொழிப் படுத்தி ஸ்ரீமத்ஸவித்ரி நாயகி எனக் கூறுகிறார்கள். லக்ஷ்மி:தேவியானவள் பூவுலகிற்கு வரும்போது ஸ்திரமாக இங்கு தங்கிவிட்டபடியால் இதற்குத் திருநின்றவூர் எனப் பெயர் ஏற்பட்டது. திருமங்கையாழ்வார் கண்ணமங்கை பாசுரத்தில் 'நின்றவூர் நின்ற நித்திலத்தொனை' என்று பாடுகிறார். இங்கு :பெருமாள் நின்ற கோலத்தில் பக்தர்களுக்குச் சேவை தருகிறார். கடல் மல்லை தலசயனப் பாசுரத்தில் திரும்பவும் 'நின்றவூர் நித்திலத்தை' எனக் குறிக்கிறார்.

இவ்வூர் இலக்கிய உலகத்திலும் பிரசித்தியடைந்திருக்கிறது. இவ்வூரில் வசித்த காளத்திவாணர்மேல் ஒரு புலவர்,

''நீளத் திரிந்து உழல்கின்றாய்
நீங்கா நிழல் போல
நாளைக்கு இருப்பாயோ?
நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால்

நீ எங்கே? நான் எங்கே?
இன்றைக்கே சற்றே இரு''

என்று பாடியது இலக்கியப் பிரசித்தி பெற்றது. அவை வேறு அனுபவிக்க வேண்டிய பாடல்.

திருநின்ற ஊர் சிறிதானாலும் கீர்த்தி பெரிது. வைணவர்களுக்கும் சைவர்களுக்கும் புனிதமான இடம். இலக்கிய உலகிலும் பிரசித்தி அடைந்திருக்கிறது.

# வேளச்சேரி சிவன் கோயில்

பெ. அர்த்தநாரீசுவரன்

### ஊர் அமைப்பு

வேளச்சேரி செங்கை மாவட்டத்தில் சைதை வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊராகும். இவ்வூர் கிண்டிக்கு மேற்கிலும் திருவான்மியூருக்கு அருகிலும் அமைந்துள்ளது. சென்னையிலிருந்து கிண்டி வழியாக இவ்வூருக்குப் பேருந்துகள் செல்கின்றன. இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

வேளச்சேரியில் அமைந்துள்ள தண்டீசுவரமுடைய நாயனார் என்னும் சிவன் கோயிலின் அமைப்பையும் அக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளையும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### கோயில் அமைப்பு

கோயிலின் வாயில் தெற்குப் பார்த்து அமைந்துள்ளது. கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயில் வாயிலின் நேராக அர்த்த மண்டபம் அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தில் இரண்டு தேவகோட்டங்கள் உள்ளன. தென்புறமுள்ள தேவ கோட்டத்தில் விநாயகரும், வடபுறமுள்ள தேவகோட்டத்தில் துர்க்கையும் வைக்கப்பட்டுள்ளன.

கோயில் விமானம் நாகர அமைப்பில் (சதுர வடிவில்) அமைந்துள்ளது. அடிப்பாகம் உபபீடத்திலிருந்து தொடங்குகிறது. ஜகதி வளைவுகளின்றி நேராக அமைந்துள்ளது. குமுதம் முப்பட்டையாக அமைந்துள்ளது. இதனை 'முப்பட்டைக் குமுதம்' என்பர். கருவறையைச் சுற்றி மூன்று தேவகோட்டங்கள் உள்ளன. தென்புறமுள்ள தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தியும், மேற்குப்புறமுள்ள தேவ கோட்டத்தில் லிங்கோத்பவரும் வடபுறமுள்ள தேவகோட்டத்தில் பிரம்மாவும் வைக்கப்பட்டுள்ளனர். லிங்கத்தின் அடியில் பிரம்மாவும் விஷ்ணுவும் உள்ளனர். பிரம்மாவின் வாகனம் அன்னம் லிங்கத்தின் மேற்புறத்தில் காணப்படுகின்றது. துவார பாலகர்கள் நான்கு கைகளுடன் காணப்படுகின்றனர். அம்மன் சந்நதியும் உள்ளது. விமானத்திலுள்ள சிற்பங்கள் சிறப்பு வாய்ந்தனவாகும்.

### கல்வெட்டுகள்

தண்டீசுவரமுடைய நாயனார் கோயிலில் பதினேழு கல்வெட்டுகள் உள்ளன. இவை திருத்தண்டீசுவரர் உண்ணாழிச் சுவரிலும்

மகாமண்டபத்திலும் காணப்படுகின்றன. அம்மன் கோயிலிலோ அல்லது கோயிலின் மற்ற பகுதிகளிலோ கல்வெட்டுகள் காணப்படவில்லை. கிடைத்த பதினேழு கல்வெட்டுகளில் முழுமையானவை பன்னிரண்டு. முற்றுப் பெருத கல்வெட்டுகள் இரண்டு. சிதைந்த கல்வெட்டுகள் மூன்று. கல்வெட்டுகள் அனைத்தும் தமிழ் எழுத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளன. சிற்சில இடங்களில் தமிழ்-கிரந்தம் காணப்படுகின்றது. எல்லாக் கல்வெட்டுகளும் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்றே தொடங்குகின்றன.

### கல்வெட்டுகளின் காலமும் குறிப்பிடும் அரசர்களும்

இக்கோயில் கல்வெட்டுகள் சோழ அரசு, பல்லவ அரசு காலத்தில் பொறிக்கப்பட்டவை, மதுரை கொண்ட இராசகேசரிவர்மன் சுந்தர சோழன், மும்முடிச் சோழன் இராசராசன் I, இராசேந்திரன் I, இராசராசன் II, குலோத்துங்கன் III, இராசராசன் III, ஆகிய சோழ மன்னர்களின் கல்வெட்டுகளும் கோப்பெருஞ்சிங்கன் என்ற பல்லவ அரசனின் கல்வெட்டும் இக்கோயிலில் காணப்படுகின்றன. இவ்வரசர்கள் கி. பி. 10—13 நூற்ருண்டுகளில் ஆட்சி புரிந்தவர்கள், எனவே இங்கு காணப்படும் கல்வெட்டுகள் கி. பி. 1 —13 நூற்ருண்டுகளுக்கு இடைப்பட்டவைகளாகும்.

### கோயில் கட்டப்பட்ட காலம்

தண்டீசுவரமுடைய நாயனர் கோயிலில் கிடைக்கும் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தியது மதுரை கொண்ட இராசகேசரி வர்மன் சுந்தர சோழனுடையதாகும். இவனுடைய 5, 7 ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. எனவே இக் கோயிலைக் கட்டியவன் இவனகத்தான் இருக்க வேண்டும்.

'செங்கற்பட்டு மாவட்டம்' என்ற நூலில் திரு. சேர்மலெ அவர்கள் இக்கோயில் கண்டராதித்தனுடையது என்று கூறுகின்ருர். ஆனல் கண்டராதித்தனுடைய கல்வெட்டுகள் இக் கோயிலில் நமக்குக் கிடைக்கவில்லை.

இக்கோயிலிலுள்ள சிற்பங்கள் சிறப்பு வாய்ந்தவை. லிங்கத்தில் பிரம்மாவின் அன்னம் காணப்படுவதால் இது சிறப்புடையதாகும். அதனல் இக்கோயில் உத்தம சோழன் காலத்தைச் சார்ந்தது என்று டக்ளாஸ் பேரெட் அவர்கள் 'Ea ly chola Art' என்ற புத்தகத்தில் குறிப்பிடுகின்ருர். ஆனல் உத்தம சோழனுடைய கல்வெட்டுகள் இக்கோயிலில் நமக்குக் கிடைக்கவில்லை.

எனவே இக்கோயிலைக் கட்டியவன் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இக்கோயிலில் சுந்தர

சோழனின் 5-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுதான் காலத்தால் முந்தியது. எனவே இக்கோயிலைக் கட்டியவன் சுந்தர சோழன் என்று கொள்வது தவறாகாது. இவ்வாறு கொண்டால் இக்கோயில் கி. பி. 961-ஐச் சார்ந்தது என்று கூறலாம்.

இன்றைய வேளச்சேரி சுமார் 1100 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது சுந்தர சோழனுடைய காலத்தில் புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டு ஊராகவே இருந்து வந்தது. முதலாம் இராசேந்திரன் காலத்திற்குப் பிறகு வெளிச்சேரி ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டு ஊராகக் குறிப்பிடப் படுகின்றது. இரண்டாம் இராசராசன் காலத்தில் வெளிச்சேரி 'சினசிந்தாமணி சதுர்வேதி மங்கலம்' என்றழைக்கப் பட்டது. இவன் காலத்தில் புலியூர்க் கோட்டம் என்பது 'குலோத் துங்க சோழ வளநாடு' என்று மாற்றுப் பெயரில் அழைக்கப்படு கின்றது. கல்வெட்டுகளில் வேளச்சேரி 'வெளிச்சேரி' என்றே குறிப்பிடப்படுகின்றது.

**கல்வெட்டில் இறைவன் பெயர்**

பெரும்பாலும் எல்லாக் கல்வெட்டுகளிலும் இறைவன் 'திருத் தண்டீசுவரர்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளார். முதலாம் இராச ராசன் கல்வெட்டு 'திருத்தண்டீசுவரத்து திருக்கற்றளி மகாதேவர்' என்று இறைவனைக் குறிப்பிடுகின்றது. முதலாம் இராசேந்திரன் கல்வெட்டு 'திருத்தண்டீசுவரமுடைய தேவர்' என்று குறிப்பிடு கின்றது. மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டில் இறைவன் 'திருத்தண்டீசுவரமுடைய நாயனார்' என்றும், 'திருத்தண்டீசுவர முடைய மகாதேவர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளார். மூன்றும் இராசராசன், பல்லவமன்னன் கோப்பெருஞ்சிங்கன் ஆகியோர் கல்வெட்டுகளில் இறைவன் 'உடையார் திருத்தண்டீசுவரமுடைய நாயனார்' என்று குறிப்பிடப்பட்டுள்ளார்.

**கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ள கொடைகள்**

தமிழகக் கோயில் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை அக் கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட கொடைகளைப் பற்றியே குறிப் பிடுகின்றன. 'பெரும்பாலான கல்வெட்டுகள் சந்தி விளக்கு அல்லது நொந்தா விளக்கு எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட கால் நடைகள், திருவமுதுக்காகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் ஆகிய வற்றைக் குறிக்கின்றன.

தண்டீசுவரமுடைய நாயனார் கோயிலில் உள்ள ஐந்து கல்வெட்டுகள் சந்திராதித்தவரை நொந்தா விளக்கு எரிப்பதற்கு சாவா மூவா பேராடுகள் 90 கொடுத்ததைக் குறிக்கின்றன. இச்

கொடை கொடுத்த ஐவருள் மூவர் ஆண்கள். இவர்கள் வெளிச்சேரி ஊர்ச்சபையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் 'ஆளுங்கணத்தார்' என்று குறிக்கப்படுகின்றனர். மற்ற இருவர் பெண்கள். ஒருவர் உள்ளூர் ஆளுங்கணத்தாரின் மனைவி. மற்றொருவர் வைசாலிப் பாடி ஊர்க் குறும்பைச் சேர்ந்த ஒருவரின் தாயார்.

வேறொரு கல்வெட்டு 23 காசு கொடுத்து ஒரு நொந்தா விளக்கு எரித்ததைக் குறிக்கின்றது. மற்றொரு கல்வெட்டு ஆற்றூர் கூற்றத்தைச் சேர்ந்த சகோதரர்கள் திருவமுதுக்காகக் கொடுத்த நிலத்தின் வருவாயின் ஒரு பகுதியின் மூலம் நொந்தா விளக்கு எரிக்கக் கொடுத்ததைக் குறிக்கின்றது.

சந்திராதித்தவரை ஏற்றப்பட்ட சந்தி விளக்குக் கொடுத்த கொடைகள் பற்றி ஐந்து கல்வெட்டுகள் கூறுகின்றன.

இரண்டாம் இராசராசன் காலத்திய கல்வெட்டு வெளிச்சேரியைச் சேர்ந்த கரணத்தார் ஒருவரின் குமாரர் இக்கோயில் இறைவன் திருத்தண்டீசுவரருக்கு இரண்டு சந்தி விளக்குகள் எரிப்பதற்குப் பழங்காசுகள் ஐந்து கொடுத்ததைக் குறிப்பிடுகின்றது.

பல்லவமன்னன் கோப்பெருஞ்சிங்க தேவன் காலத்திய கல்வெட்டு 'கீரங்குடிஇல் மருதுடையான் சோறன் அரியாயா தணன்' இன்னயனூர்க்குச் சந்திராதித்தவரை சந்தி விளக்கு எரிக்கக் கொடுத்த பணம் ஒன்பது பற்றிக் கூறுகின்றது.

முதலாம் இராசராசன் கல்வெட்டு, மூன்றும் இராசராசன் கல்வெட்டு முதலியன சந்தி விளக்கு எரிக்கக் கொடுத்த கொடையைப் பற்றிக் கூறுகின்றன.

**செல்லியம்மன் கோயில்**

சிவன் கோயில் குளத்தை அடுத்து ஏரிக்கரையில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் உண்ணாழியின் பின்புறச் சுவரில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. ஒன்று 'கோபார்த்திவேந்திராதி' என்ற குறுநிலமன்னனின் 10ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு. இவன் சுந்தர சோழனுக்குப் பாண்டிய நாட்டுப் போரில் உதவியவன்.

இன்று செல்லாயி, செல்லியம்மன் என்றழைக்கப்படும் இக்கோயில் உறைதெய்வம் சுந்தர சோழன் காலத்தில் 'சப்தமாத்திரிகர்' என்று அழைக்கப்பட்டமையை இக்கோயிலில் உள்ள கல்வெட்டால் அறிகின்றோம். இக்கல்வெட்டு இக்கோயில் தெய்வத்

திற்குத் திருவமிர்துக்காக சோழநாட்டு மழநாட்டு திருவெட்பூர் ஊரினுல் கொடுக்கப்பட்ட நிலக்கொடையைக் குறிப்பிடுகின்றது. மற்ருெரு கல்வெட்டு 'கோப்பரகேசரி பன்மர்க்கு' என்று குறிக் கின்றது. இக்கல்வெட்டின் எழுத்தமைதி கொண்டு பார்த்தால் உத்தமசோழன் காலத்ததுபோல் தோன்றுகின்றது.

**விஷ்ணு கோயில்**

வேளச்சேரி தெலுங்கு பிராமணர் தெருவில் கிழக்குப் பார்த்து இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் அர்த்தமண்டபவிதா னத்தில் இரண்டு சிதைந்த கல்வெட்டுகள் உள்ளன. ஒரு கல் வெட்டு இராசராசனின் 26ஆவது ஆட்சியாண்டையும் அவனது மேய்க்கீர்த்தியையும் கூறுகின்றது. மற்ருெரு கல்வெட்டும் பாதி யாகவே உள்ளது. முதலாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் வரும் சொற்கள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டில் காணப் படும் அரைகுறைச் சொற்களைக் கொண்டு இது சாவா மூவா பேராடு கொடையைக் குறிக்கின்றது என்று கூறலாம்.

**முடிவுரை**

வேளச்சேரி கோயில் சிறிதாக இருந்தாலும் அழகாகவும் நல்ல சிற்பங்களை உடையதாகவும் விளங்குகின்றது. இக்கோயில் கல் வெட்டால் ஊர்சபை இருந்ததை அறிகின்ருேம். இரண்டாம் இராசராசன் கல்வெட்டால் இவ்வூர் பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்டதை அறிகின்ருேம். (சின சிந்தாமணி சதுர்வேதி மங்கலம் என்று கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது). இக்கோயில் போற்றிப் பாதுகாக்கப்படவேண்டிய ஒன்ருகும்.

# தொண்டை மண்டலத்தின் அண்மைக் காலக் கண்டுபிடிப்புகள்

நடன. காசிநாதன்

## முன்னுரை

தமிழகத்திலேயே தொண்டை மண்டலத்தில்தான் ஆதிகால மனிதர்கள் வாழ்ந்த இடங்களும், அவர்கள் பயன்படுத்திய கற்கருவிகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. திருவள்ளூர் வட்டத்திலுள்ள பூண்டி நீர்த்தேக்கத்துக்கு அண்மையில், அத்திரம்பாக்கம் என்னும் ஊருக்கருகில் கொற்றலையாற்றுப் பகுதியில் பழைய கற்கால மனிதர்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரமாகப் பல கற்கருவிகளை இந்தியத் தொல் பொருள் ஆய்வுத்துறையினர் ஒரு நூற்றாண்டுக்கு முன்பேயே கண்டெடுத்திருக்கின்றனர். இம்மாதிரி பழங்காலக் கற்கருவிகள் இப்பகுதியில் கிடைக்கும் என்பதற்கான எண்ணத்தை ஏற்படுத்தியதற்குச் சென்னையை ஒட்டிய பல்லாவரத்தில் 1863-ல் ராபர்ட் புரூஸ் புட் என்ற நில அமைப்பியல் அறிஞரால் கண்டெடுக்கப்பட்ட கற்கருவியே காரணமாகும்.

சென்னையிலிருந்து செங்கற்பட்டுக்குச் செல்லும் பெருவழியில் சானூருக்கு அருகில் பெருங்கற்காலச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அதே போன்று தொண்டைமண்டலத்தில்தான் பழமையானகுகைக் கோயில்கள் அதிக அளவில் காணப்படுகின்றன. உதாரணமாக, பல்லாவரம், சிங்கப்பெருமாள் கோயில், வல்லம், மாமல்லபுரம், சாளுவன் குப்பம், திருக்கழுக்குன்றம் ஆகிய இடங்களைக் கூறலாம். இங்குதான் முதன் முதலில் கட்டடக் கலைகள் உருவாகின. மாமல்லையிலுள்ள கடற்கரைக் கோயிலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலும் கட்டடக் கோயில்களின் முன்னோடிகளாகும்.

இவ்வாறு பல பழம் பொருட்களுக்குத் தாயகமாக விளங்கும் தொண்டை மண்டலம் இன்றும் பல அரிய பழம் பொருட்களை ஆய்வாளர்களின் பார்வைக்கு வழங்கிக் கொண்டே உள்ளது.

## புத்தர் புடைப்புச் சிற்பம்

சென்னையின் மையப் பகுதியாக விளங்கும் இராயப்பேட்டையில், பெரிய பாளையத்து மாரியம்மன் கோயிலுக்கு அருகில் உள்ள

புற்று ஒன்றில் கி. பி. 2-3-ம் நூற்றுண்டைச் சேர்ந்த புத்தர் புடைச்சிற்பம் கண்டுபிடிக்கப்பட்டது. இரண்டு, புத்தர் உருவங்கள் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றன. இவ்வுருவங்களுக்குப் பக்கத்தில் ஆடவர் இருவர் நின்ற நிலையில் கவரி வீசுகின்றனர்.

கலைப்பாணியையும், கல்லின் தன்மையையும் கொண்டு பார்க்கையில் ஆந்திராவில் உள்ள அமராவதி நாகார்ஜுனகொண்டா கலைப்பாணியை ஒத்து வருவதாக உள்ளது. இதுவரையில் சென்னையில் கிடைக்கப் பெற்ற சிலைகள் எல்லாவற்றிலும் இது மிகப் பழமையானதாகும்.

**பல்லவர் காலத் துர்க்கைச் சிற்பம்**

சென்னை, தேனும்பேட்டையில் ‘காரனெட்’ மூர்த்தி என்பாருக்குச் சொந்தமான சிறப்புக் கிடங்கில் பல்லவர்காலத் துர்க்கைச் சிற்பம் இருப்பது அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது.

இச்சிற்பம் ஆறடிக்குமேல் உயரமுடையதாக பல்லவர் கால எல்லா அம்சங்களுடனும் காணப்படுகிறது. எருமைத்:தலை மீது நின்ற நிலையில் எண் கரங்களைக் கொண்டு, அன்னை காட்சித் தருகிருள். இடப்பக்கம் மான் உள்ளது. சிற்பத்தின் இருமருங்கிலும் வட்டெழுத்தில் கல்வெட்டுக் காணப்படுகிறது. இத்தேவிக்கு அமுது படைப்பதற்காக நெல் அளிக்கப்பெற்றதை இக்கல்வெட்டுக் கூறுகிறது.

கல்வெட்டின் எழுத்தமைதியும், சிற்பத்தின் உருவ அமைதியும் இச்சிற்பம் சுமார் கி. பி. 7-ஆம் நூற்றுண்டைச் சார்ந்ததாக இருக்கலாம் என்பதைப் புலப்படுத்துகின்றன.

**கோழி நினைவுக்கல்**

செங்கற்பட்டு மாவட்டம், அச்சரப்பாக்கத்துக்கு அருகில் உள்ள இந்தலூர் என்னும் சிற்றூரில் கோழி நினைவுக்கல் ஒன்று காணப்படுகிறது. இக்கல்லை இவ்வூர் மக்கள் தெய்வமாகக் கருதி வழிபட்டு வருகிறுர்கள்.

இக்கல் இன்று ஒரு விநாயகர் கோயிலுக்கு முன்பாக நடப்பட்டிருக்கிறது. கல்லில் சேவல் ஒன்று கம்பீரமாகச் செதுக்கப்பட்டுள்ளது. அவ்வுருவத்துக்கு மேற்பகுதியில் வட்டமெழுத்துக் கல்வெட்டு பொறிக்கப்பட்டு காணப்படுகிறது. அதில்,

‘‘இழுச்சேரிக் கோழி பொடு கொத்த’’

என்று எழுதப்பட்டுள்ளது.

இதிலிருந்து இக்கோழி கீழுச்சேரியைச் சார்ந்ததாகக் காணப்படுகிறது. 'பொடுகொத்த' என்ற சொற்களின் பொருள் சரியாக விளங்கவில்லை. ஒரு வேளை 'பொடு' என்பது பொட்டு என்பதிலிருந்து குறுகியதோ என்று எண்ண வேண்டியுள்ளது. அவ்வாறெனில் 'பொடு' என்பதைத் தானியம் என்று கொள்ளலாம். இக்கல்லில் கோழிக்கு முன்பாக ஏதோ தானியம் இறைந்து கிடப்பது போன்று காட்டப்பட்டிருப்பதும் இக்கருத்தை உறுதிப்படுத்துவதாகத் தோன்றுகிறது. எனவே ''தானியங்களைக் கொத்தித் தின்னும் கோழி'' என்று கருதலாம்.

அது இறந்துபோகவே அதற்கும் நினைவுக்கல் எழுப்பி வழிபட்டு வந்திருக்கிறது தமிழினம். இக்கல்வெட்டுத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால், திரு. தாமரைக்கண்ணன் என்பாரின் உதவியால் கண்டுபிடிக்கப்பட்டது.

கல்வெட்டமைதியையும், கோழிச்சிற்பத்தின் கலைப் பாணியையும் கருத்தில் கொண்டு பார்க்கையில் இது கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத் தெரிகிறது. செங்கற்பட்டு மாவட்டத்தில் வட்டெழுத்துக் கல்வெட்டு செங்கற்பட்டு என்னும் ஊரில் மட்டும் தான் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அக்கல்வெட்டு இப்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இக்கோழி நினைவுக் கல்வெட்டு வட்டெழுத்துக் கல்வெட்டு வரிசையில் செங்கற்பட்டு மாவட்டத்தில் இரண்டாவதாக அமைகிறது. காலத்தால் இக்கோழி நினைவுக் கல்வெட்டுதான் இம் மாவட்டத்தில் முதலாவதாக நிலைபெறும்.

### குன்றத்தூர் சப்தகன்னிகள்

செங்கற்பட்டு மாவட்டம் குன்றத்தூர் முருகன் தலத்துக்குப் பெயர் போனது. அத்தோடு பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் பெருமான் அவதரித்தத் திருத்தலமும் இதுவேயாகும்.

இவ்வூரில் செல்லியம்மன் கோயில் என்று ஒரு சிறு கோயில் உள்ளது. செங்கற்களால் கட்டப்பட்டது. இக்கோயிலின் உண்ணாழியில் கன்னிமார் எழுவரின் சிற்பங்கள் வரிசையாக பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன. கோயில் வடக்குப் பார்த்து உள்ளது. தெய்வங்களும் வடக்குத்திசை நோக்கியே அமர்ந்திருக்கின்றன. கன்னிமார்களின் வலதுப் பக்க இறுதியில் சிவன் யோகேஸ்வரராகவும், இடதுப் பக்க இறுதியில் விநாயகரும்

காணப்படுகின்றனர். அனைத்து உருவங்களும் மணற்கல்லினால் உருவாக்கப்பட்டவையாகும்.

கன்னிமார்களில் பிராமி, மாஹேஸ்வரி, கௌமாரி, வாராஹி, சாமுண்டா ஆகியோரின் உருவங்கள் மட்டுமே இப்பொழுது காணப்படுகின்றன. மற்ற உருவங்கள் இயற்கைத் தாக்குதல்களால் சிதைந்துவிட்டன. அனைத்து உருவங்களிலும் வாராஹியின் உருவம் மிகவும் வனப்பு வாய்ந்ததாகும். சற்றே இடப்புறம் தமது முகத்தைத் திருப்பி அமர்ந்திருக்கும் பாங்கு வேறெங்கும் பார்க்க முடியாத ஒன்றாகும்.

யோக மூர்த்தியின் முகப்பொலிவைக் கண் இமையாமல் பார்த்துக்கொண்டே இருக்கலாம் போன்று தோன்றுகிறது. வலக்காலை மடக்கி ஆசனத்தில் வைத்து இடக்காலைக் கீழே தொங்கவிட்டு, வலது கீழ்க் கையில் சின் முத்திரையைக் காட்டி யோக நிலையில் வீற்றிருக்கும் அழகே அழகு. ஈடு கூறமுடியாத அழகாகும்.

இச்சிற்பங்களின் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறலாம். இதுவரையில் தமிழகத்தில் கிடைத்துள்ள சப்த கன்னிகள் சிற்பங்களில் இவைகளே மிகவும் பழமையானதாகத் தோன்றுகின்றன.

## சூணாம்பேட்டு ஐய்யனார்

செங்கற்பட்டு மாவட்டம் சூணாம்பேட்டுக்கு அருகில், சூணாம்பேட்டிலிருந்து கடப்பாக்கம் செல்லும் சாலையின் வடபகுதியில், ஒரு குளக்கரையில் அய்யனார் உருவம் ஒன்று அவ்வூர் மக்களால் வழிபட்டு வரப்படுகிறது.

இவ்வய்யனார் உருவம் ஒரு மீட்டர் உயரமுள்ள பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.

அய்யனார் வலக்காலை மடக்கி ஆசனத்தில் கிடத்தி, இடக்காலைக் குத்திட்டு வைத்து அமர்ந்திருக்கும் நிலை. வலக் கரம் வலது முழங்காலுக்குப் பக்கத்தில் ஊன்றிய நிலையிலும் இடக்கரம் இடது முழங்கால்மீது கிடத்திய நிலையிலும் காணப்படுகின்றன. அரையில் குறுவாள் செருகப்பட்டிருக்கிறது. உதர பந்தம் எடுப்பாகக் காட்சியளிக்கிறது.

தலையில் ஜடாபாரமும், காதுகளில் பத்ர குண்டலங்களும், கழுத்தில் பட்டையான அணியும், தோள்வளைகளும் அய்யனாரின் எடுப்பான உருவத்துக்கு அணிசேர்ப்பனவாக உள்ளன.

அய்யனூர் அமர்ந்துள்ள ஆசனத்தின் இருமருங்கிலும் இரு நாய்கள் ஒன்றுக்கொன்று எதிர் எதிராக அமர்ந்திருக்கின்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளன.

உருவ அமைதியைக் கொண்டு இவ்வய்யனூர் சிற்பம் கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம். இதுவரையில் கிடைத்துள்ள அய்யனூர் சிற்பங்களில் இதுவே மிகப் பழமையான தாகத் தெரிகிறது. இது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையால் கண்டுபிடிக்கப்பட்டது.

**நங்கநல்லூரில் விஷ்ணு சிற்பம்**

சென்னையை அடுத்துள்ள நங்கநல்லூரின் ஒரு பகுதியாக விளங்கும் சர்வமங்கள நகர் லக்ஷ்மி நரசிம்மசுவாமி கோயிலின் அருகில் மண்ணுள் புதைந்துகிடந்த பல்லவர் கால விஷ்ணு சிற்பம் அண்மையில் கண்டெடுக்கப்பட்டது. இச்சிற்பம் 5½ அடி உயரமுள்ளதாக அமர்ந்த நிலையில் உள்ளது. இச்சிலைக்குப் பக்கத்திலேயே உடைந்த நிலையில் காணப்பட்ட பூதேவி சிலையும் கண்டுபிடிக்கப்பட்டது.

இப்பகுதியில் பல்லவர் கால விஷ்ணு கோயில் ஒன்று அமைந்திருக்க வேண்டும் என்பதை இச்சிலைகளைக் கொண்டு ஊகிக்க வேண்டியுள்ளது.

**ஒரத்தியில் பல்லவர் காலத் தூம்பு**

செங்கல்பட்டு மாவட்டம் தொழுப்பேட்டிலிருந்து மேற்கே செல்லும் சாலையில் அமைந்துள்ள ஒரத்தியில் ஒரு விஜயநகர காலச் சிவன் கோயில் உள்ளது. அக்கோயிலின் எதிரில் ஒரு மேடையில் பல்லவர் காலக் கல்வெட்டுப் பொறித்த கற்பலகை கவனிப்பாரற்றுக் கிடப்பது அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது.

அதில் காணப்பெறும் கல்வெட்டு பல்லவ மன்னர் நந்திவர்மன் 24-ம் ஆட்சி ஆண்டில் ஈதுரக் கோட்டத்தைச் சேர்ந்த நெடுங்கல் நாட்டு ஆற்றூரில் வாழும் கொற்றய (ந)ந்தர் மகன் நக்கன் ஒரு தூம்பு செய்தமைத்தான் என்பதைத் தெரிவிக்கிறது. குவண தச்சன் என்பான் அக்கல்வெட்டைப் பொறித்தான் என்பதுவும் காணப் படுகிறது.

அங்கேயே மற்றொரு நடுகல் இருந்ததும் கண்டுபிடிக்கப்பட்டது. அந்நடுகல்லில் தமிழிலும், கன்னடத்திலும் கல்வெட்டுப் பொறிக்கப் பட்டுள்ளன. தமிழ்க் கல்வெட்டு, இராட்டிரகூட மன்னர் கன்னர தேவன் காலத்தில் அந்நடுகல் அமைக்கப்பெற்றதைக் கூறுகிறது.

கல்லில் வீரனது உருவமும், அவனது ஆவியை மேல் உலக மகளிர் வரவேற்கின்ற காட்சியும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

### பல்லவர் கால வண்ண ஓவியம்

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள காஞ்சிபுரத்து கைலாச நாதர் கோயிலில் பல்லவர்கால வண்ண ஓவியங்சள் இவ்வாண்டின் தொடக்கத்தில் கண்டுபிடிக்கப்பட்டன.

சிவபெருமான் யோக மூர்த்தியாகத் தீட்டப்பட்டிருக்கும் ஓவியமும், சிவன், உமாஸ்கந்தர் ஆகியோர் அடங்கிய சோமாஸ் கந்த மூர்த்தியின் ஓவியமும் காண்போர் மனத்தை விட்டு அகலா கவின் மிகுக் காட்சிகளாகும்.

இவ்வோவியங்கள் கைலாசநாதர் ஆலயத்தின் திருச்சுற்றுலயங் களின் சுவர்களில் தீட்டப்பட்டுள்ளன. சிவப்பு, மஞ்சள், வெண்மை ஆகிய நிறங்களில் கலவையினுல் தீட்டப்பட்டிருக்கின்ற ஓவியங்கள் அஜந்தா ஓவியங்களின் வனப்பை ஒத்திருப்பதாகத் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி கூறியுள்ளார். ஒரு இடத்தில் அமர்ந்திருக்கும் நிலையில் தீட்டப் பட்டிருக்கும் தேவியின் ஓவியம் பனைமலை ஓவியத்தை நினைவூட்டும் வண்ணம் உள்ளது.

இவ்வோவியங்கள் இதுவரையில் பிற்காலத்தில் பூசப்பட்ட சுண்ணும்புச் சாந்தினுல் மறைக்கப் பெற்றிருந்தன. இவைகளை இரசாயன முறையில் சுத்தம் செய்து பாதுகாக்கும் பணியில் இந்திய அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் தென் வட்டப் பிரிவினர் ஈடுபட்டிருக்கின்றனர்.

### திருத்தணிச் செப்பேடுகள்

செங்கற்பட்டு மாவட்டம் திருத்தணிக்கு அருகிலுள்ள வேலஞ் சேரி என்னும் ஊரில் கல்யாணசுந்தரர் செப்புத்திருமேனி பூமிக் குள்ளிருந்து தற்செயலாகக் கண்டெடுக்கப்பட்டது. அத்திருமேனி கிடைத்த விதம் பற்றித் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஆய்வு செய்ய சென்றபொழுது அவ்வூரில் இரு செப்புப் பட்டயங்கள் இருப்பது தெரிய வந்தது.

ஒரு செப்புப் பட்டயம் பல்லவ மன்னன் அபராஜிதவர்மன் காலத்தையும் மற்றொன்று சோழமன்னன் முதலாம் பராந்தகன் காலத்தையும் சேர்ந்தவையாகும்.

முதல் செப்புப் பட்டயம் அபராஜிதனின் மூன்றும் ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. இப்பட்டயம் அரசனின்

ஆணையைத் தாங்கி வருபவை என்பதை 'கோனேலை' என்றே அச் செப்புப் பட்டயம் தெரிவிக்கிறது. அபராஜிதமன்னன் திருத்தணியில் திருமலையில் நின்றருளின சுப்ரமண்யர்க்கு ஒவ்வொரு ஆண்டும் ஆயிரக்காடி நெல் மேலிருஞ் செற்று சபையார் அளிப்பதற்காகச் சில காணிகளைத் தேவதானப் பிரமதேயமாக ஆக்கித் தந்ததை இப் பட்டயம் புலப்படுத்துகிறது.

இச் செப்புப் பட்டயத்தின் சமஸ்கிருதப் பகுதி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. அதில் கம்பவர்மன் நிருபதுங்கனை வென்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தோடு கம்பவர்மனுக்கு விஜய என்ற அரசி மூலம் பிறந்த முதல் மகன் அபராஜிதன் என்பதும் காணப்படுகிறது. இச்செய்தி இதுவரை பல்லவர் வரலாற்றில் நிலவி வந்த குழப்பத்தைப் போக்குவதாக உள்ளது.

இதுவரை கம்பவர்மன், நிருபதுங்கன், அபராஜிதன் ஆகியோரின் உறவுமுறை புரியாத புதிராக இருந்து வந்தது. இச் செப்புப் பட்டயத்தின் மூலம் கம்பவர்மனும் நிருபதுங்கனும் மூன்றும் நந்திவர்மனின் குமாரர்களாக இருக்கலாம் என்றும், அபராஜிதன் கம்பவர்மனின் மைந்தன் என்றும் திடமாகப் புரிகிறது. எனவே அந்த வகையில் இச்செப்புப் பட்டயம் மிகமிக முக்கியமானதாகக் காணப்படுகிறது.

சோழமன்னன் பராந்தகன் காலத்தியச் செப்புப் பட்டயம் பராந்தகனின் இருபத்தைந்தாம் ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. இதில் மேலும் சில நிலங்களைத் தேவதானப் பிரமதேயமாக ஆக்கி மேலிருஞ்செற்று, ஸபையார் வசம் ஒப்படைத்து ஆண்டு ஒன்றுக்கு மூவாயிரக்காடி நெல் திருத்தணியில் திருமலை நின்றருளின சுப்ரமண்ய சுவாமிக்கு அளக்க மன்னன் ஆணையிட்டது குறிக்கப் படுகிறது.

இச் செப்புப் பட்டயத்தின் சமஸ்கிருதப் பகுதியும் சில புதிய செய்திகளை நமக்குப் புலப்படுத்துகின்றது. இப்பகுதி சோழமன்னர்களின் பட்டியலைத் தருகிறது. அதில் கோச்செங்கணன் ஒருவன் குறிக்கப்படுகிறன். அவன் மகன் ஒற்றியூரான் என்றும்; அவன் மகன் சிறந்த போர்வீரன் என்றும்; அவன் மகன் ஆதித்யன் என்றும் கூறிச் செல்கிறது. இதிலிருந்து ஆதித்யன் தந்தையான விஜயாலயனுக்கு ஒற்றியூரான் தகப்பனுக விளங்கியிருக்கிறன் என்பதும், ஒற்றியூரனின் தந்தையான கோச்செங்கணன் என்பவன் கி. பி. 8ஆம் நூற்றண்டளவில் வாழ்ந்திருக்கிறன் என்பதும் தெரியவருகிறது.

இலக்கியத்தில் ஒரு கோச்செங்கணன் குறிக்கப்படுகிறான். அவன் பெருஞ்சேரல் இரும்பொறையோடு பொருது வெற்றி பெற்றான் என்று அறிகிறோம். அதே கோச்செங்கணன்தான் இவனா? அல்லது கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வேறொரு கோச் செங்கணான் சோழ வமிசத்தில் இருந்திருக்கிறானா என்று மேலும் ஆய்வு செய்தல் வேண்டும்.

மேலே கண்டுள்ளவாறு பல புதிய செய்திகளைத் தெரிவிப் பதால் இவ்விரு செப்புப் பட்டயங்களும் பல்லவர், சோழர் வரலாற்றை ஆய்வார்க்குப் பெரும் கருவூலங்களாக விளங்கு கின்றன எனலாம்.

### வடிகாற் குழாய்கள்

கி. பி. 8, 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வடிகாற்குழாய் களும், நங்கநல்லூருக்கு அருகில் உள்ள சர்வமங்களா நகரில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இவைகள் களிமண்ணால் செய்யப்பட்டு சுடப் பெற்றுள்ளன. 20 செ. மீ நீளமும், 10 செ. மீ சுற்றளவுமுடைய தாகவுள்ளன. இவை இப்பகுதியில் மக்கள் வாழ்ந்திருக்கின்றனர் என்பதற்குச் சான்றுகளாக விளங்குகின்றன.

### புத்தர் சிலை

மைலாப்பூரின் பகுதியில் புத்தர் உருவச் சிலை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தனிப்பட்டோர் ஒருவர் வீடு கட்டு வதற்காகத் தம் மனையை அகழ்ந்த போது இச்சிலை இருப்பது தெரிய வந்தது. இச்சிலையின் தலைப்பகுதி உடைந்துள்ளது. மற்ற பகுதி கள் நல்ல நிலையில் இருக்கின்றன. இதன் காலம் கி. பி. 8, 9-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். மயிலைப் பகுதியில் புத்தப்பள்ளி ஏதேனும் இருந்திருக்கக்கூடுமோ என்ற ஐயத்தை இது உண்டாக்கு கிறது.

### அனந்த மங்களத்து சமணக் கல்வெட்டு

செங்கற்பட்டு மாவட்டம், அச்சரப்பாக்கம் வட்டம் அனந்தமங் கலத்து மலையில் உச்சியில் சில தீர்த்தங்கரர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இங்குள்ள சில சிற்பங்களின் கீழ் சில கல்வெட்டுகள் இருப்பது 1976 இறுதியில் இக்கட்டுரை ஆசிரி யரால் கண்டுபிடிக்கப்பட்டது.

ஒரு கல்வெட்டு ''ரெட்டநேமி அடிகள்'' என்றும், மற் றொன்று, ''அரட்டராநநேமிகள்'' என்றும் எழுதப் பெற்றுள்ளன.

இக்கல்வெட்டுக்குப் பக்கத்தில் பராந்தகன் காலத்தியக் கல் வெட்டு ஒன்று முன்னர் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. எனவே,

இக்கல்வெட்டும், இச்சிற்பங்களும் கி. பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று கருதலாம்.

### நடமாடும் காளியின் செப்புப் படிவம்

சீர்மிகு சென்னையில் ஒரு பகுதியாக விளங்கும் மைலாப்பூரில் உள்ள கோலமொழியம்மன் கோயிலிலிருந்து நடமாடும் காளியின் செப்புப் படிவம் ஒன்று 1976-ஆம் ஆண்டு தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வுத்துறையால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இப்படிமம் கி. பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக் கலாம் என்று கருதப்படுகிறது. காளி நடமாடும் நிலையில் காணப் படும் படிமம் இது வரையில் கிடைக்கப்பெறாத ஒன்றாகும். மிக வும் நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கிறது. இரு கால்களையும் மடக்கி சதுரமாக வைத்து, இடது மேல் கரத்தை கஜஹஸ்தமாகக் காட்டி, ஆடும் பாங்கில் அமைந்திருக்கும் இத்திரு மேனி மிக முக்கிய செப்புத்திருமேனிகளுள் ஒன்றாகும்.

### அச்சிரப்பாக்கத்துப் பார்வதி சிலை

செங்கற்பட்டு மாவட்டம், அச்சரப்பாக்கத்திலிருந்து பார்வதி தேவியின் கற்சிலை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இச்சிலை மிகவும் அழகாகக் காணப்படுகிறது. இது அக்காலச் செப்புச் சிலை யைப் பார்த்து அப்படியே செய்யப்பட்டது போன்று தோன்று கிறது. செம்பில்தான் பார்க்க முடியும், கல்லிலும் இவ்வளவு நுணுக்கமாக வேலைபாடுகளைச் செய்யமுடியுமா என்று ஆச் சரியப்படும் அளவுக்குச் சிறப்பாக அமைந்திருக்கிறது. காலம் கி. பி. 12-நூற்றாண்டு. அச்சரபாக்கத்திலுள்ள ஆட்சீஸ்வரக்கோயி லில் வழிபாட்டில் இச்சிலை இருந்திருக்கவேண்டும் போல் தோன்று கிறது. இப்பொழுது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையால் எடுத்துவரப்பெற்று மதுரை திருமலை நாயக்கர் அருங் காட்சியகத்தில் வைக்கப்பட இருக்கிறது.

### திருவள்ளுவர் சிலை

தமிழ்மறையாகிய திருக்குறளை உலகினுக்குத் தந்த திரு வள்ளுவ நாயனார் வாழ்ந்த பகுதி மயிலாப்பூர் என்று ஒரு கருத்து உண்டு. இங்கு வள்ளுவர் கோயில் ஒன்றும் உண்டு. இக்கோயி லுக்கு அருகில் சென்ற ஆண்டில் வள்ளுவர் சிலை ஒன்று பூமிக்கடி யிலிருந்து கண்டுபிடிக்கப்பெற்றிருக்கிறது. இச்சிலை இரண்டாக உடைந்த நிலையில் காணப்பட்டாலும் முழுவதுமாக இருக்கிறது. இது கி. பி. 14-15-ஆம் நூற்றாண்டு அளவில் செய்யப்பட்டதாக இருக்கலாம் என்றும், இச்சிலை முன்னாளில் இக்கோயிலில் முக்கியக் கடவுளாக இருந்திருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

**விட்டலாபுரம் கோயில்**

செங்கற்பட்டு மாவட்டம், மாமல்லையிலிருந்து தெற்கே 10 கி. மீ. தொலைவில் உள்ள விட்டலாபுரம் என்னும் ஊரில் விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவ மஹாராயர் காலத்தில் எழுப்பப்பட்ட விட்டலா கோயில் திருமதி. வசுந்தரா பிலியோஸா என்பவரால் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. விட்டலர்க்கு எடுப்பிக்கப் பெற்றிருக்கும் தனிக்கோயில் தமிழ்நாட்டிலேயே இது ஒன்றுதான் இருக்கும் என்று அவர் கூறுகிறார்.

**விஜயநகரக் கால ஓவியம்**

காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரேசுவரர் கோயில் காஞ்சியிலுள்ள கோயில்கள் எல்லாவற்றையும் விட மிகப் பரந்த இடத்தில் அமைந்திருப்பதாகும். இக்கோயிலின் ஒரு பகுதியில் பல்லவர் காலக் கோயில் ஒன்று இன்றும் இருக்கிறது. பல்லவர் காலத்திய மண்டபம் ஒன்று இருந்து இடிபாடுற்று அழிந்துவிட்டது. அம்மண்டபத் தூண்களில் ஒன்று இன்றும் சென்னை அருங்காட்சியகத்தில் காட்சிக்காக வைக்கப்பட்டிருக்கிறது.

ஏகாம்பரேசுவரர் கோயில் சைவ சமயக் குரவர்களால் பாடல் பெற்றத் தலமாகும். சோழ, பாண்டிய, விஜயநகர, நாயக்க மன்னர்கள் இக்கோயிலுக்குப் பலவிதக் கொடைகளை அளித்துப் பாராட்டி வந்திருக்கிறார்கள்.

சோழ மன்னர்களில் ஒருவனான விக்கிரமசோழன் தன் ஆட்சிக் காலத்தில் இக்கோயிலின் தெற்குப் பகுதியில் 'விக்கிரம சோழ சோழன் நூற்றுக்கால் திருமண்டபம்'' என்று ஒரு நூற்றுக்கால் மண்டபத்தை அமைத்திருக்கிறான். அம்மண்டபம் இன்று ஆயிரங்கால் மண்டபம் என்று வழங்கப்படுகிறது. அம்மண்டபத்தைத் தாங்கும் தூண்களில் ''ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரம சோழன் நூற்றுக்கால் திருமண்டபம்'' என்றும், ''ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கன் திரு மண்டபம்'' என்றும் எழுதப்பட்டிருப்பது அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது.

இக்கோயிலில் நடராஜர் சந்நிதியை அடுத்து வடக்கில், திருச்சுற்று மாளிகையின் ஒரு பகுதி கவனிப்பாரற்று இருந்து வந்தது. மரங்களும், முட்செடிகளும் வளர்ந்து மனிதர்கள் உள்ளே புகமுடியாமல் மண்டிக் கிடந்தது.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையும், தமிழ்நாடு அரசு என். சி. சி. படையைச் சேர்ந்த காஞ்சிபுரத்துப் பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் ஒருங்கு சேர்ந்து இப்பகுதியைச் சுத்தம்

செய்தனர். அவ்வாறு செய்கையில் இங்குள்ள திருச்சுற்று மாளிகையின் விதானத்தில் விஜய நகரர் காலத்து வண்ண ஓவியம் தீட்டப்பட்டிருப்பது காண முடிந்தது.

ஓவியத்தின் ஒரு பகுதியில் நாட்டியமாடுபவன் ஒருவன் கையில் கோட்டு வாத்தியம் ஏந்தி, அதை மீட்டுக்கொண்டே ஆடும் நிலையில் தீட்டப்பட்டிருப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். பல பூ வேலைப்பாடுகளும், பறவைக் கூட்டமும், சில விதமான; கட்டங்களும் ஓவியத்தின் ஒரு அங்கமாக அமைந்து அழகூட்டுகின்றன.

இவ்வோவியங்கள் கிருஷ்ணவேவராயர் காலத்தில் தீட்டப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**நாயக்கர் கால ஓவியம்**

சென்னையிலிருந்து மாமல்லைக்குச் செல்லும் சாலையில் அமைந்துள்ள திருப்போரூர், கந்தசாமி ஆலயம் இடம் பெற்றுள்ளதால் சிறப்புப் பெற்று விளங்குகிறது,

இவ்வூரின் மேற்கே அமைந்துள்ள மலையில் ஒரு சிவன் கோயில் உள்ளது. இக்கோயில் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

ஸ்ரீ சிதம்பர சுவாமிகளால் திருப்போரூர் சந்நிதி முறை பாடப் பெற்று கந்தசாமி கோயிலின் கிழக்குக் கோபுரத்தை அடுத்துள்ள மண்டப விதானத்தில் நாயக்கர் கால ஓவியம் இருப்பது அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வோவியம் கந்த புராணத்தைச் சித்தரிப்பதாகக் காணப்படுகிறது.

ஆறுமுகப் பெருமாள் கங்கையில் அவதரிப்பதும், கார்த்திகைப் பெண்கள் அவர்களை எடுத்து வளர்ப்பதும், முருகன் வளர்ச்சியடைந்த பின்னர் சூரசம்ஹாரம் செய்வதும், வள்ளி தெய்வயானை திருமணங்கள் ஆகியவைகளும் அழகுற தீட்டப்பட்டுள்ளன. ஓவியத்தில் ஒரு பகுதி பிற்காலத்தில் சிதைக்கப்பட்டிருக்கிறது.

**சரபோஜி மன்னரின் செப்புப் படிமம்**

சென்னை கீழ்பாக்கத்தைச் சேர்ந்த திரு. என். கே. விநாயகம் என்பவர் தம்மிடமுள்ள பழம்பொருட்களைப் பதிவு செய்வதற்காக வந்தபொழுது அவருடைய சேமிப்பில் கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னரின் செப்புப் படிமம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.

மன்னர் பள்ளிக் கட்டிலில் சாய்ந்து அமர்ந்த வண்ணம் செய்யப்பட்டிருக்கிறது. மன்னரின் தலைப்பாகையும், உடையும், உருவ

அமைப்பும் அவர் சரபோஜி மன்னர் என்பதைத் தெளிவாக்கு கின்றன.

## நவாசிப் பேட்டையில் செங்கற் கல்வெட்டு

செங்கற்பட்டு மாவட்டம், வாலாஜாபேட்டையிலிருந்து காஞ்சிபுரத்துக்குச் செல்லும் சாலேயில் எகனும்பேட்டையில் இறங்கி வடக்கே சிறிது தூரம் சென்றால் நவாசிபேட்டை காசி விசுவநாதர். கோயிலைக் காணலாம்.

கோயில் கவனிப்பாரற்று, வழிபாடு ஏதுமில்லாமல் இருக் கிறது. கோயிலைச் சுற்றிப் புதர் மண்டிக் கிடக்கிறது. கோயிலின் மடப்பள்ளி செங்கல்லால் கட்டடப்பட்டிருக்கிறது. மடப்பள்ளியின் சுவரில் செங்கல்லில் ஒரு கல்வெட்டு எழுதப் பெற்றிருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. எழுத்தமைதியைக் கொண்டு கி. பி. 18ஆம் நூற் ருண்டில் எழுதப்பட்டிருக்கலாம் என்று கொள்ளலாம்.

அக்கல்வெட்டு, நவாசிப்பேட்டை விசுவனுதசுவாமிக்கு முனி யன் என்பவன் திருப்பணிகள் செய்வித்ததைத் தெரிவிக்கிறது.

செங்கல்லில் கல்வெட்டு காணப்படுவது தமிழ்நாட்டில் இதுவே முதல் முறையாகும்.

## கவிகாளமேகத்தின் பாடல் கல்வெட்டு

காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயிலிலிருந்து ஒரு பாடல் கல்வெட்டு அண்மையில் தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட் டுப் பயிற்சி நிறுவன மாணவர்களால் படியெடுக்கப்பட்டது. அது பாடலாக அமைந்திருக்கிறது. அக்கல்வெட்டு,

மண்ணில் இருவர் மணவாளர் மண்ணளந்த
கண்ணநவ னிவன்பேர் காளமுகில்—கண்ண
னவனுக்கூ ரெண்ணி லணியரங்க மொன்றே
இவனிக்கூ ரெண்ணுயிரம் ...

என்று எழுதப்பட்டுள்ளது. இப்பாடல் சிலேடையாக அமைந் துள்ளது. காளமுகில் என்று குறிக்கப்படுபவர் காளமேகப் புலவர் ஆவார். அவருக்கு மணவாளர் என்ற ஒரு பெயர் இருந்ததென் பது இப்பாடலால் தெரியவருகிறது. கவிஞர் தன்னே திருமாலோடு ஒப்பிட்டு கண்ணனுக்கு ஊர் எவ்வளவு என்று எண்ணினல் திரு வரங்கம் ஒன்றுதான் தெரியவருகிறது. ஆனல் தனக்கோ ஊர் எண்ணுயிரம் என்று சிலேடையாகக் கூறுகிருர். அதன் மூலம் தம் மூர் எண்ணுயிரம் என்பதைப் புலப்படுத்துகிருர்.

**கல்வெட்டில் திருக்குறள்**

இராயப்பேட்டை பெரியபாளையத்து மாரியம்மன் ஆலயத்துக்கு அருகில் உள்ள ஒரு கிணற்று சுற்றுச் சுவரில் பதியவைத்துக கட்டப் பட்டிருந்த ஒரு கல்வெட்டு அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு மூன்றும் ஜார்ஜ் காலத்தியது. இது கி. பி. 1818-ல் எழுதப்பட்டிருக்கிறது. இக்கல்வெட்டில், திருக்குறளின் அறத்துப் பாலுக்கு ஆங்கிலத்தில் உரையெழுதிய எல்லீஸ் என்பான் சென்னை நகரில் 27 கிணறு தோண்டுவித்தது குறிக்கப்படுகிறது. அத்தோடு அவன் தான் கற்ற குறளின் வழி நின்று அச்செயலைச் செய்தான் என்பதைக் காட்டுவதற்காக குறட்பா ஒன்றையே மேற்கோளாகத் தந்திருப்பது யாவரும் அறிந்து இன்புறற்பாலது.

# தொண்டை நாட்டில் சமணம்

## வெ. இராதாகிருஷ்ணன்

தமிழகத்தில் சற்றேறக்குறைய கி. பி. 3-ஆம் நூற்றுண்டு முதல் 9-ஆம் நூற்றுண்டின் இறுதி வரை பல்லவர்களது ஆட்சி சிறந்திருந்தது. பல்லவர்கள் ''தொண்டையர்'' என்றும் வழங்கப்பட்டனர். இவர்கள் ஆட்சி புரிந்த பகுதியே 'தொண்டைநாடு' என்று வழங்கப்பட்டது. இன்றைய தமிழ்நாட்டின் மாவட்டங்களான செங்கற்பட்டு, வடாற்காடு, தென்னுற்காடு ஆகியவை தொண்டை நாட்டிற்குட்பட்டிருந்தன. ஆந்திர மாநிலத்தின் நெல்லூர் மாவட்டம் தொண்டை நாட்டின் வடபகுதியாக விளங்கியது. தொண்டைநாடு இருபத்திநான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பர். வோட்டங்களின் எண்ணிக்கையும் சமண தீர்த்தங்களின் எண்ணிக்கையும் ஒப்பிடத் தக்கன வாயுள்ளன. இவ்வொற்றுமை தற்செயலானதாகக் கூட இருக்கலாம். 'கோட்டங்கள்' என்ற பிரிவு தொண்டை நாட்டில் மட்டுமே உள்ளதாகும். கி. பி. 6-ஆம் நூற்றுண்டிலிருந்து 'கோட்டங்கள்' இருந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் உண்டு. தொண்டை நாட்டில் இருந்த கோட்டங்கள் இருபத்தி நான்கு என்பதில் கருத்து வேறுபாடுகளும் உண்டு.

தொண்டை நாட்டின் இதயமாக விளங்கியது காஞ்சிமாநகர். பண்டைய இந்தியாவில் மூன்று பெரும் பல்கலைக் கழகங்கள் விளங்கின. அவற்றுள் ஒன்று காஞ்சியில் இருந்தது. மற்றவை தட்சசிலத்திலும் நாளந்தாவிலும் இருந்தன. காஞ்சி மாநகர் தெற்கும் வடக்கும் சங்கமமாகும் நகரமாக விளங்கியது. வைதிகக் கோட்பாடுகளும் போட்டியிட்டுக் கொண்டன. இந்நகர் பல்வேறு சமய சித்தாந்தங்கள் செழிப்பதற்கு நிலைக்களமாயிற்று. இருபதுக்கும் மேற்பட்ட கடிகைகள் [கல்லூரிகள்] இங்கு இருந்தன. சமஸ்கிருதம் நன்கு போதிக்கப்பட்டது. கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த மயூரசர்மன் என்னும் கதம்ப மன்னன் காஞ்சிக் கடிகையில் சமஸ்கிருதம் பயில வந்ததிலிருந்து இந்நகரில் நிலவிய கல்வியின் தரத்தை நன்கு உணரலாம். கல்வியிலும் கலைகளிலும் ஆர்வம் கொண்ட சான்றோர்கள் உறையும் இடமாக காஞ்சிமாநகர் சிறப்புற்றிருந்தது.

கிறிஸ்து சகாப்தம் தொடங்குவதற்கு 300 ஆண்டுகளுக்கு முன் பிருந்தே தொண்டை நாட்டில் சமண சமயம் பரவத் தொடங் கியது.[1] சமண சமயம் ஆந்திர நாட்டின் வழியாகவோ அல்லது கர் நாடகத்தின் வழியாகவோதான் தொண்டை நாட்டிற்குள் பரவி யிருத்தல் வேண்டும்.[2] ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் தொண்டை நாட்டில் சமண முனிவர்கள் வாழ்ந்தனர் என்பதற்கு கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன.

பல்லவ மன்னர்களில் சிலர் சமண சமயத்தில் ஈடுபட்டு அச்சம யத்தைப் போற்றியிருக்கிறார்கள். பல்லவ மன்னன் சிம்மவர்மன் காலத்தில் வாழ்ந்த சிம்மநந்தி என்ற சமண முனிவர் 'லோக விபாகம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.[3] தொண்டை நாட்டில் வாழ்ந்த வஜ்ரநந்தி என்ற சமணப் பெரியார்க்கு சிம்ம வர்ம பல்ல வன் பள்ளிச் சந்தமாக 'பதினறரைப்பட்டி' நிலம் அளித்த செய்தி பள்ளன் கோயில் செப்பேடுகளால் அறியப்படுகின்றது.[4] தமிழக வரலாற்றில் பள்ளிச் சந்தம் அளிக்கப் படுவது இதுவே முதன் முறையாகும்.

முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் சமண சமயத்திலிருந்து அப்பரால் சைவத்திற்கு மாற்றப்பட்டார். இப் பெருமன்னன் காலத்தில் பல குகைக் கோயில்கள் தோற்றுவிக்கப் பட்டிருந்தும் சமண குகைக் கோயில் என்று திட்டவட்டமாகக் கூறும் வகையில் ஒன்று கூட இதுவரை கிடைக்கவில்லை. ஆனல் வடார்க்காடு மாவட்டம் விலாபாக்கம் என்ற இடத்திலுள்ள முற்றுப் பெருத பெரிய குடைவரைக் கோயிலின் முகப்புப் பகுதியில் ஒரு சமண உருவம் செதுக்கப் பட்டுள்ளது. இக்குடைவரைக் கோயில் முதலில் சிவபிரானுக்காகக் குடையப்பட்டதென்றும் கூறப்படு கிறது.[5] ஆனல் இக்கோயில் தொடக்க கால முதல் சமணக் கோயி லாகவேதான் இருந்திருக்க வேண்டும் என்று தொல் பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கருது கிறார்கள்.[6] தென்னர்க்காடு மாவட்டம் திருவதிகையில் மகேந்திர வர்மன் காலத்தில் வழிபாட்டிலிருந்த சமணச் சிற்பங்கள் இரண்டு இன்றும் உள்ளன.

காஞ்சியின் ஒரு பகுதியாக விளங்கிய திருப்பருத்திக் குன்றம் 'ஜின காஞ்சி' என வழங்கப்பட்டது. பல்லவர் ஆட்சியின் தொடக்க காலத்திலிருந்து இவ்வூர் சமணத்தின் இருப்பிடமாகத் திகழ் கின்றது. சமண மரபில் கூறப் பெறும் நான்கு வித்தியா ஸ்தானங் களில் ஜினகாஞ்சியும் ஒன்று. இங்கு சந்திர கீர்த்தி, மல்லி சேனர், புஷ்ப சேனர், அனந்த வீரவாமனர் போன்ற சமணப் பெரியார்கள் வாழ்ந்துள்ளனர். மல்லிசேனர் தமிழிலும் வடமொழியிலும் பல

நூல்களை யாத்துள்ளார். மேரு மந்திர புராணம், சமய திவாகரம் நீலகேசித் திரட்டு உரை] போன்ற தமிழ் நூல்களையும் பாஞ்சாஸ்தி காயம், பரவசனசாரம், சமய சாரம், சியாத் வாத மஞ்சரி ஆகிய சமஸ்கிருத நூல்களையும் யாத்துள்ளார்.

மகேந்திரவர்மப் பல்லவனுக்குப் பிறகு சமணம் செழிக்கத்துணை புரிந்த பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராஜ சிம்மனாகும். கி. பி. 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், சிவ பெருமானிடத்தில் ஈடில்லாப் பக்திகொண்டு 'சிவசூடாமணி' என்று சிறப்புப் பெற்றவனான இராஜசிம்மப் பல்லவன் காலத்தில் திருப் பருத்திக் குன்றத்தில் தோற்றுவிக்கப்பட்ட சந்திரபிரபா தீர்த்தங் கரர் கோயில் சில மாற்றங்களுடன் இன்றும் உள்ளது.[7] வடார்க் காடு மாவட்டம் பஞ்ச பாண்டவர் மலையில் இரண்டாம் நந்திவர்ம கல்லவ மல்லனின் 50-வது ஆட்சியாண்டில் செதுக்கப் பெற்ற பொன் இயக்கியின் உருவம் உள்ளது. தமிழகத்தில் உள்ள யக்ஷி திருமேனிகளில் இதுவே காலத்தால் முந்தியது. இதை சமணர் தொழும் 'சித்தாயிகா' என்று வரலாற்றறிஞர்கள் கூறுவர்.[8]

பண்டைக் காலத்து சமண முனிவர்கள் தங்குமிடமான பாழி கள் தொண்டை மண்டலத்தில் பல உள்ளன. தென்னார்க்காடு மாவட்டம் மேலைச்சேரி, காவக்காடு, தொண்டூர், திறக்கோ, திரு நாதர் குன்று, பிள்ளைத்தாங்கல் மலை ஆகிய ஊர்களிலும் வடார்க் காடு மாவட்டம் புங்கானூர், சேதரப்பட்டு, மாமண்டூர் ஆகிய ஊர் களிலும், சித்தூர் மாவட்டம் கன்னிகாபுரம், நகரி ஆகிய ஊர்களுக் கருகிலும் சமணப் படுக்கைகள் உள்ளன. மாமண்டூருக்கருகில் உள்ளமலையில் சமணப் படுக்கைகளுடன் தமிழில் கல்வெட்டும் உள் ளது: [இவ்வூர் காஞ்சிபுரத்திலிருந்து வந்தவாசி செல்லும் நெடுஞ் சாலையில் உள்ளது.]

''கணிமான் தேனூர் தந்த கோன் குன்று செயிதான்
தசன் சிறுவ்வன்''

கி. பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கல்வெட்டு சமண முனி வர்க்குப் படுக்கை அமைத்துக் கொடுத்ததைப் பற்றி குறிப்பிடு கின்றது. தொண்டை நாட்டில் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரே சமணம் வேரூன்றத் தொடங்கியது என்பதை இந்தக் கல்வெட்டு மூலம் உணரலாம்.

மேலும் வடார்க்காடு மாவட்டத்தில் காவனூரு, தென்னம் பட்டு, திருமணி, பெருங்கங்கி, திருமலை, புனதாகை, திருவோத் தூர், வள்ளிமலை, பொன்னூர் ஆகிய ஊர்களில் கிடைக்கப் பெற்

றுள்ள சமணத் திருவுருவங்களைக் கொண்டு அக்காலத்தில் வளர்ச்சி பெற்ற சமண சமயத்தைப் பற்றி அறிய முடிகிறது. இம்மாவட்டத்தில் கச்சூர், கோழமூர், சேவூர், திருப்பனம்பூர், பூண்டி, தேசூர், தெள்ளாறு, வெண்குன்றம் ஆகிய இடங்களில் உள்ள சமணக் கோயில்கள் மூலமும் அக்கால சமண சமய வளர்ச்சியை அறிகிறோம். வாலாஜா பேட்டை வட்டம் பூண்டி கோயிலிலிருந்த சமண சமயத்தைச் சார்ந்த செப்புத் திருமேனியொன்று ஆரணிக்கோயிலுக்கு எடுத்துச் செல்லப் பட்டதென்று தொல்லியல் அறிக்கைகள் தெரிவிக்கின்றன.[9] இவ்வட்டாரத்திலுள்ள சமணக் கோயில்களில் பூண்டி கோயில் மிகப் பழமையானது.

நம்பாக்கம் கிராமத்தில் உள்ள மண்டீஸ்வரஸ்வாமி கோயில் என்ற சிவன் கோயில், முன்னர் சமணக் கோயிலாக இருந்திருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[10] வேலூருக்கருகிலுள்ள வள்ளிமலையில் சமணக் கல்வெட்டுகளும் சிற்பங்களும் உள்ளன. இங்குள்ள குகையில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் மூலம் 'இராஜகுல மல்லன்' என்னும் கங்க மன்னனால் இக்குகை தோற்றுவிக்கப்பட்டது என்பது புலனாகிறது. வந்தவாசி வட்டம் பொன்னூரில் உள்ள ஆதிநாதர் கோயில் 'ஜ்வாலா மாலினி' [இயக்கி] சமயச் சிறப்பு வாய்ந்தது. இவ்வூருக்கணித்தே உள்ள பொன்னூர் மலை என்னும் குன்றில் ஏலாச்சாரியார் என்பவரின் திருப்பாதம் இருக்கின்றது. சுவர்ணபுரி என வழங்கப்படும் இவ்வூரிலுள்ள ஏலாச்சாரியாரின் திருப்பாதத்திற்குச் சமணர்கள் ஆண்டு தோறும் வழிபாடு நடத்தி வருகிறார்கள். ஏலாச்சாரியார் என்ற இந்தச் சமணப் பெரியார்தான் திருக்குறளை யாத்த திருவள்ளுவர் என்று சமணர்கள் கூறுவர்.[11]

வடார்க்காடு மாவட்டம் திருமலையில் பாகுபலி, வர்த்தமானர், பார்ஸ்வ நாதர் திருவுருவங்களுக்கு அருகாமையில் ஒரு இயக்கியின் உருவமும் உள்ளது. இச்சிற்பத்தை உருவாக்கியவர் அரிஷ்டநேமி ஆச்சாரியார் என ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. விலாப்பாக்கம் என்ற ஊரில் உள்ள முதலாம் பராந்தக சோழன் கல்வெட்டு ஒன்று ''அரிஷ்டநேமி பட்டாரர்'' என்பவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. பராந்தக சோழன் கல்வெட்டுகளும் மேற்கூறிய இயக்கியின் உருவத்திற்கு மிக அருகாமையில் காணப்படுவதால் இவ்வியக்கியின் சிற்பமும் விலாப்பாக்கம் தீர்த்தங்கரரின் திருவுருவமும் முதற் பராந்தக சோழன் காலத்தைச் சார்ந்தவை எனக் கொள்ளலாம்.[12]

'சிவபாத சேகரன்' என்றழைக்கப்பட்ட முதலாம் இராசராச சோழன் தமக்கையும் சைவ சமயத்தில் பெரும்பற்று கொண்டிருந்தவருமான குந்தவைப்பிராட்டியார் திருமலையில் ஒரு சமணத்

கோயிலைக் கட்டினார்.[13] அக்கோயில் அவர் பெயராலேயே ''குந்தவை ஜீனாலயம்'' என வழங்கப்பட்டது. இவ்வூர் பாறையில் அப்பெருமாட்டி தோற்றுவித்த பதினாறு அடி உயரமுள்ள நேமிநாத தீர்த்தங்கரரின் திருவுருவம் இன்றும் மிக அழகாகத் திகழ்கின்றது.[14] கங்காநதியும் கடாரமும் கைக்கொண்ட முதலாம் இராசேந்திர சோழன் ஆட்சியில் திருமலை ஒரு பள்ளிச் சந்தமாகவே விளங்கியது. இவ்வூரில் உள்ள குகையில் சோழர் கால ஓவியங்கள் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன.

தென்னார்க்காடு மாவட்டத்தில் கீழ்குப்பம், திருவதிகை, திண்டிவனம், சிறு கடம்பூர், தொண்டூர், விழுப்புரம், பாவண்டூர், பள்ளிச் சந்தல், சோழ வண்டிபுரம் ஆகிய இடங்களில் உள்ள சமணத் திருவுருவங்கள் அக்காலச் சமய நிலையையும் கலை வரலாற்றையும் அறியும் சான்றுகளாக அமைகின்றன. குறிப்பாகச் சிறு கடம்பூரில் கிடைக்கப் பெற்றுள்ள இருபத்தினான்கு தீர்த்தங்கரர்களின் திருவுருவங்களும், மேல்சித்தாமூர் கோயிலில் கிடைக்கப் பெற்றுள்ள மல்லி நாதர், பாகுபலி, பார்சுவநாதர், மகாவீரர் ஆகிய சிற்பங்களும், பாவண்டூரில் கிடைத்த ரிஷப தேவர் திருவுருவமும் அக்காலச் சமய வரலாற்றை அறியத் தக்க சான்றுகளாக விளங்குகின்றன. ஜீன சிந்தாமணி நல்லூர், வீர சேகர பெரும் பள்ளி, பள்ளிச்சந்தல், பாடலிபுரம் ஆகிய பெயர்கள் சமண சமயத் தொடர்புடையன.

பாடலிபுரம் என வழங்கப் பெற்ற திருப்பாதிரிப் புலியூரில் புகழ் பெற்ற சமண மடம் ஒன்று செயலாற்றியது. திருநாவுக்கரசர் சைவத்தைத் தழுவுமுன் இந்த மடத்தில்தான் சமணத் துறவியாக வீற்றிருந்தார்.[15] செஞ்சிக்கு அருகில் உள்ள திருநாதர் குன்று சமணத்தலமாகத் திகழ்ந்தது. சந்திர நந்தி என்ற ஆசிரியரும் இளைய படாரர் என்பவரும் முறையே 57 நாட்களும் 30 நாட்களும் உண்ணா நோன்பிருந்து உயிர் நீத்தனர் என்று தொன்மை வாய்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டொன்று கூறுகிறது.[16] இதற்கருகில் ஒரு பாறையில் இருபத்தினான்கு தீர்த்தங்கரர்களின் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவை இம்மலை எவ்வளவு புண்ணியத் தலமாகக் கருதப் பட்டது என்பதற்கு எடுத்துக் காட்டுக்களாகும்.[17]

பள்ளிச்சந்தல் அருகிலுள்ள செம்பை கிராமத்தில் கிடைக்கப் பெற்ற முதல் பராந்தக சோழன் கல்வெட்டு பாலையூர் நாட்டுப் பெரும்பள்ளி என்னும் சமணக் கோயிலுக்குரிய ஏரியைப் பராமரிக்கும் பொருட்டு நிலதானம் செய்ததைக் குறிக்கின்றது.[18] திருநறுங் கொண்டையில் உள்ள குலோத்துங்க சோழன் கல்வெட்டு வீர

சேகரர் காடவராயர் என்பவர் நாற்பத்தெண்ணுயிரம் பெரும் பள்ளிக்கு வரிப்பணம் தானம் செய்ததைக் குறிக்கின்றது.[19] இக் கல்வெட்டுகள் மூலம் சோழ மன்னர்கள் சமண சமயத்திற்குச் செய் 5 தொண்டினையும் அளித்த அறக் கொடைகளையும் நன்குணர லாம்.

சில சமணப்பள்ளிகளுக்கு மன்னர்களுடைய பெயர்கள் சூட்டப் பட்டிருந்தன என்று அறிகிறோம். கண்டராதித்த சோழன் சிறந்த சிவபக்தன். தில்லைச் சிற்றம்பலமுடையார் மீது இம்மன்னன் பாடிய திருப்பதிகம் ஒன்று சைவத் திருமுறைகளுள் ஒன்பதாம் திரு முறையாகத் தொகுக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலூர் வட்டம் பள்ளிச்சந்தல் என்ற ஊரில் இம்மன்னன் பெயரால் ''கண்டராதித்த பெரும்பள்ளி'' என்ற சமணப் பள்ளி ஒன்று இருந்ததாக அவ்விடத் துக்கல்டொன்று கூறுகிறது.[20] இது போல் இன்னும் வீரராசேந் திரப் பெரும் பள்ளி, கங்கசூரப் பெரும்பள்ளி, வீர கேரளப் பெரும் பள்ளி—ஆகிய சமணத் தலங்கள் அக்காலத்தில் நிலவின. மன்னர்கள் சமயப் பொறையுடையவர்களாய் விளங்கினர் என்பதற்கு இவை எடுத்துக் காட்டுகளாகும்.

செங்கற்பட்டு மாவட்டம் உத்திரமேரூர், அனந்த மங்கலம், பெரிய காஞ்சிபுரம், மாகறல், விஷார், திருப்பருத்திக்குன்றம், புழல், வில்லிவாக்கம் ஆகிய இடங்களில் சமணத்திருமேனிகள் உள் ளன. அனந்தமங்கலம் மலை உச்சியில் உள்ள தீர்த்தங்கரர்களின் சிற்பங்களில் ஒன்றில் ''ரெட்டநேமி அடிகள்'' என்றும் மற்றொன் றில் ''அரட்டராந நேமிகள்'' என்றும் எழுத்துக்கள் பொறிக்கப் பட்டுள்ளன. இக்கல்வெட்டுக்குப் பக்கத்தில் பராந்தக சோழன் காலத்து கல்வெட்டொன்று உள்ளதால் இச்சிற்பங்கள் கி. பி. 10-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகவோ அல்லது சற்று முந்தியதாகவோ இருக்கலாம்.[21] இவையன்றிப் பொன்னேரி வட்டம் சுப்பரெட்டி பாளையத்தில் அண்மைக் காலத்தில் மகாவீரரின் திருமேனி யொன்று கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இச்சிற்பங்கள் பல்லவ—சோழ கலைப்பாணியுடன் இலங்குவதைக் காணலாம். கும்மிடிப் பூண்டிக்கருகில் உள்ள சின்னம்பேடு பகுதியில் இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரரான பார்சுவநாதரின் சிற்பம் அண்மையில் கண்டுபிடிக் கப்பட்டுள்ளது. காஞ்சி நகரில் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளிக்கு அருகாமையில் ஒரு தீர்த்தங்கரரின் சிற்பம் உள்ளதை இன்றும் காணலாம். இம்மாவட்டத்தில் உள்ள அம்மணம்பாக்கம், பொன் னேரி வட்டத்தில் உள்ள அருகத்துறை, அத்தமணஞ்சேரி, திருவள் ளூர் வட்டத்திலுள்ள அமணம்பாக்கம் ஆகிய இடப் பெயர்கள் இப் பகுதியில் சமண சமயம் தழைத்திருந்ததற்கு ஓர் எடுத்துக் காட் டாகும்,

தமிழகத்தின் மற்ற பகுதிகளில் சமணம் அழிக்கப் பெற்ற பின்னும் தொண்டை நாட்டில் அதன் செல்வாக்கு ஓரளவேனும் இருந்தது எனலாம். மயிலாப்பூரில் கி. பி. 15-ஆம் நூற்றுண்டுவரை சமணம் பெரும் புகழ் பெற்றிருந்தது. தச்சம்பாடி என்ற ஊரில் கிடைக்கப்பெற்ற செப்புத் திருமேனியும் கி. பி. 15-ஆம் நூற்றுண்டின் சமண சமய செல்வாக்கை நிலைநாட்டுகின்றது. திருப்பருத்திக் குன்றம் இன்று வரை சமணத்தின் புகழ் பரப்பிக் கொண்டுள்ளது. பண்டைக் காலத்து சிறப்புப்பெற்ற பல சமணப் பதிகள் இன்றும் சமணர் செல்வாக்குக்குட்பட்டிருப்பதைக் காண்கிறோம். இதற்குக் காரணம் சோழ மன்னர்களை அடுத்து இப்பகுதியை ஆட்சி புரிந்த விஜயநகர மன்னர்கள் சமணத்தின் புரவலர்களாக விளங்கியதேயாம். தொண்டை நாட்டில் ஆட்சி நடத்திய சில முஸ்லிம் மன்னர்களும் சமணர்களுக்கு ஆதரவளித்தனர் என அறிகிறோம். கி. பி. 18-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த திரு. மெக்கன்ஸி அவர்கள் விட்டுச் சென்றுள்ள குறிப்புகளிலிருந்து அந்நூற்றுண்டில் தொண்டை நாட்டில் சமணத்தின் நிலையை அறிந்து கொள்ள முடிகிறது. அவர் காலத்தில் தமிழ் நாட்டிலேயே தொண்டை மண்டலத்தில்தான் சமணர்கள் மிகுதியும் வாழ்ந்தனர் என்றும் தொண்டை நாட்டில் இருந்த சமணப் பதிகள் சுமார் நூற்றைம்பது என்றும் அறிகிறோம்.

## குறிப்புகள்

1. டாக்டர் இரா. நாகசாமி, தமிழக வரலாற்றில் சமணம்.
2. P. B. Desai—Jainism in South India, p. 25.
3. டாக்டர் இரா. நாகசாமி—தமிழக வரலாற்றில் சமணம்.
4. பல்லவர் செப்பேடுகள் முப்பது—பக்கம். 31-32.
5. Dr. R. Nagaswamy—Jaina Art and Architecture under the Pallavas
6. Ibid.
7. Ibid.
8. P. B. Desai—Jainism in South India.
9. Top. List Vol. I. p. 56.
10. Ibid p. 151.
11. சமணமும் தமிழும்—பக்கம். 114
12. Dr. R. Nagaswamy—Jaina Art and Architecture under the Colas.
13. S. I. I. Vol I. No. 18.
14. Dr. R Nagaswamy—Jaina Art and Architecture under the Colas.
15. சமணமும் தமிழும்—பக்கம். 116.
16. டாக்டர் இரா. நாகசாமி—தமிழக வரலாற்றில் சமணம்.
17. Ibid
18. 446 of 1937—38.
19. சமணமும் தமிழும்—பக்கம். 119.
20. Dr. R. Nagaswamy—Jaina Art and Architecture under the Colas.
21. நடன. காசிநாதன்—தொண்டை மண்டலத்தின் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்.

# செங்கற்பட்டு, சென்னை மாவட்டங்களில் நீர்ப் பாசன வசதி

**நா. மார்க்சிய காந்தி**

ஆற்றுப் பாசனத்தை விட, ஏரி, குளப் பாசனத்தினால் அதிக விவசாயம் செய்கின்ற பகுதி செங்கை மாவட்டம். மதுராந்தகம் ஏரி, செம்பரப்பாக்கம் ஏரி, தென்னேரி போன்ற பெரிய நீர்நிலை களைத் தன்னகத்துக் கொண்டு, பாசன வசதியும், குடிநீர் வசதியும் இவை பெறுகின்றன. பொதுவான இத்தகு செய்திகளை விடுத்து, இம்மாவட்டக் கல்வெட்டுகளில் கிடைக்கும் நீர்ப்பாசனக் குறிப்புக் களைத் தருவதே இக்கட்டுரை.

எல்லாத்துறைக் குறிப்புக்களையும் போல, நீர்ப்பாசனக் குறிப் புக்களையும் நாம் முறையாகப் பெறுவது பல்லவர் காலத்தில் இருந்து தான். பொதுவான ஒரு வரலாற்று ஒப்பு நோக்கக் கண்ணோட் டத்தில் நாம் பார்ப்போமாயின், சோழர் காலத்தைவிட, பல்லவர் காலத்தில்தான் புதிய பாசன வசதிக்கான திட்டங்கள் அதிக அள வில் நிறைவேறியிருக்கின்றன. ஏனெனில் அக்காலத்தில்தான் விவ சாயத்தில் பெரும் புரட்சி ஏற்பட்டது. அக்காலம் வரை விவசாயம் மிகப்பரந்த அளவில் நடைபெறவில்லை. அக்காலத்தில் நிகழ்ந்த பஞ்சமும் இத்தகு பாசனவசதிப் பெருக்கத்திற்குச்—சில வடமொழி இலக்கியங்கள் இப்பஞ்சத்தைக் குறிப்பிடுகின்றன—காரணமாக இருக்கலாம். பல்லவர்களின் செப்பேட்டுச் சாசனங்கள் பல புதிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் குறிப்பிடுகின்றன. கூரம் செப்பேடு ''வித்யாவிநீத பல்லவ பரமேச்சுரகரம் எடுத்து ஏரி தோண்டி'' என்று குறிப்பிடுகின்றது. மகேந்திர வாடிக் கல்வெட்டு, மகேந்திர தடாகக் கரையில், மகேந்திரவிஷ்ணுக்கிரகம் அமைக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றது. கூரம் செப்பேடு பரமேஸ்வர தடாகத்தைக் குறிப்பிடுகின்றது. தந்திவர்மனின் 7-ஆம் ஆட்சி யாண்டைச் சார்ந்த உத்திர மேரூர்க் கல்வெட்டு, (9-ஆம் நூற் றாண்டு) அவ்வூரில் குளம் வெட்டுவதற்கு நிலம் வாங்கிய செய்தியைக் காட்டுகின்றது (80 of 1898). இரண்டாம் நந்திவர்மனின் காசாக் குடிச் செப்பேடு திரையனேரியைக் குறிப்பிடுகின்றது. இவ்வாறு அமைந்த பெரிய ஏரிகள் அனைத்தும் பல்லவர்காலத் தவையே.

**கால்வாய்**

ஏரிகளை வெட்டியது மட்டும் அல்லாமல், பல கால்வாய்களையும் வெட்டினர். அவற்றுள் ஏரிகளில் இருந்து பாசனத்திற்கு வருவன ஒரு சில. வேறு சில ஏரிகளை நிரப்புவதற்கு ஆற்றினின்றும் செல்வன. கூரம் செப்பேடு 'நாட்டுக்கால்' என்ற குறிப்பு ஒன்றைத் தருகிறது. ஆற்று நீர் வயலுக்கு (ஒரு நாட்டுப்பகுதி முழுவதற்கும்) வருவதற்கு அமைக்கப்பட்ட வாய்க்கால் போலும் இது. அதே செப்பேடு ''பரமேச்சுர தடாகத்துக்குப் பாலாற்று நின்றும் தோண்டின பெரும்பிடுகுக் கால்'' என்று குறிப்பிடுவதைக் காண, ஆற்று நீரால் குளம் நிரப்பப்பட்டது என்பதும் தெரிகின்றது. அதே போல, 'ஆற்றுக்கால்' என்று காசாக்குடிச்செப்பேடு குறிப்பிடுவது, ஆற்று நீரைப் பாசனத்திற்கெனக் கொண்டு வரும் கால் போலும். கணபதி, வாய்க்கால், ஸ்ரீதர வாய்க்கால் ஆகியவைகளை உத்திர மேரூர்க் கல்வெட்டு குறிப்பிடுவதைக் காணலாம்,

**பழுது பார்த்தல்**

இவையன்றி, ஏரிகளில் பழுதுபார்க்கும் பணியும் அவ்வப்போது செய்யப்பட்டது. இந்த முறையில் அமைந்த பெரும்பாலான கல்வெட்டுக்கள் சோழர் காலத்தவையாகவே அமைந்துள்ளன. ஒரேயொரு கல்வெட்டு (நான் பார்த்தவரை) நிருபதுங்க வர்மன் காலத்தில், (9-ஆம் நூற்றாண்டு) தனிப்பட்ட ஒருவரால் குளத்திற்குக் கல்லால் ஆன கரை அமைத்ததையும், வாய்க்காலின் தொடக்கமும் பழுது பார்க்கப் பட்டதையும் குறிக்கிறது (457 of 1912). அடுத்து புன்னப்பாக்கம் என்ற ஊரில் கிடைத்துள்ள முதல் இராஜராஜனின் கல்வெட்டு, (10-ஆம் நூற்றாண்டு) சாளுக்கிய விக்கிரமாதித்தனது சேனைத் தலைவனின் மனைவி, 'முருகனேரி' என்ற ஏரியின் பராமரிப்புக்கு 500 குழி நிலத்தினை அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றது (251 of 1952—53). அந்நிலம் 'ஏரிப்பட்டி' என்று குறிப்பிடப்படுகிறது. முதற் குலோத்துங்கனின் காலத்தில், (11-ஆம் நூற்றாண்டு) கூவம் என்ற ஊரில் உள்ள மற்றொரு கல்வெட்டு அவ்வூரிலுள்ள 'திரிபுவன மாதேவிப் பேரேரி'யினைப் பழுது பார்ப்பதற்காக நெல்லினை அளித்த செய்தியைக் குறிப்பிடுகின்றது. இந்த நெல்லினை, ஊர்ச்சபை அளித்தது. இந்நெல், அதே குளத்தினின்றும் பெறுகின்ற 'மீன்பாட்டம்' (மீன் பிடிப்பதற்கான வரி) என்பது குறிப்பிடத்தக்கது. தவிர பெரும் வெள்ளத்தால் ஏரி, குளங்கள் உடைந்து போவது உண்டு. அந்நிலையில் அதனைப் பழுது பார்ப்பதற்கென ஒதுக்கப்பட்ட பொருளினை மூன்றாம் குலோத்துங்கனின் கல்வெட்டொன்று குறிக்கின்றது. மன்னனின் 12, 13-ஆம் ஆட்சியாண்டுகளில் (12-ஆம் நூற்றாண்டு) வெள்ளம் ஏற்பட்டது. இந்நிலையில்

ஆண்டுதோறும் பழுதுபார்க்கும் பணிக்கென இத்தொகை ஒதுக்கப் பட்டதாக இக்கல்வெட்டுக் குறிக்கின்றது. கல்வெட்டு வருமாறு (சோமங்கலம்—183 of 1901):

> "சோமங்கலமான பஞ்சநதி வாணச் சதுர்வேதி மங்கலத்து ஏரி இத்தேவர்க்கு பன்னிரண்டாவது பெரு வர்ஷம் பெய்து ஒரு நாளே ஏழிடத்தில் பெருமடையாய உடைந்த இது திருச்சுரக் கண்ணப்பந் திருவேகம்ப முடை யான் காமன் கண்டவானவன் இம்மடை ஏழும் அடைப் பித்து பதின்மூன்ருவதும் ஏரி நிறைந்து இரண்டிடத்தில் உடைந்ததுவும் அடைப்பித்து இவ்வேரிமடை பதிநாலாவது தைமாஸத்து திருச்சுரக் கண்ணப்பந் திருவேகம்ப முடையான் காமன் கண்டவானவன் பக்கல் இவ்வூர் மகாசபையோம் பொலியூட்டாகக் கைக்கொண்ட பழங்காசு 40 இப்பழங்காசு நாற்பதுக்கும் பலிசையால் பன்னிருபடி பரப்புப்பட அளவில் குழிக்கோலால் நாற்பது குழி ஆண்டுதோறும் கல்லிக் கரை செய்ய.........'

இதே போல திரையனேரியிலும் ஒரு முறை வெள்ளம் வந்து கரை உடைந்தது. அதனை இம்மடி தாத்தாச்சாரி என்பார் பழுது செய்ததைக் குறிக்கின்ற கல்வெட்டு ஒன்றும் கிடைத்துள்ளது, அவ்வாறு கரை செய்யும்போது மிகக் கவனமாகச் செய்த கரைக்கு ஊறு ஏற்படாவண்ணம், கரைக்குப் புறம்பாக—அதாவது சிறிது தொலைவிலிருந்து மண் கொணர்ந்து கரை செய்ய வேண்டும் என்பதில் கருத்தாக இருந்தனர் என்பதற்கு,

'கரைக்குப் புறவாலே கல்லிக் கரை செய்யக் கடவோமாகவும்' என்பதன் மூலமும், அவ்வாறு கரை புதுக்கும் பணி தேவைப்பட்ட போதெல்லாம் தொடர்ந்து நடைபெற வழி செய்தனர் என்பதற்கு

'இப்படி சந்திராதித்தவரை கல்லிக் கரை செய்யக் கடவோ மாகவும்'

என்ற கல்வெட்டுப் பகுதிகள் சான்ருக நிற்கின்றன.

**ஆழப்படுத்தும் பணி**

குடிமல்லம் என்ற இடத்தில் கிடைத்துள்ள தந்தி வர்மன் காலத்து (8-9ம் நூற்ருண்டு) மற்ெருரு கல்வெட்டு 'வெள்ளேரி'யை ஆழப்படுத்திய செய்தியைத் தெரிவிக்கின்றது. இதற்கென நிலம் அளிக்கப்பட்டது. அந்நிலத்து வருவாய் கொண்டு, அக்குளத்தினை ஆழப்படுத்தும் பணி நிறைவேற்றப்பட வேண்டும் என்பது ஏற்பாடு.

**மதகு**

ஏரிகளும், குளங்களும் வெட்டி, உள்ளே நீர் வருதற்கும், வயலுக்குப் பாயவும் கால்கள் அமைத்த நிலையில், பல மதகுகள் இப்பணியைத் தடையின்றி நடக்கும் பொருட்டு அமைக்கப்பட்டன. அந்தச் செய்தியையும் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. நிருபதுங்கனின் 6-ஆவது ஆட்சியாண்டில், (9-ஆம் நூற்றாண்டு) வள்ளுவேரி என்ற ஏரிக்கு ஒரு மதகினைத் தனிப்பட்ட நபர் ஒருவர் செய்திருக்கின்றார் (68 of 1908). காடவ மன்னனின் ஆட்சியின் போது, பல்லவ மகராஜன் தண்டலம் ஏரிக்கு மதகு அமைத்தான் என்பதை அவ்வூரில் உள்ள பாடல் கல்வெட்டு நமக்குக் காட்டுகின்றது.

திருக்கச்சூரில் கிடைத்த ஒரு கல்வெட்டு சிறப்பான ஒன்று. செங்குன்றம் ஊரினைச் (ஊர்ச்சபை) சார்ந்த அம்பர்ப்பாக்கம் என்ற சிற்றூரில் சில நிலங்கள் பாசனவதி இன்றி இருந்தன. அதைக் கண்ட செங்குன்றத்து மக்கள், தம் ஊரின் கோயிலின் செலவில் ஒரு ஏரியும் மதகும் அமைத்து அந்த ஊரையும் பாசனவசதிக்குட்படுத்தினர் என்று தெரிகின்றது.

**எல்லைகள்**

இவ்வாறன்றிப் பல ஊர்க் கல்வெட்டுகளில், எல்லைகள் குறிப்பிடும்போது பல ஏரிகள், வாய்க்கால்கள் குறிக்கப்படுவதைக் காண்கின்றோம். இந்த வாய்க்கால்களின் பெயராலேயே-அதாவது அதன் பாசன வசதி காரணமாகவே நிலங்கள் பெயர் பெற்றிருந்தன. சான்றாக மதுராந்தகத்தில் உள்ள விக்ரம சோழனின் கல்வெட்டு ''தலைப்பாடகம் வீரசோழ வாய்க்காலுக்குத் தெற்கு, இரண்டாங்கண்ணாற்றிலும், வீரநாராயண வதிக்கு மேற்கு ஏழாஞ் சதுரத்து கீல்பாற்கெல்லை.........'' என்று குறிப்பிடுகின்றது. இத்தகைய கல்வெட்டுக்கள் பலவற்றைக் காணலாம்.

**பிற பாசனவசதிகள்**

இதுபோல, ஆறு, ஏரி, குளம், வாய்க்கால் இவைகளன்றி வேறு சில முறை பாசனவசதிகளும் இருந்திருக்கின்றன. கேணி, ஏற்றம், ஊற்றுக்கால், ஆகியன குறிப்பிடப்படுகின்றன, தமிழில் கிடைத்துள்ள முதற்செப்பேடான பள்ளங்கோயில் செப்பேடு, 'முருக்கங்கேணி' வேள்வடுகன் கேணி' என்ற இரு கிணறுகளைக் குறிப்பிடுகின்றது. அடுத்து ஏற்றம் இறைத்துச் செய்யும் நீர்ப்பாசனம். பல்லவர் செப்பேடுகள், குற்றேத்தம், பேரேத்தம் என்ற இருவகையினைக் குறிப்பிடுகின்றன. 'விலாடன் குற்றேத் தெல்லை,' 'மும்மூலை ஏத்தம்,' 'மாவேத்தத்து எல்லை' என்பன பள்ளங் கோயில் செப்பேட்டு வாசகங்கள் (180 of 1912). திரு

வொற்றியூர்க் கல்வெட்டு, ஏற்றம் இறைத்துப் பயிர் செய்யும் நிலத்தினை, 'பேரேற்ற பூமி' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றது. இம்முறை விஜய நகரர் காலம் வரையிலும்கூட வழக்கில் இருந்தது என்பது திருமுல்லைவாயிலில் உள்ள ஹரிஹரரின் கி. பி. 1388-இனைச் சேர்ந்த கல்வெட்டு மூலம் அறியலாம். ''இந்நிலத்துக்கு அறுநீர் பெருநீர் கூடை இறைத்துக் கொள்ளவும், தீணிர் உள்ள இடத்திலே குடலைத் துரவு இட்டு இறைத்துக் கொள்ளவும் கடவர்களாகவும்'' என்பது கல்வெட்டுப்பகுதி. இங்கு கூடை, குடலை ஆகிய சொற்கள் இறைக்கப் பயன்படும் கருவியைக் குறிக்கின்றன. இந்த ஏற்றங்கள் ஏற்றம் கிணற்றில் மட்டும் இன்றி, கால்வாயினின்றும் நீர்எடுக்கவும் பயன்பட்டன. அதனை, ''இக்கால்களில் கூடை இறைத்தும், குறங்கு அறுத்தும், குற்றேத்தம் பண்ணியும்' என்ற வரிகள் (காசாக்குடிச் சப்பேடு) புலப்படுத்தும். இவையன்றி வெள்ளம் ஏற்பட்ட காலத்து, சேதம் வாராதிருக்கும் பொருட்டு வெள்ளக்கால்களும் அமைக்கப் பட்டு இருந்தன. இதனையும் சில கல்வெட்டுகள் குறிக்கின்றன (S. I. I.Vol II Part III p.352.).

**துறையும் வரிகளும்**

பாசன வசதியைப் பொறுத்தவரை, அதன்மூலம் அரசுக்குச் சில வரிகள் கிடைத்தன. அவற்றைப் பராமரிக்கத் தனியான அரசுப் பிரிவும் இருந்தது. பெரிதும் சிறப்பாகப் பேசப்படும் உத்திர மேரூர் குறிக்கும் வாரியங்களில் ஏரி வாரியமும் ஒன்று; மேலும் இம்மாவட்டத்தைச் சேர்ந்த பரந்தூர் என்ற ஊரில் கிடைத்துள்ள கல்வெட்டுமூலம், ஏரிவாரியத்துக்கென தனியாகச் கணக்கர் முத லிய பல அதிகாரிகளும் இருந்தனர் என்பதை அறிகிறோம். உத்தம சோழனின் 14-ஆம் ஆட்சியாண்டைச்சார்ந்த இக்கல்வெட்டு (10-ஆம் நூற்றுண்டு) அபராஜித சதுர்வேதி மங்கலத்து சபையினர் எடுத்துக்கொண்ட தீர்மானத்தைக் குறிக்கிறது.

''அபராஜித சதுர்வேதி மங்கலத்து சபையோம் எம்மில் செய்த சபைவாரியமும் ஏரிவாரியமும்..................பட்டன்

**கணக்கு**

**ஏரிக்கணக்கு**

ஏரிகள் குளங்கள் தொடர்பான எந்த மாற்றமும் ஏரிவாரியப் பெருமக்களின் அனுமதியுடனேயே நடைபெற்றது. இத்துறைக் கன ஒதுக்கும் பணம், நாட்டுப் பொருளாதாரத்தில் பெரும் பங்கு பெற்றது. 'தண்ணீர்க்கும் தீக்கும் ஒரு பங்காயி' (அதில் குறிக் கப்படும் தானத்தில் 25இல் ஒருபங்கு நீர்வசதிக்காகச் செலவிடப்பட் டது) என்பது கூரம் செப்பேட்டு வாசகம். ஏற்றம் இறைப்பதற்

குரிய வரி, 'ஏத்தக்காணம்' என்று அழைக்கப்பட்டது. ஏரியின் கவனிப்புக்கு உரியதாக ஒதுக்கப்பட்டிருந்த நிலங்கள் ''ஏரிப்பட்டி'' என்று வழங்கப் பட்டன.

**தண்டனை**

இத்தகைய பாசனத்திற்குரிய எதையும் அழித்தல் பெரும் தவறாகக் கருதப்பட்டது. கால்வாய்க்குத் தீங்கு செய்வானுக்கு அளிக்கப்படும் தண்டனையை ஒரு கல்வெட்டு (வீரன் கோயில்) குறிப் பிடுகிறது (252 of 1952-53).

**கலை**

இறுதியாக ஒரு செய்தி. இத்தகைய பாசன வசதித் திட்டங் கள் செய்வதிலும் கலையுணர்வு இருந்தது. அதனைக் கோயிலில் அமைக்கப்பட்டிருந்த குளத்தில் உள்ள ஒரு கல்வெட்டு குறிக்கிறது. ராமகிரியில் குளத்திற்கு வெளியிலிருந்து நீர்வந்து நிரப்புவதற்குரிய அமைப்பு உள்ளது. நீர் குளத்தில் விழும் பகுதி ஒரு காளையின் உருவில் அமைந்துள்ளது. திறந்திருக்கும் அதன் வாயினின்று நீர் விழுகின்றது. அக்காளையின் முதுகின்மீது அந்தக்கலைச் சின்னத்தை உருவாக்கிய சிற்பியின் பெயர் செதுக்கப்பட்டுள்ளது.

எனவே, பல்லவர் காலத்தில் நீர்பாசனத் திட்டங்கள் பெரும் அளவில் தொடங்கப்பட்டு, சோழர் காலத்தில், அதில் முன்னேற் றங்களும், காப்புச் செயல்களும் நிகழ்ந்து, இன்றும் 'ஏரி ஜில்லா' என்ற பெயருடன் விளங்குகின்றது இப்பகுதி.

# பொதத்தூர்பேட்டை சிவன்கோயிலும் மட்டூர் மகிடாசுரமர்த்தினி சிலையும்

எஸ். மீனுட்சிசுந்தரம்

பொதத்தூர்பேட்டை திருத்தணியிலிருந்து 25 கி. மீ வட மேற்காக அமைந்துள்ளது. இவ்வூர் ஏறத்தாழ 15000 மக்கள் வசிக்கும் நகரப்பஞ்சாயத்தாக உள்ளது. நகரின் வடபுறத்தின் கடைசியில் சிவாலயம் உள்ளது. இக்கோயிலின் கருவறைத் தெய் வம் 'அகஸ்தீஸ்வரர்' என்று அழைக்கப்படுகின்றார். இக் கோயிலி லும் இதற்கு அருகில் உள்ள மட்டூர் நகரி, சத்திரவாடா போன்ற இடங்களில் உள்ள கோவில்களில் இருக்கும் விக்கிரகங்களும் அகத்தியரால் நிறுவப்பட்டதாக நம்பப்படுகிறது.

அகஸ்தீவரர் கோயில் எழிலார்ந்த சூழலில் உள்ளது. இக் கோயிலின் தொன்மைச் சிறப்பை இக்கோயிலில் காணப்படும் கல் வெட்டுக்கள் தெரிவிக்கும். இக்கல் வெட்டுக்கள் மிகப் பெரிய பாறை யில் செதுக்கப்பட்டுள்ளன. விக்கிரம சோழனின் காலத்தியதாகும். இக்கோயிலுக்கு இறை மானியமாக 100 குழி நிலம் அளிக்கப்பட்ட தைக் குறிக்கின்றன இக்கல்வெட்டுக்கள்.[1] கோயிலின் அடிப்பீடத் தில் உள்ள சில கல்வெட்டுக்கள் இன்னும் முழுவதுமாக விளக்கப் படவில்லை.

கி. பி. 1510ம் வருடம் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டது என் பதைக் கோவிலின் முன்புறக் கல்வெட்டு விளக்குகின்றது. முன்னர் இக்கோவில் சிறப்புடன் விளங்கியிருக்க வேண்டும். ஆனுல் இப் போது சிதைந்த நிலையில் காணப்படுகிறது. இக்கோயிலைச் சுற்றி அகழ்வாரய்ச்சி செய்தால் புதைந்திருக்கும் வேறுபல விக்கிரகங்கள் கிடைக்கலாம். இப்போது இக்கோயிலில் சிவலிங்கம் மட்டும் காணப்படுகிறது.

கோவிலின் மேற்கே 1 பர்லாங் தொலைவில் விஜயநகரக் காலத் தினைச் சார்ந்த விஷ்ணு கோவில் காணப்படுகிறது. இக் கோயி லின் மூலவிக்ரகமாக லட்சுமி வராகர் பிரதிஷ்டை செய்யப்பட்

---

1 தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைப் பதிவு அலுவலர் திரு. நடன காசிநாதன் கல்வெட்டுகள் பயிலுவதில் பெரிதும் உதவினுர்.

டுள்ளது.[1] இச்சிலை மிக அழகுடன் விளங்கப்படுவதோடு மகா விஷ்ணுவின் அம்சம் ஆகிய வராக அவதாரத்தை விளக்குகிறது. இச்சிற்பம் மகாலட்சுமியைத் தாங்கியபடி உள்ளது.

ஏறத்தாழ 15 ஆண்டுகளுக்கு முன்னால் அரக்கோணத்திற்கும் ரேணிகுண்டாவிற்கும் இடையில் இரயில்பாதை அமைக்கும் பொழுது மட்டுருக்கு அருகே மகிஷாசுரமர்த்தினி சிலை ஒன்று கிடைத்தது. எட்டு அடி உயரமுள்ள இச்சிற்பம் அழகாக இருப்பதோடு 8 கைகளையும்; ஒவ்வொரு கையிலும் சங்கு, சக்கரம், கடகம், திரிசூலம் ஆகியவற்றைத் தாங்கியுள்ளது. மண்டையோடு மாலையை அணிந்துள்ளதாகக் காணப்படுகிறது. மகிஷாசுரனுடன் செய்த போரில் வெற்றி பெற்றதால் இச்சிலையின் முகத்தில் வெற்றிப் புன்னகை தவழுகிறது. காலடியில் மகிஷாசுரனின் வெட்டுண்ட எருமைத் தலை காணப்படுகிறது. அவனுடைய மானிடத்தலை தேவியின் கருணையைக் கோருவதாக உள்ளது. இத்தேவியின் அருட் கடாட்சம் பொருந்திய அனுக்கிரகப் பார்வை மிகவும் அழகிய ஒன்றாகும். இச்சிற்பம் மட்டுருக்கு அருகாமையில் இருந்த சிறு கோவிலில் நிறுவப்பட்டிருக்கலாம்.

# ஆற்றங்கரை அகழ்வாய்வுகள்

மா. சந்திரமூர்த்தி

பண்டைக் காலத் தமிழகத்தில் ஆற்றங்கரையிலும் கடற்கரைப் பகுதியிலும் தோன்றிய நகரங்கள் பண்பாட்டின் சிகரங்களாக விளங்கி வந்துள்ளன. பாண்டிய நாட்டில் பொருநைக் கரையில் கொற்கை மாநகரும்[1], வைகைக் கரையில் மதுரை மாநகரும்[2] எழுந்தன. சோழ நாட்டில் புகார்[3] நகரம் காவிரி வங்கக் கடலோடு கலக்கும் இடத்தில் தோன்றியது. கொங்கு நாட்டில் ஆன் பொருநைக் கரையில்[4] வஞ்சிக் கருவூர் தோற்றுவிக்கப்பட்டது. இதைப் போன்றே தொண்டை நாட்டில் வேகவதி ஆற்றங்கரையில் காஞ்சி மாநகரும், பாலாறு கடலோடு கலக்கும் இடத்தில் வசவ சமுத்திரமும்[5] அமைந்து பல வரலாற்றுத் தடயங்களேயும் கலைச்செல்வங்களேயும் தந்துள்ளன.

சங்க காலம் தொட்டே தலை சிறந்த நகரங்களில் ஒன்ருக விளங்கும் காஞ்சியின் தொன்மையை அறியும் பொருட்டு மத்திய அரசு தொல் பொருள் ஆய்வுத்துறையும்,[6] தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறையும்[7] காஞ்சியின் ஊடே ஓடி வருகின்ற வேகவதி ஆற்றின் வடகரையில் அமைந்திருக்கின்ற 'பல்லவமேடு' என்ற மேட்டுப் பகுதியில் அகழ்வாய்வு செய்தன. தமிழ்நாடு அரசு பல்லவ மேட்டில் 1971-ஆம் ஆண்டில் இரண்டு இடங்களில் அகழ்வாய்வு மேற்கொண்டது.[8] வேகவதி ஆற்றின் ஓட்டம் மாறி இருக்கிறது என்பது இவ்வகழ்வாய்வு மூலம் தெரியவந்தது.

காஞ்சியிலே சென்னைப் பல்கலைக்கழகம் காமாட்சி அம்மன் கோயிலுக்கு அருகிலும்,[9] வரதராஜப் பெருமாள் கோயிலுக்கு அருகிலும், ஞானப் பிரகாச மடத்திற்குப் பினபுறமும்.[10] வசந்த தோட்டத்திலும் ஏனைய இடங்களிலும் ஆக 6 ஆண்டுகள் தொடர்ந்து அகழ்வாய்வு நடத்தியது. இவ்வாறு காஞ்சி மாநகரில் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சியின் முடிவாகப் பல சான்றுகள் நமக்கு தெரிய வந்துள்ளன.

**காலமும் கலாச்சாரமும்**

காஞ்சியில் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த பண்டைய சான்றுதாரங்களேக் கொண்டு, சங்க காலம், சங்கம் மருவிய காலம், பல்ல

வர் காலம், சோழர் காலம், விஜயநகர அரசர் காலம் வரை இங்கு வாழ்ந்த மக்களின் சமுதாயப் பண்பாட்டுக் கலாச்சாரத்தை அறியலாம்.

சங்ககால மக்கள் அன்ருட வாழ்க்கையில் பயன்படுத்திய அழகிய மட்கலங்கள் வாயிலாக அக்கால வாழ்க்கை முறையின் அம் சங்களை அறிய அகழ்வாய்வு வழி திறந்து விட்டது.

பல்வேறு வடிவங்களில் வடிக்கப்பட்ட பானைகள், வண்ணம் தீட்டிய மட்கலங்கள், துளையிடப்பட்ட பானைகள், கண்ணுரப்பானை கள், துளையிடப்பட்ட வடித்தட்டுகள், பழுப்பு நிறப்பானை ஓடுகள், சாம்பல் நிற பானை ஓடுகள் யாவும் அம்மக்களின் மனை வாழ்க்கையி லிருந்த நனி நாகரிகச் சிறப்பினைத் தெளிவாகக் காட்டும் காலக் கண்ணுடிகளாக அமைந்துள்ளன. இவற்றை அம்மக்களின் உண வுண்ணும் பழக்கத்தை அறியக்கிடைத்த உள்ளார்ந்த சான்று களாகக் கொள்ளலாம்.

**அகழ்வாய்விலும் கல்வி**

''தொண்டை நாடு சான்ருேருடைத்து'' என்ற முதுமொழிக் கிணங்க, இங்கு தமிழ் எழுத்துப் பொறித்த பானை ஓடுகளும்,[11] எலும்பாலான எழுத்தாணியும்[12] கிடைத்துள்ளன. இத்தகைய எலும்பாலான எழுத்தாணிகள் தக்ஷசீலம் (சிர்காப்) பகுதியிலும் கிடைத்துள்ளன.[13] அவற்றுடன் இது ஒப்பிடத்தக்கது. அகழ் வாய்வில் கிடைத்த எழுத்துப் பொறித்த பானை ஓடுகளின் காலமும், தமிழகத்து மலைப்படுக்கைகளில் கண்டுபிடிக்கப் பட்ட தமிழ்க் கல்வெட்டுகளின் காலமும் ஏறக்குறைய சமகாலத் தவை. எடுத்துக் காட்டாக கருவூருக்கு அருகில் ஆர்நாட்டார் மலையிலும்,[14] திருக்காம்புலியூர், அழகரை ஆகியவற்றுக்கு அருகில் ஐயர் மலையிலும்,[15] உறையூருக்கு அருகில் திருச்சிராப்பள்ளி மலைப்படுக்கையிலும்[17] கிடைத்தவற்றைக் கூறலாம். இவை கிறித்து வின் தொடக்க காலத்தைச் சார்ந்தவை. எனவே அகழ்வாய்வில் கிடைத்த எழுத்துப் பொறித்த பானை ஓடுகளின் மூலமும, குறியீடு கள் பொறித்த பானை ஓடுகளின் மூலமும், சங்க கால மக்களின் கல்வியை அறியவும் அக்கால எழுத்துக்கலையை அறியவும் முடிகின்றது.

தமிழ் எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைத்த ஆய்வு மையங்களில் காஞ்சியும் ஒன்ருகும்.

இதைப்போன்றே எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் அரிக்க மேடு,[17] அழகரை, உறையூர்,[18] கருவூர்,[19] கொற்கை,[20] திருக் காம்புலியூர் ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன. சங்கம் வளர்த்த

மதுரையைப் போன்று, பண்டுதொட்டே காஞ்சியும் கல்வி கேள்வி களில் சிறப்புற்றிருந்தது, அப்பர் பெருமானால் 'கல்வியிற் கரையிலா காஞ்சி மாநகர்' எனறு வாயாரப் புகழப்பெற்றது இம்மாநகர். புத்தகோஷர், தர்மபாலர்,[21] திக்நாகர்,[22] போதிதருமர், வாத்ஸ யாயனர் ஆகிய அறிஞர்களின் தொடர்பாலும் இந்நகர் அலங் கரிக்கப்பட்டது.

### சமயமும் சடங்கும்

பௌத்த பிட்சுகள் தம் சமயக் கொள்கையைப் பரப்ப வேண்டி யும், பொதுமக்களுக்குப் பிரச்சாரம் செய்ய வேண்டியும், வழிபாடு செய்ய வேண்டியும் கட்டியெழுப்பிய விகாரைகள் இங்கு நடந்த அகழ்வாய்வு மூலம் கண்டுபிடிக்கப்பட்டன.[23] இங்கு கண்டெடுக்கப் பட்ட சுடுமண் உருவம், ஸ்ரீவத்ஸம் பொறித்த முத்திரைகள், வழி பாட்டிற்குரிய சின்னஞ்சிறு ஸ்தூபம், ஓதிம விளக்குகள், பிறைவடி வான குறியீடு ஆகியவை[24] அக்கால மக்களின் சமய உணர்வையும், நம்பிக்கையையும், சமயச்சடங்கினையும் அறிய உதவுகின்றன. ஆகவே சைவம், வைணவம், பௌத்தம் ஆகிய சமயங்கள் அருகருகே இருந்து போட்டியிட்டு வளர்ந்தன என்று கருதலாம்.

### கலையும் தொழிலும்

சங்ககால மகளிர் அணிந்த சங்கு வளையும், சுடுமண் வளையும், சுடுமண் காதணி, இரட்டை மீன்க்ள்,[25] ஆமை, ஸ்ரீவத்ஸம் போன்ற வடிவங்களில் ஆன கழுத்தை அணிசெய்யும் பதக்கங்களும், விலைமிக்க மணிகளும் அழகுபடுத்தப்பட்ட அணிகலன்களின் எச்சங்களும் இன்னும் பிறவும் இங்கு கிடைத்துள்ளன. இவை அம் மக்களின் கலையுணர்வை அறிந்து கொள்ளும் வகையில் ஒளியைப் பாய்ச்சுகின்றன.

இங்கு கிடைத்த நூல் இழைகள் (fabrics)[26] நெசவுத் தொழிலில் அம் மக்களுக்கிருந்த அறிவையும், ஆழ்ந்த திறமை யையும் அறிய உதவுகின்றன.

### விளையாட்டும் பொழுது போக்கும்

அகழ்வாய்வில் கிடைத்த வட்டச்சில்களும் (Terracotta discs) எலும்பாலான தாயக் கட்டைகளும் (born dice) சுடுமண் சதுரங்கக் காய்களும் (chesmen) அம்மக்களின் அன்றாடப் பொழுதுபோக் கையும் விளையாட்டையும் அறிய உதவுகின்றன்.

தானியத்தைச் சேர்த்துவைக்கும் பெருமட்கலங்கள் இங்கு கிடைத்துள்ளன. கால் நடைகள் நீர் அருந்து வதற்காக வைக்கப்

பட்ட சுடுமண் நீர்த் தொட்டிகளின் எஞ்சிய பகுதிகள் கண்டறியப் பட்டுள்ளன. மேலும் உமிகலந்த மண்ணால் உருவாக்கப்பட்ட அடுப்புகள், காரைப் பூச்சுடன் கூடிய சுட்ட பெருஞ் செங்கற் களும், உறைக்கிணறுகளும் கிடைத்துள்ளன.

இரும்பாலான அரிவாள், தூண்டில் முள், உண்டபின் எறிந்த எலும்புத் துண்டுகள் முதலியன கிடைத்துள்ளன. இவற்றின் மூலம் அக்கால மக்களின் வேளாண்மைத் தொழில் மட்டுமின்றி கலாச்சாரச் சிறப்பினையும் அறிந்துகொள்ள முடியும். இம் மக்களின் உணவில் புலாலும் இடம் பெற்றது எனலாம்.

**வணிகத் தொடர்பு**

பண்டைய இலக்கியங்களில் ரோமானியத் தொடர்பினை வலி யுறுத்திக் கூறும் பகுதிகள் பல உள்ளன. இவற்றின் மூலம் கிடைக்கும் சான்றுதாரங்களை உறுதிப் படுத்தும் வகையில் உரோ மானிய மதுச்சாடிகளின் எச்சங்கள், அப்பாணியைத் தழுவி, உள் நாட்டில் செய்யப்பட்ட மதுக் குடங்கள் ஆகியவைகளும் கிடைத் துள்ளன. இவற்றின் எண்ணிக்கை நாற்பத்தைந்து ஆகும். இவை அயல் நாட்டோடு நமக்குள்ள தொடர்பினை வெளிக்காட்டுகின்றன. இங்குக் கிடைத்த படகு உருவம் வரையப்பட்ட பானை ஓடுகள் "திரைகடல் வணிகத் தொடர்பை" உறுதிப்படுத்தும். இங்கு "சாதவாகனர்.[27] பல்லவர், சோழர்[28] கால நாணயங்களும் கிடைத்துள்ளன. உள்நாட்டு வணிகச் சிறப்பினையும், செல்வச் செழிப்பினையும் செப்பு வனவாக இவை அமைந்துள்ளன.

**மணிகளின் உற்பத்தி மையம்**

இங்கு சுடுமண் மணிகளும், அகேட் (Agate) ஜாஸ்பர், (Jasper) கார்நீலியன் (cornelıan) சால்சிடெனி, (chalcedonny) படிமமணிகள் (Quartz crystal) முதலிய விலையுயர்ந்த வண்ண மணிகள் கிடைத்துள்ளன. இவை தமிழ் நாட்டில் அரிக்கமேடு, காவிரிப்பூம் பட்டினம், உறையூர், திருக்காம்புலியூர், அழகரை. கருவூர், கொற்கை ஆகிய இடங்களில் கிடைத்துள்ளவற்றுடன் ஒப்பிடத்தக்கன. எனினும் மேற்குறித்த இடங்களைவிட கண்ணாடி மணிகளும், ஏனைய மணிகளும் இப் பகுதியில் எண்ணிக்கையில் அதிகமாகக் கிடைக்கின்றன.

அடுத்து இம் மணிகள் தயாரிப்பதற்கு உரிய மூலப் பொருட்கள் காஞ்சி அகழ்வாய்வில் அதிகமாகக் கிடைத்துள்ளன.[29] அவ்வாறு கிடைத்துள்ள பல்வேறு வகையைச் சார்ந்த மணிகளில் செதுக்கப் பட்டனவும், துளையிட்டனவும், துளையிடாதனவுமே அதிகமானவை.

இப்படி வேலைப்பாடு முற்றுப் பெறுத மணிகள் அதிகமாகக் கிடைப்பதால், காஞ்சி மாநகரின் இப்பகுதி மணிகளின் உற்பத்திச் சாலையாகவும், மையமாகவும், வாணிபத் தளமாகவும் இருந்திருக்கவேண்டுமென்று உறுதிப்படுகின்றது.

காஞ்சி மாநகரம் உயர்ந்த கற்களும், அழகிய முத்துக்களும் சங்க காலத்திலேயே பெற்றிருந்தது என்பதை கி.பி, முதல் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ''பாங்கோ'' என்ற சீன நாட்டவர் குறிப்பில் இருந்து அறிகிறோம்.[30] இவை சங்க இலக்கியங்கள் காட்டும் கருத்துக்களுக்கு ஆதாரமாக அமைகின்றன.

### சுடுமண்ணுல் ஆன விளக்கு

சுடுமண்ணுல் செய்யப்பெற்ற விளக்கு ஒன்று காஞ்சி அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டது.[31] இது பௌத்த விகாரம் எனக் கருதப்படும் கட்டிடப் பகுதியின் அருகில் கிடைத்தது. விளக்கைச் சுற்றிலும் இலைவடிவமும், கூரிய நாக்கு வடிவமும் அணி செய்கின்றன.

தேர்[32] எனும் ஊரில் கிடைக்கப்பெற்ற சுடுமண் விளக்கிலும் இத்தகைய அலங்காரத்தைக் காணலாம்.

### சுடுமண்ணுல் ஆன காசு வார்ப்பு

வட்ட வடிவமான சுடுமண் காசு வார்ப்பின் நடுவில் வட்ட கோட்டினுள் நண்டினுடைய உருவம் ஒன்று பதிக்கப்பெற்றுள்ளது. இவ்வார்ப்பு அக்காலத்தில் பதக்கமாகவும் பயன் பட்டிருக்கலாம். இவ்வார்ப்பில் காணப்படும் உருவம் பண்டைய ''ரோம் நகர'' வாழ்க்கையோடு தொடர்புடையதாகக் கருதப்படுகிறது. சில ரோமானியக் காசுகள் இந்த உருவத்தை முன்புறத்தில் பெற்றிருக்கின்றன.

தமிழகத்தில் ரோமானியக் காசுகள் மிகவும் அறிமுகமானவையாக இருந்திருக்கிறது. அவைகளில் சிலவற்றின் முன்புறத்தில் நண்டுருவம் காணப்படுகிறது.

நண்டுருவம் பொறித்த உரோமானியக் காசுகள் அதிக அளவில் நாட்டில் புழக்கத்தில் இருந்தமையால், அத்தகைய காசுகளை வார்ப்பதற்குச் சுடுமண்ணுல் ஆன காசு வார்ப்பு உண்டாக்கப் பட்டன எனலாம். வட இந்தியாவில் உள்ள உஜ்ஜையினியிலும் ரோமானியப் பேரரசர் அகஸ்டஸ்டஸ் ஹாட்ரியனஸ்[33] உருவம் பொறித்த காசு வார்ப்புக் கிடைத்துள்ளதைப் பார்க்கையில் தென்னிந்தியாவில் மட்டுமின்றி, இந்தியா முழுவதும் பழங்

காலத்தில் சுடுமண்ணுல் ஆகிய காசுவார்ப்பு வழக்கத்தில் இருந்தது என்பது தெளிவு.

**சுடுமண் முத்திரை**

காஞ்சி அகழ்வாய்வில் ஒழுங்கற்ற வடிவமுள்ள ஒரு சுடுமண் முத்திரையும் கிடைத்தது,[34] ஏறத்தாழ இவ்வுருவம் வட்டவடிவமாகக் காணப்பட்டாலும் ஒரு பகுதி தட்டையாக உள்ளது. தட்டையாக உள்ள பகுதியில் ஒரு உருவம் பொறிக்கப்கட்டுள்ளது.

முழுமையாகப் பார்க்கும்போது, அது ஒரு தாமரையாக இருக்கலாம் என்று கருத வேண்டியுள்ளது. இம் முத்திரை கிடைத்த பாளநிலே பல்லவர் காலத்தைச் சார்ந்ததாக இருப்பதால், இவ்வுருவம் பல்லவர் காலச் சிற்பம், ஓவியம் ஆகியவற்றுடன் தொடர்புடையதாக இருக்கலாம். மாமண்டூர்,[35] ஆர்மாமலே[36] சித்தண்ணவாசல்,[37] போன்ற இடங்களில் காணப்படும் ஓவியங்களில் உள்ள தாமரை மலர், இம் முத்திரையில் காணப்படும் தாமரை மலரை ஒத்துள்ளது.

மேலும் இவ்வுருவம் இருபக்கங்களிலும் கிளேகள் வளேந்து தொங்கும், பெரியமரத்தையும் அதன்கீழ் நிற்கும் மயிலேயும், குறிப்பதாகவும் கருதலாம்.

தண்டியலங்காரத்தில் உள்ள பழம் பாடல் ஒன்றில் காஞ்சி மாநகர் மயிலுக்கு உவமித்துக் கூறப்பட்டிருப்பதை[38] இவ்விடத்தே நினைவு கூர்தல் சிறப்புடையதாக அமையும்.

**பௌத்த விகாரம்**

காஞ்சி அகழ்வாய்வில் நீண்ட சுட்ட செங்கற்களால் ஆன மாபெரும் மண்டபத்தின் சிதைந்த பகுதிகள் கிடைத்துள்ளன[39] இப் பகுதிகளே ஒரு பௌத்த விகாரத்தின் பகுதியாக கருதுதல் வேண்டும்.

கிறித்துவின் ஆரம்ப நூற்றுண்டுகளில் இந்த விகாரம் கட்டப்பட்டிருக்கலாம். இதற்கு அருகே உள்ள மக்கள் குடியிருப்புப் பகுதிகள் கி. பி. முதல் அல்லது 2-ஆம் நூற்றுண்டில் கட்டப்பட்டது என்று யூகிக்கலாம்.

இக்காலத்திய இலக்கியங்களில் காணப்படும் குறிப்புக்களுக்குப் பொருத்தமாக இந்த மண்டபத்தின் நிலேயும் அடையாளங்களும் உள்ளன. பௌத்த மதத்தோடு சம்பந்தபட்ட இதுபோன்ற கட்டிடங்கள் காவிரிப்பூம்பட்டினம் போன்ற இடங்களில் செய்யப்பட்ட அகழ்வாய்விலும்[40] தோண்டி எடுக்கப்பட்டிருக்கின்றன.

**சுடுமண்ணால் ஆகிய தலைவன்**

சுடுமண்ணால்ஆன ஆணின் தலைப்பகுதி ஒன்றும் அகழ்வாய்வில் கிடைத்துள்ளது. இது பல்லவர்கால தலைவனின் உருவமாக இருத்தல் வேண்டும்; அகன்ற முகம், கூரிய மூக்கு; விரிந்த நுதல், சின்னஞ் சிறு உதடுகள்; நீண்டு தொங்கும் காதுத்துளைகள் பரந்த மார்பு ஆகியவை இவ்வுருவத்தின் சிறப்பு அம்சங்கள் ஆகும். தலையில் விசிறி மடிப்புப் போன்ற பெருங்குடி மக்களுக்கும், அரச வழியினர்க்கும் உரிய பொருத்தமான தலைப்பாகையும், முகத்திலே தோன்றும் கம்பீரமும், அரசவழியினர் என்பதை உறுதிப்படுத்துகின்றது.

இவ்வுருவத்தில் காணப்படுவது போன்ற தலைமுடி தென்னிந்தியாவில் ஆடவரின் சுடுமண் உருவங்களில் இருப்பது மரபுதான். சான்றாகத் திருக்காம்புலியூரில் காணப்படும்[41] ஓர் உருவத்தை ஒப்பிடலாம்.

ஏறக்குறைய இக் காலத்தைச் சேர்ந்த சில சுடுமண் பொம்மைகள் தர்மபுரி மாவட்டத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன[24].

**உறைகிணறு**

பண்டைத் தமிழகத்தில் கடற்கரை ஓரங்களிலும், ஆற்றோரங்களிலும் உறைகிணறுகள் அமைந்திருந்தன. புகார் நகர ல உறைகிணறு அமைந்திருந்த பகுதியைப் பற்றி பட்டினப்பாலை பேசும். அப் பகுதி 'உறைக் கிணற்றுப் புறச்சேரி'[43] என அழைக்கப்பட்டது.

தமிழகத்தில் நடந்து முடிந்த அகழ்வாய்வுகளில் கொற்கை, நந்தன்மேடு[44] காவேரிப் பூம்பட்டினம்[45] வசவசமுத்திரம்[46] ஆகிய இடங்களிலும் உறை கிணறுகள் கிடைத்துள்ளன. காஞ்சிபுரம் ஞானப்பிரகாச மடத்தின் அருகில் நடந்த ஆய்வில் இரண்டு உறை கிணறுகள் கடைத்துள்ளன. அவை இரண்டும் அருகருகே உள்ளன. இவ்வுறை கிணறுகளின் வளையங்கள் சுடுமண்ணால் செய்யப்பட்டவை. பல உறை வளையங்களைக் கொண்டு அடுக்கப்பட்ட இக் கிணற்றின் உயரம் 7 அடி ஆகும். இதன் விட்டம் 2½ அடி.

புதுவை மாநிலத்தில் அரிக்கமேட்டில் பிரஞ்சு நாட்டுப் புதைபொருள் ஆய்வாளர்களால் செங்கல்லால் கட்டப்பட்ட தொட்டிகள் குளங்களின் அருகே கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன.[47] அவைகள் துணிகளைச் சாயம் ஏற்றுவதற்கு உபயோகப் பட்டிருக்கலாம் என கருதப்பட்டது,

காஞ்சியில் கண்டுபிடிக்கப்பட்ட உறைகிணறுகளைச் சுற்றிலும், பக்கவாட்டிலும் முப்பதுக்கும் மேற்பட்ட உள்நாட்டு மதுக்குடங்கள் கிடைத்துள்ளன. இவ்வமைப்பை நோக்க ஒருவேளை இந்நீர் நிறைந்த உறை கிணறுகள் மதுக்குடங்களுக்கு குளிர்சாதனப் பெட்டியாக பயன்பட்டிருக்கலாமோ எனக் கருத வேண்டியுள்ளது மேலும் மதுவை விரைவில் புளிக்க வைக்க (fermentation) இக்கூர் முனை மதுக்குடங்கள் உறைகிணற்றைச் சுற்றி புதைக்கப்பட்டிருக்க வேண்டும். இன்றும் கிராமப்புறங்களில் மதுவை புளிக்க வைக்க கிணறு, குளம்.ஆறு ஆகிய நீர் நிறைந்த நீர்பாங்கான பகுதிகளில் மதுக்குடங்களை புதைக்கும் வழக்கத்தைக் காணலாம்.

## வசவசமுத்திரம்

செங்கை மாவட்டத்தில், பாலாறு கடலோடு கலக்கும் இடத்தில் உள்ள ஒய்யாலி குப்பம் அருகில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரை வரலாற்றுச் சிறப்பு மிக்க மாமல்லையிலிருந்து 11 கி.மீ. தெற்கே சென்றால் அடையலாம்.

சில ஆண்டுகளுக்கு முன்பு இவ்வூரில் தற்செயலாக ஒரு கூர்முனை ஜாடி (Conical Jar) கிடைத்தது. அதுவே இப்பகுதியின் ஆய்வுக்கு உந்து சக்தியாக அமைந்தது. இவ்வூரைச் சேர்ந்த நிலக்கிழார் ஒருவர் சுண்ணும்புக் கிளிஞ்சல்கள் சேகரிப்பதற்காக ஒரு மேட்டுப் பகுதியைத் தோண்டினர். இச்செய்தி செங்கை வட்டாட்சியருக்கு அப்பகுதிவாழ் மக்களால் தெரிவிக்கப்பட்டது. வட்டாட்சியர் அப்பகுதியைப் பார்வையிட்ட போது, அங்கு கிடைத்த சுண்ணும்புக் கிளிஞ்சல்களும், பானை ஓடுகளும் அவருக்குக் காண்பிக்கப்பட்டன. இச்செய்தி அவ்வாட்சியர் மூலம் தமிழ்நாடு அரசுத் தொல்பொருளாய்வுத்துறைக்குத் தெரிய வந்தது. தொல்பொருளாய்வுத்துறையினர் அப்பகுதியையும், பொருட்களையும் ஆய்வு செய்தனர். நிலக்கிழாரின் சேகரிப்பில் வைத்திருந்தவை தொன்மை மிக்க அம்போரா (Amphorae) என்ற ரோமாளிய மதுக்குடத்தின் கழுத்துப் பகுதி என்றும்; உள்நாட்டில் செய்யப்பட்ட கூர்முனை ஜாடிகள், வடிகுழாய்கள் செங்கற்கள் என்றும் தெரிய வந்தது.[48]

இத்தொன்மைச் சிறப்பறிந்த துறை, அப்பகுதியில் உடன் அகழ்வாய்வு மேற்கொண்டது. இங்கு நடந்த அகழ்வாய்வுகளில் உறை கிணறுகள், வடிகுழாய்கள், சுட்டடுப்புகள் சுண்ணும்புக் கிளிஞ்சல்கள் முதலியவை கிடைத்தன. இங்கு கிடைத்த தொல் பொருட்கள் அனைத்தும் அரிக்கமேட்டில் கிடைத்தவற்றைப் பெரும்பாலும் ஒத்திருந்தன. இருந்தபோதிலும் பெருங்கற்கால (Megali-

thic period) பண்பாடு காலத்தில் நிலவிய கருப்பு-சிவப்புப் பானை ஓடுகள் (Black and red ware) இங்குக் கிடைக்கவில்லை. இப்பகுதியின் கால ஆய்வுக்கு ஒரு வகையில் இதுவே வழி திறந்து விட்டது என லாம். அரிக்க மேட்டைப் போலக் கருப்பு-சிவப்புப் பானை ஓடு கள் அதிக அளவில் கிடைக்காததால் இப்பகுதி கி. பி. 3, 4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக் கருத வேண்டியுள்ளது.

காஞ்சி நகரம் ஒரு துறைமுகப் பட்டினம் எனச் சீனயாத்திரீகர் யுவான் சுவாங் குறிப்பிட்டிருக்கிறார். வசவசமுத்திரத்திலிருந்து வேகவதி ஆற்றின் கரையில் உள்ள காஞ்சிக்குப் பாலாற்றின வழியே பெரும் படகுகள் சென்று வரும் வகையிருந்தது. அதில் மனிதர்கள் பயணம் செய்ததோடு, அதிக அளவில் சரக்குகளும் சென்று வந்தன. எனவே ஆற்றில் படகுப் போக்குவரத்தைக் கண்ட அவர் காஞ்சியையே துறைமுகப்பட்டினம் என்று கருதிவிட் டார் போலும்! அவர் அவ்வாறு கருதக் காரணமாக இருந்தது இவ்வசவ சமுத்திரமே எனலாம்.

இங்கு நடந்த அகழ்வாய்வின் முடிவுகள், இப்பகுதி அரிக்கை மேட்டைப் போன்று ரோமானியர்களின் ஓர் இருக்கையாகத் திகழ்ந்திருக்க வேண்டும் என்று அறிவிக்கின்றன. ஆனால் இப்பகுதி அரிக்க மேட்டை விடச் சற்றுக் காலத்தால் பிற்பட்டது எனக்கூற லாம். இங்கு ரோமானியர்கள் குறுகிய கால அளவில் தங்கித் தம் தொழிலில் ஈடுபட்டிருந்தனர் என்று கருத வேண்டியுள்ளது.

### அடிக் குறிப்புகள்

1. நற்றிணை—பாடல் 23. வரி 6.
2. பரிபாடல் 6. வரி 60, பரி-9.
3. அகம்.
4. புறம் 11. வரி 5—6.
5. Vasavasamudram, Dr. R. Nagaswamy & A. Abdul Majeed, p—1 Damilica Vol. I, Part I p. 38.
6. Indian Archaeology—A Review 1962—63. p. 12
7. Ibid 1970—71. p. 33.
8. Ibid
9. Ibid 1969—70, pp. 34—35, 1970—71, pp. 32—33.
10. Ibid 1969—70. pp. 34—35.
11. Ibid—1970—71. p. 32.
12. Excavation at Kancipuram—A Report submitted by the author to the University of Madras. 1970. p. 78.
13. Taxila (Sirkap) 1944—45. A. Ghosh pl. xxi. (skr. 273) Ancient India, No. 4, 1948.

14. Corpus of the Tamil Brahmi Inscriptions, Iravatham Mahadevan, No. 56, 57, 58, 59, 66, 73.

15. ஐயர்மலை 'தமிழி' கல்வெட்டு, மா, சந்திரமூர்த்தி. கொங்கு, மூன்றும் தொகுதி. 1973. பக். 201—203.

16. Corpus of the Tamil Brahmi Inscriptions, Iravatham Mahadevan, Plate XVI. No. 68.

17. Ancient India Vol. No. 2. (1946) Plate XLI.

18. Seminar on Inscriptions, Ed. R. Nagaswamy Inscribed potsherds from Alagarai and Uraiyur—Dr. T. V. Mahalingam. pp. 42—43. வரலாற்றில் உறையூர், அ. அப்துல் மஜீத், கொங்கு, நான்காம் தொகுதி, 1974 பக். 215—18.

19. கருவூர் ஆனிலையப்பர் திருக்கோயில் குடமுழுக்கு விழாமலர், 1974, வரலாற்றில் கருவூர், இரா. நாகசாமி. ப. 65.

20. Damilica—Ed. R. Nagaswamy, Vol. I Part I. pp. 40—44. Plate—48a.

21. India through the Ages. K. C. Vyas & R. S. Desai. p. 66.

22. University of Nalanda, H. D Sankalia. pp. 107 (1934). Travels of Hiuen Tsang, S. Hwuili Trans. Samuuel Beal, p-121.

23. Indian Archaeology—A Review. 1969—70. p. 35.

24. Excavation at Kancipuram—A Report by the author, 1070.

25. Indian Archaeology—A Review 1970—71. p. 33.

26. Kancipuram Excavation A Report.

27. Indian Archaeology—A Review 1962-63, p. 12.

28. Ibid. p. 12.

29. Kanchipuram Excavation—A Report by Author

30. Foreign Notices of South India From Megasthenes to Ma Huan, K. A. N. Sastri. pp. 44—45 (1972).

31. Excavation at Kancipuram A Report by the Author 1970.

32. Roman Pottery in India, M. N. Deshpande p. 279.

33. Indian Archaeology—A Review 1957-58, p. 36.

34. Excavation at Kancipuram A Report 1970.

35. J. Dubreil 'Pallava Painting' Indian Antiquary, III, 1923, p. 45.

36. Indian Art, J. Dubreil, 1923. The Armamalai Paintings. Edward Montgomeri and S. T. Baskaran. Lalit Kala—No. 16. pp. 22-27.

37. Tanjore Art Souvenir—T. N. Rama—Chandran 1964. Cave Temple and Paintings of Sittanavasal—T. N. Ramachandran. Lalit Kala No. 9. (1961) pp. 30-54.

38. தண்டியலங்காரம்—சூத்திரம் 39.

39. Indian Archaeology—A Review. 1969-70. pp. 34-35.;

40. Ibid.

41. Excavations in the Lower Kaveri Valley-T. V. Mahalingan. Plate XV Fig. 4,

42. Historic Terracottas from Dharmapuri, R. Poongundran, Souht Indlan Studies, p.173

43. பட்டினப்பாலை—27.

44. Indian Archaeology A Review 1961-62.

45. Ibid—1253-64. 64-65, 65-66, 1970—71, Plate LIII.

46. உறைகிணறு, கி. ஸ்ரீதரன், கல்வெட்டு இதழ் 8, பக். 17-19.

47. Damilica. Dec. 1970—Ed. R. Nagaswamy, p. 38.

48. Ibid.

# கோயில் பொருளாதாரத்தில் அரசின் பங்கு

**மே. து. ராசுகுமார்**

பண்டைத் தமிழகத்தில் கோயில்கள் நிலவுடைமை நிறுவனங்களாகவும் நிர்வாக அமைப்புகளாகவும் நாட்டின் கருவூலங்களாகவும் கல்விச்சாலைகளாகவும் கலைக்கூடங்களாகவும் மக்களின் அன்றாட வாழ்க்கையொடு இயைந்திருந்தன.

கிராமப் பொருளாதார மையமாகவும் உள்ளாட்சியின் உறுப்பாகவும் இருந்த கோயில்களின் பணியும் பங்கும் சிறப்பிடம் பெற்றிருந்ததில் வியப்பில்லை. நூற்றுக்கணக்கான வேலி நிலங்களையும் பல்வேறு நீர்ப்பாசன வாய்ப்புக்களையும் கொண்டிருந்த கோயில்கள் உற்பத்தியிலும் உற்பத்தியை விநியோகம் செய்வதிலும் தங்கள் பணியைச் செய்திருக்கின்றன.

மக்களின் பொருளாதார வாழ்க்கையோடு கோயிலின் பொருளாதாரம் இணைந்திருந்ததால் கோயிலின் வருவாய்களையும் பணிகளையும் நிர்வாகம் செய்வதிலும் முறைப்படுத்தி ஒழுங்குபடுத்துவதிலும் அரசன் மிகுந்த கவனம் செலுத்தினான்.

கோயிலின் அன்றாட அலுவல்களை நடத்த ஸ்தானத்தார், ஸ்ரீ காரியம் செய்வார் போன்ற கோயில் அவை உறுப்பினர்கள் இருந்த போதிலும் வருவாயும் சொத்துக்களும் மிகுந்திருந்த கோயில்களின் நிர்வாகத்தை மேற்பார்வை செய்ய அரசனுடைய பணியாளர்கள் அமர்த்தப் பட்டிருந்தார்கள். அவர்கள் திருவேலைக் காவல் என்று அழைக்கப்பட்டார்கள்.

இத்துடன் அவ்வப்போது அரசனின் ஆணையின்படி அதிகாரிகள் கோயிலுக்கு வந்து நிர்வாகம் நடைபெறும் முறையையும் வருவாய் செலவு போன்ற கணக்குகளையும் மேற்பார்வையிட்டுச் சென்றார்கள். ஊழியம் செய்வோருக்கு உரிய முறையில் வழங்கப்பட வேண்டிய ஊதியம், நிலவுடமையாளர்களிடமிருந்து வரவேண்டிய வரி, வட்டி, தண்டம் போன்ற வருவாய்கள், கோயிலில் விளக்கெரித்தல் போன்ற நிவந்தங்களை முறையாகப் பின்பற்றுதல் போன்றவற்றை அவர்கள் அவ்வப்போது பார்த்து ஒழுங்கினம் நடைபெறாமல் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள்.

கோயிலின் கணக்குகள் முறையாகவும் சீராகவும் ஒழுங்காகவும் இருக்கிறதா என்பதைக் கண்காணிப்பதோடு மட்டும் அரசன் அல்லது அதிகாரிகளின் பணிமுற்றுப் பெறுவதில்லை.

கோயிலின் நிலங்கள் ஒவ்வொரு ஆண்டும் முறைப்படி பயிரிடப் படவேண்டும். கோயில் நிலங்கள் பெரும்பாலும் குத்தகையாளர் வழியே பயிரிடப்பட்டு வந்தன. எனவே கோயில் நிலங்கள் முழுமையாகப் பயிரிடப்படாமல் விடப்பட்டால் கோயிலின் வருவாய் குறையும். கோயிலின் வருவாய் குறைகின்ற காலத்தில் ஊழியருக்கு ஊதியம், இறை நிவந்தங்கள், பிற கோயிற் பணிகள் ஆகியன தடைப்படும். ஆகவே கோயில் நிலம் ஏதேனும் சிக்கலினால் பயிரிடப் படாமல் இருந்தால் அரசன் தலையிட்டுப் பயிரிட ஆணைபிறப்பித்திருக்கிறான்.

கி.பி. 1172 இல் திருவொற்றியூரில் பதியப்பட்ட இரண்டாம் ராசாதிராசனது 9 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, வடுகப் பெரும் பாக்கம் என்ற தேவதானக் கிராமத்தில் நிலங்கள் உழுதற்கு வேண்டிய குத்தகையாளர் இன்றிப் பயிரிடப் படாமல் இருந்ததையடுத்து அரசன் ஆணையின்படி அமுதன் கிழவன் பேரியன் சோமன் என் பானுக்குக் குத்தகைக்கு விடப்பட்டதைக் கூறுகிறது.[1] அடுத்த சில ஆண்டுகளில் கி.பி. 1197 இல் மூன்றாம் குலோத்துங்கனது ஆட்சிக் காலத்தில் மீண்டும் ஆதன்பாக்கம் என்ற தேவதானக் கிராமம் குத்தகையாளரின்றிப் பயிரிடப் படாமல் இருந்ததையடுத்து, அரசனுக்குத் தெரிவிக்கப்பட்டு, அவனது ஆணைக்கிணங்க அந்நிலம் குத்தகைக்கு விடப்பட்டதைத் திருவொற்றியூரில் இருக்கும் வேறொரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது.[2]

குத்தகை அளவு மிகுந்திருந்ததோ, அல்லது அந்நிலங்கள் தரங் குறைந்தவையாக இருந்ததோ குத்தகையாளர் கிடைக்காததற்குக் காரணமாக இருக்க வேண்டும். கோயில் மடத்தின் தலைவர், ஸ்தானத்தார், கோயில் மேற்பார்வையாளர், தலைமைக் கணக்கர், குத்தகையாளர்கள் ஆகியோர் இது குறித்து மன்னனிடம் முறையீடாகத் தெரிவிக்கின்றனர். கோயில் நிலத்தின் உற்பத்தியில் கோயில் தொடர்புடைய நிர்வாகத்தினருக்கு இருந்த கூட்டுப் பொறுப்பை அறிவதுடன் கோயில் நிலம் குறித்து இறுதி முடிவெடுக்கின்ற உரிமை மன்னனிடமே இருந்து வந்ததையும் இங்கு காண்கிறோம். கோயில் நிலங்களைக் குத்தகைக்கு விடுவதற்கும் குத்தகை அளவு குறித்தும் விரிவான வரைமுறைகளும் தெளிவான விதிகளும் இருந்திருக்க வேண்டும். இந்த வரைமுறைகளையும் விதிகளையும் மாற்ற அரசனது அனுமதி தேவைப்பட்டிருக்க வேண்டும்

கோயில் நிர்வாகத்தினர், குத்தகையாளர் ஆகியோரது முறையீடு களுக்கு ஏற்ப அரசன் தேவதான நிலத்தைக் குத்தகைக்குத் தர இயைந்து, அதற்கேற்ப ஆணையிட்டிருக்க வேண்டும்.[3]

கோயிலுக்கு வருவாய் குறையும்போது அரசன் இறையிலியாக இருந்த நிலத்துக்கு இறையிட்டு இதனால் வரும் தொகையைக் கோயிலுக்குக் கிடைக்கச் செய்திருக்கிறான். இத்தகவலை திருவொற்றியூரில் இருக்கும் முதலாம் ராஜராஜனின் ஏழாவதுஆண்டுக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[4] இதே போன்று மூன்றும் குலோத் துங்கன் காலத்தில் கோயிலுக்குச் சேர வேண்டிய வரியினை வசூலிக்க வில்லை என்பதற்காகப் புன்னவாயில் சபையினர் கைது செய்யப் பட்டு காவலில் வைக்கப்பட்டனர். ஒரு வேலிக்கு 1/4 மாடை பொன் என்ற அளவில் அரசன் போட்ட வரிக்கு, வழக்கமாக பயிரிடப்படாத நிலத்துக்குத் தரும் விதிவிலக்குத் தரப்படவில்லை என்பதனாலேயே அவர்கள் வரிவசூலிப்பதை நிறுத்தி விட்டார்கள். இருப்பினும் இந்தச் சபைக்குரிய 80 வேலி நிலம் 200 காசுக்கு வழங் கப்பட்டு நிலம் கோயிலுக்கு உரித்தாக்கப் பட்டுவிட்டது.[5]

வெளச்சேரியில் கிடைத்துள்ள முதல் ராஜேந்திரனின் ஆறுவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு அக்கிராமத்தில் இருக்கும் பிராமணர் அல்லாதார் நிலம் முழுமையும் கட்டாயப்படுத்தப்பட்டு கோயி லுக்கு வழங்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது.[6] இத்தகைய கட்டா யப்படுத்தும் செயலைக் கிராம சபையோ ஊர்ச்சபையோ, தன்னிச்சை யாகச் செய்ய இயலாது. ஆகவே அரசனின் முன் அனுமதி பெற்று இந்த மாற்றம் நடைபெறுகிறது. கோயிலின் வருவாயைப் பெருக்கு வதற்காக அரசன் இத்தகைய நடவடிக்கை மேற்கொண்டான் என்று கருதலாம்.

இதே போன்று கோயில் வருவாய் குறையாமல் இருக்கவும் கோயில் பணிகள் முறையாக நடைபெறவும் அரசன் எடுத்துக் கொண்ட பல்வேறு நடவடிக்கைகளைக் கல்வெட்டுகள் தெரிவிக் கின்றன.

கோயிலுக்குத் தரவேண்டிய எண்ணெயை முறைப்படி தராத தால் இடையர் நிலம் கோயிலுக்கு வழங்கப்பட்ட செய்தியை இடை யர்பாக்கம் கல்வெட்டு கூறுகிறது.[7]

கோயில் அரசனுடைய நேரடி அதிகாரத்தில் இருந்ததைத் திருவடந்தைக் கல்வெட்டினால் அறியலாம். வீரபாண்டியன் ஆட் சிக்காலத்தில் தேவரடியார் ஒருத்திக்கு விதிக்கப்பட்ட தண்டத்

தைச் செலுத்தாததால் அவளுடைய நிலத்தைப் பறிமுதல் செய்து ஏலம் விடுமாறு ஆணையிடப்பட்டுள்ளது. ஆனால் அந்த நிலத்தை ஏலத்தில் எடுக்க ஊராரும் சபையும் முன்வரவில்லை. கோயிலும் அந்த நிலத்தை வாங்க முதலில் முன்வரவில்லை. ஆனால் பின்னர் அரசனுடைய ஆணையின்படி கோயில் அந்நிலத்தை வாங்க வேண்டியதாகிறது.[8]

கோயிலின் வருவாயில் அரசன் அளித்த நிலங்களும் அரசனுக்குச் சேரவேண்டிய வரிகளும் பெரும்பங்கு பெற்றிருப்பதால் அரசனுடைய விருப்பத்துக்கும் ஆணைக்கும் உட்பட்டு கோயில் செயல்படவேண்டிய நிலையில் இருந்ததை இங்குக்காண்கிறோம்.

கோயிலின் பொருளாதார அமைப்பு, உற்பத்தியில் அதற்கு இருந்த பங்கு, நீர்ப்பாசன வாய்ப்புக்களில் இருந்த உரிமை போன்றவற்றினால் கோயிலின் ஆதிக்கம் பெரும்பாலும் கிராமத்தைக் கட்டுப்படுத்துவதாக அமைந்திருந்தது எனலாம். இடையர்பாக்கத்தில் உள்ள இரண்டாம் ராஜாதிராஜனின் 11வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இதனை உறுதிப்படுத்துகின்றது.[9] கோயிலுக்குச் சொந்தமான நிலம் ஊர் ஒரத்தில் இருந்தது, ஒதுக்கப்பட்ட இடத்தில் இருந்ததால் பாசனம் பெற்று பயிரிட முடியாத நிலையில் வீணாக அது இருந்தது. இந்த நிலத்தை ஊர்ச்சபைக்குக்கோயில் கொடுத்து விட்டு மாற்றாக மாடுகளைப் பெற்றுக் கொண்டது.

இதையே முதல் பராந்தகனின் 16வது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட உக்கல் கல்வெட்டும் உறுதிப் படுத்துகிறது. கோயிலில் ஸ்ரீகார்யம் செய்வோர் வேண்டுகோளின்படியும் அனுமதியின்படியும் கிராம மக்கள் தங்களுக்குச் சொந்தமான சில நிலங்களைக்கோயிலுக்குத் தருகின்றனர்.[10]

ஸ்ரீகார்யம் செய்கின்ற சக்ரவாண் நம்பி விண்ணப்பத்தினால் சம்வஸ்த்தர வாரியப் பெருமக்களும் ஏரி வாரியப் பெருமக்களும் நிலத்தை நிவந்தமாகத் தந்தனர் என்றும் இதற்கு சக்ரபாணிநம்பி அனுமதி கொடுத்தான் என்றும் கல்வெட்டு கூறுகிறது. இக்கல் வெட்டில் இரண்டு செய்திகள் வலியுறுத்தப் படுகின்றன. கோயில் விரும்பினால் நிலத்தைக் கோரிப்பெறமுடியும் என்பது முதல் செய்தி.

இரண்டாவது செய்தி, இத்தகைய நில மாற்றத்துக்குக் கோயிலின் அனுமதியும் தேவை என்பதாகும். ஊர்ச்சபைக்கோ ஊராருக்கோ சொந்தமாக இருக்கும் நிலத்தை கேட்டுப் பெறும் உரிமை கோயிலுக்கு இருந்தது என்பது ஒருபுறமிருக்க இத்தகைய உரிமை ஏன், எப்படிக் கிடைத்தது என்பதை நாம் கவனிக்க வேண்

டும். ஏற்கனவே பார்த்தபடி கோயில் கிராமத்தின் நிர்வாக அமைப்பாகவும் பொருளாதார அமைப்பாகவும் இருந்துள்ளது.

நீர்ப்பாசனத்துக்கு அடிப்படையான ஏரிகளும் குளங்களும் வாய்க்கால்களும் பெரும்பாலும் கோயிலுக்கே உரித்தாக இருந்திருக்கின்றன. திருக்கச்சியூரில் கிடைத்துள்ள மூன்றும் குலோத்துங்கனின் கல்வெட்டு கோயில் பணத்தில் ஏரி வெட்டப்பட்டதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறது.[11] ஆகவே உற்பத்தியிலும் உற்பத்திக்கு அடிப்படையான நிலத்தை உடைமையாகக் கொண்டிருப்பதிலும் கோயில் பெரும் பங்கு பெற்றிருப்பதில் வியப்பில்லை.

முதலாம் ராஜாதிராஜனின் திருவொற்றியூர் கல்வெட்டு கோயில் நிர்வாகத்தில்அரசனுடையசார்பாளனுக வளவன்மூவேந்த வேளார், விக்கிரமசிங்கமூவேந்தவேளார் ஆகிய அதிகாரிகள் மேற்பார்வையிட்டதைக் குறிப்பிடுகிறது.[12] கோயில் நிலங்கள் சில பயிரிடப்படாமல் இருந்ததைக் கண்ட இவர்கள் உடனடியாகப்பயிர் செய்ய ஏற்பாடு செய்ததுடன் கோயிலுக்குச் சேரவேண்டிய வருவாயையும் குறிப்பிட்டிருக்கிறுர்கள்.

கோயில் இத்தகைய நிலவுடைமை அமைப்பாக விளங்கியதால் தான் கோயில் நிலங்களைப் பறிமுதல் செய்யவோ மாற்றிக் கொடுக்கவோ வேற்றுநாட்டு அரசர்களும் முன்வரவில்லை. மேலைச்சாளுக்கியர் காஞ்சியைக் கைப்பற்றியபோது கோயில் சொத்துக்களைப்பறிமுதல் செய்யாமல் கோயிலுக்கு அப்படியே கொடுத்துவிட்ட செய்தியைக் காஞ்சிபுரக் கல்வெட்டு காட்டுகிறது.[13]

ஆகவே நிலவுடைமை அமைப்பின் சார்பில் ஆட்சியில் இருக்கும் அரசன் நிலவுடைமை நிறுவனத்தை முறைப்படுத்த நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டது இயற்கையான செயலாகும்.

அரசனுடைய நேரடிப்பார்வையும் கவனமும் கோயில்களின் நிர்வாகத்தில் பல்வேறுமுறைகளிலும் இருந்து வந்ததை மேற்குறிப்பிட்ட செய்திகள் உறுதிப்படுத்துகின்றன. நிலவுடைமை அமைப்பின் கட்டுக்கோப்பையும் உற்பத்தி முறைகளையும் உற்பத்தியையும் வடிமைத்து முறைப்படுத்திக்கொள்ள கோயில் என்ற அமைப்பை அரசன் தனது நேரடி மேற்பார்வையில் நிர்வாகம் செய்தான் என்பதையே இவை நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

பல கோயில்களை அமைத்து அதற்குச் சொத்துக்களைக் கொடுத்து மக்களோடு இயைந்த தனி நிறுவனங்களாக அவற்றை அன்றையஅரசர்கள் உருவாக்கியதற்கு இதுவே காரணமாகும்.

1 371 of 1911
2 368 of 1911
3 ARE 1911-12, Part II, p. 68.
4 199 of 1912
5 202 of 1912
6 311 of 1911
7 254 of 1910
8 277 of 1910
9 253 of 1910
10 221 of 1912
11 295 of 1909
12 103 of 1912
13 8 of 1888

# கவரைப் பேட்டையும் அதன் சுற்றுப்புற ஊர்களும்

து. துளசிராமன்

கவரைப்பேட்டை செங்கை மாவட்டம் கும்மிடிப்பூண்டி வட்டத்தில் அமைந்துள்ள சிற்றூராகும். சென்னையிலிருந்து சுமார் 40 கி.மீ. தூரத்தில் இவ்வூர் உள்ளது. இராவணன் சீதையை இலங்கை மாநகருக்கு எடுத்துச் செல்லும் போது, சீதை தான் அணிந்திருந்த இரத்திணாபரணங்களை இங்குக் கழற்றி எறிந்ததால் இவ்வூர் இரத்தினபுரி என்றும் அழைக்கப் படுகிறது. இதற்கேற்ற வாறு இவ்வூர் மக்களில் பெரும்பாலோர் இன்றும் இரத்தின வியாபாரிகளாகவும், விலையுயர்ந்த கற்களுக்கு பட்டை தீட்டும் தொழில் மேற்கொண்டவர்களாகவும் விளங்குகின்றனர். தெலுங்கு மொழியினைத்தாய் மொழியாகக் கொண்ட கவரை இன மக்கள் பெரும் பாலோர் வாழ்வதால் இவ்வூர் தற்போது கவரைப்பேட்டை என வழங்குகிறது,

இவ்வூரில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த கோயில்கள் ஏதும் இல்லையெனினும், இதனைச் சுற்றியுள்ள ஊர்கள் தொன்மைச் சிறப் புடையவை.

## கும்முடிப் பூண்டி

இவ்வூர் செங்கற்பட்டு மாவட்டத்தில் சென்னைக்கு வடக்கே 40 கி,மீ. தூரத்தில் உள்ளது. இவ்வூரிலும், இதனைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலும் வரலாற்று சிறப்பு வாய்ந்த கோயில்கள் உள்ளன. கோமுடிபூண்டி என்ற அந்நாளைய பெயர் மருவி கும்முடிப் பூண்டி என்று வழங்கப் பெறுகிறது. இவ்வூரின் பழஞ்சிறப்பை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### குறும்பர் கோட்டை

இவ்வூரின் வடக்குப் பகுதியில் ஒரு பெரிய மேடு காணப்படு கிறது, இதனை இவ்வூர் மக்கள் 'கோட்டைமேடு' என்று அழைக் கின்றனர். இம்மேட்டின் மீது தற்போது கும்முடிப்பூண்டி ஊராட்சி ஒன்றிய அலுவலகமும் அலுவலர் குடியிருப்புகளும் அமைந்துள்ளன,

இம்மேடுதான் அந்நாளில் குறுநில மன்னர்கள் இருந்து ஆட்சி புரிந்த அரண்மனை அமைந்த கோட்டைப் பகுதியாகும். இக்கோட்டையைப் பற்றிய விவரங்கள் சென்னை பழஞ்சுவடி நூலகத்தில் உள்ள ஓர் ஓலைச்சுவடி மூலம் தெரிகிறது. இதில் இக்கோட்டை ''குறும்பர் கோட்டை'' என அழைக்கப்பெறுகிறது. இம்மேட்டுப் பகுதியில் தமிழக வரலாற்றுப் பேரவை கவரைப் பேட்டைக் கிளையினர் ஆய்வுகள் நடத்தியபோது, அகன்ற நீண்ட பெரிய செங்கற்களும் முதுமக்கள் தாழி ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டது. இம் மேட்டின் கிழக்குப் புறத்தில் பெருங் கற்கால கருப்பு சிகப்பு வண்ண பானை ஓடுகள் சிலவும் கிடைத்துள்ளன. இதன் மூலம் இப்பகுதியில் மக்கள் தொன்று தொட்டு வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்று தெளிவாக அறியலாம்.

### பாலீஸ்வரர் கோயில்

இக்கோயில் கும்முடிப் பூண்டி புகைவண்டி நிலையத்திற்கு அருகில் மிகவும் சிதைந்து புதர் மண்டியுள்ள நிலையில் காணப்படுகிறது. முதலாம் இராசேந்திர சோழன் கங்கை கொண்டு தந்நாடு திரும்பும் வழியில் இங்கு இக்கோயில் எழுப்புவித்தான் என்னும் செவிவழி செய்திக்கு ஆதாரமாக இங்கு கல்வெட்டுக்கள் ஏதும் காணப்படவில்லை. ஆனால் கருவறையைச்சுற்றியுள்ள சிற்றறைகளில் காணப்படும் திருமால், அடிமுடிகாணு அண்ணல் (லிங்கோத்பவர்) போன்ற சிற்பங்கள் சோழர் காலக் கலைப்பாணியைக் கொண்டு விளங்குகின்றன. குறிப்பாகக்கோயில் மதிற்சுவருக்கு அருகில் மண்ணில் புதைந்துள்ள தஷ்ணுமூர்த்தியின் சிற்பம் மேலிருகரங்களில் அக்கமாலையும் மலரும் ஏந்தி கீழ் வலது கரத்தை யோக முத்திரையில் இருத்தி இடது கரத்தைத் தொடையில் அமர்த்தி, இடது காலை மடக்கி வலது காலைத் தொங்கவிட்டு ஆசனத்தில் அமர்ந்து யோக நிலையில் காணப்படுகிறது. இச்சிற்பம் கங்கைகொண்ட சோழபுரம் சோழீஸ்வரர் ஆலயத்தின் தென்புறச்சுவரில் ஐந்தாவது சிற்பமாக விளங்கும் 13 நூற்றுண்டைச் சேர்ந்த யோக தட்சணுமூர்த்தி சிற்பத்தோடு ஒப்பு நோக்கத்தக்க கலைச்சிறப்போடு விளங்குகிறது.

### சந்திரசேகர ஈஸ்வரர் கோயில்

இக்கோயில் புதுகும்முடிப்பூண்டியில் கருங்குப்பம் பகுதியில் அமைந்துள்ளது. கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்ட இக்கோயிலின் முன்பு சிதைந்த நிலையில் கோபுர வாயில் காணப்படுகிறது. கிழக்கு நோக்கியுள்ள கருவறை வாசலின் மேற்பகுதியில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. சில பகுதிகளில் காரை பூசப்பட்டிருப்பதாலும், சில இடங்களில்

எழுத்துக்கள் சிதைக்கப் பட்டிருப்பதாலும் கல்வெட்டு முழுமையாகக்கிடைக்கவில்லை. கல்வெட்டின் இறுதிப்பகுதி மட்டும் தெளிவாக உள்ளது.

**கல்வெட்டு**

........................பெரியப்பா
ளையம் நகரத்தாரில் கண்ணந்
செய்பு தும்மணி குமாரன் தும்மணி
சந்திற சேகர கோயில் திருப்பணி
வேலை நிற்ற சதா சேர்வை[3]

இக்கல்வெட்டில் பெரியபாளையம் என்னும் நகரைச் சேர்ந்த சின்னம நயினு என்பவர் இக்கோயிலுக்கு செய்த திருப்பணியைத் தும்மணி குமாரன் தும்மணி என்பவர் தொடர்ந்து செய்ததாகக் குறிக்கப்பெறுகிறது. இக்கோயிலின் பெயர் சந்திரசேகர கோயில் எனவும், இன்று சிற்றூராகவும், சிறப்பமைந்த அம்மன் கோயிலோடும் விளங்கும் பெரியபாளையம் நகரம் எனவும் இக்கல்வெட்டு குறிக்கிறது. எழுத்தமைதியைக் கொண்டு இக்கல்வெட்டு 17-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தது எனக்கொள்ளலாம்.

இக்கோயிலிலுள்ள சந்திரசேகர மூர்த்தியின் செப்புத் திருமேனி மிக்குயர்ந்த அழகு வாய்ந்தது. ஜடாமகுடத்தில் பிறைச்சந்திரனேடு, மேலிரு கரங்களில் மானும், மழுவும் கொண்டு கீழிரு கரங்களை அபய வரத முத்திரைகளிலிருத்தி விளங்கும் நிலை நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளது. சோமாஸ்கந்தர், நடராசர் போன்ற செப்புத் திருவுருவங்களும் இக்கோயிலில் உள்ளன.

**விநாயகர் கோவில்:**

சந்திரசேகரர் கோயிலுக்கு எதிர்ப் புறத்தில் இக்கோயில் உள்ளது. அதன் கருவறையில் இருந்த விநாயகர்சிலை தற்போதுசந்திரசேகரர் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. கருவறை வாசலின் மேற்பகுதியில் மிகவும் சிதைந்த நிலையில் ஒரு கல்வெட்டு உள்ளது. இதில் இவ்வூர் 'கொம்முடிப்பூண்டி' என்று குறிக்கப்படுகிறது. திருவலங்காடு, பெரியபாளையம் போன்ற ஊர்களின் பெயர்களும் காணப்படுகின்றன. கல்வெட்டின் இறுதிப்பகுதி,

......கண்ணந்தை கோத்றம்
சின்னமனயினு செட்டியார் குமாரன் தும்மணி
செட்டியார் குமரன் தும்மணி செட்டிய
ார் குமரன் தும்மணி.........திருப்பணி.....,

என்று உள்ளது, இதிலிருந்து மேற்கூறப்பட்ட சந்திரசேகரர் கோயில் திருப்பணியைச் செய்த தும்முணி செட்டியார் குமாரன் தும்முணி இக்கோயில் திருப்பணியைச் செய்துள்ளார் என்பது அறியப்படும்.

### பிரசண்ட வெங்கடேச பெருமாள் கோயில்

கும்முடிப்பூண்டிக்கு சுமார் 3 கி. மீ. தொலைவில் பாப்பாங்குப்பம் என்னும் சிற்றூரில் அமைந்துள்ளது. கோயில் கருவறை, முன் மண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்டது, கருவறையின் மேல் விமானம் உயர்ந்து காணப்படுகிறது. கோயிலைச் சுற்றிப் பரிவாரக் கோயில்களும் உண்டு. வெங்கடேசர் பத்மாவதி, அலமேலுமங்கையுடன் காட்சியளிக்கிறார். போக சீனிவாசரின் செப்புத் திருமேனி கலைச்சிறப்பு வாய்ந்தது. மகுடம் தரித்து, மேலிரு கரங்களில் ஆழியும் சங்கமும் கொண்டு, கீழ்வலது கரம் அபய நிலையிலும் இடதுகரம் தொடையிலுமாக அமைந்த நிலையில் காணப்படுகிறார். சந்திரன் போன்ற வட்டவடிவமான முகம் கொண்டு, மார்பில் முப்புரி நூல் தரித்து இடையில் பளுவான ஆடையுடன் காணப்படும் இவ்வுருவம் சோழர் காலப் படைப்பாகும். கலை அழகு மிகுந்த சுமார் 14 செப்புத் திருவுருவங்கள் இக்கோயிலில் உள்ளன.

இந்நாள் வரை முறையான ஆராய்ச்சிக்கு உட்படாத இப்பகுதியைத் தொல்பொருள் ஆய்வுத்துறையினர் ஆய்ந்து அரிய கலைச் செய்வங்களையும், கல்வெட்டுக்களையும் வெளிக்கொணர்தல் அவசியம்.

## சத்தியவேடு

### அமைவு

பொன்னேரிக்குச் சுமார் பதினாறு கல் தூரத்தில் உள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்புமிக்கது. இவ்வூர் தற்போது ஆந்திரப் பிரதேசத்தின் சித்தூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள மாதங்கேஸ்வரர் கோயிலில் காணப்படும் தெலுங்குக் கல்வெட்டு ஒன்றில் இவ்வூர் 'சத்தியபுரி'[3] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'சதவாலம்மா' என்னும் சத்தியம்மிக்க பெண் தெய்வத்தின் பெயரால் இவ்வூர் தற்போது சத்தியவேடு என்று அழைக்கப் பெறுகிறது. இத்தெய்வத்திற்கு ஊரிலிருந்து சுமார் இரண்டுகல் தூரத்தில் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயில் கொற்றவைக்காக எடுக்கப்பட்டதாகும். ஆண்டுதோறும் இத்தெய்வத்திற்கு ஊர் மக்கள் விழா

எடுத்து, கடைசி நாளன்று எருமைக்கிடா பலியிட்டு வழிபடுகின்றனர்.

**தொன்மை வரலாறு**

சர். இராபர்ட் புருஸ் புட் (Sir. Robert Bruce Foote) இவ்வூரில் பழங்கற்கால 'மனிதன் உபயோகித்த கரடுமுரடான கற்கருவிகள் (Rudeu Stone implements) சிலவற்றைக் கண்டெடுத்தார்.[4] இக்கருவிகள் 'Quartzite'[5] என்னும் படிக்கல் வகையைச் சேர்ந்தது. இவ்வகைக் கற்கள், கருவிகள் செய்வதற்கு மிக ஏற்புடையவை. இக்கற்கருவிகள் (core)[6] கோழிமுட்டை வடிவக் கற்களை இருபுறமும் செதுக்கி (Rifaual) கருவியாக்கும் வகையைச் சார்ந்தது. இக்கருவிகள் உபயோகித்த மக்களுக்கு படிகக் கற்கால மனிதன் (Quartizite men)[7] என்று பெயர்.

**மாதங்கேஸ்வரர் கோயில்**

இக்கோயில் ஊரின் கிழக்குப் புறத்தே அமைந்துள்ள பல்லவர் காலக் கோயிலாகும். கருவறை கிழக்கு நோக்கி உள்ளது. கோபுரம் விமானத்தை விடச் சிறியதாகக் காணப்படுகிறது. கருவறையின் பின்புறச் சுவரில் காணப்படும் லிங்கோத்பவர், அர்த்த நாரீஸ்வரர், கொற்றவை, நான்முகன் போன்ற சிற்பங்கள் கலையழகு வாய்ந்தவை. இவையாவும் சோழர் காலக் கலைப் பாணியைக் கொண்டு விளங்குகின்றன. மூலக் கோயிலைச் சுற்றியுள்ள பரிவாரக் கோயில்களிலுள்ள பைரவர், காளி, விநாயகர் போன்ற உருவங்கள் காண்போர் உள்ளத்தைக் கவரும் கலையழகு மிக்கவை. கொடி மரத்தின் அருகில் சப்த மாதர்களாகிய (கன்னியர் எழுவர்) சாமுண்டி, வராகி, மகேஸ்வரி ஆகியோரின் சிற்பங்கள் காணப்படுகின்றன. மற்ற சிற்பங்கள் இல்லை. சாமுண்டி சூலமும், அங்குசமும் கொண்டு விரிந்த சடை முடியுடன் காணப்படுகிறாள். வராகி சங்கும், சக்கரமும் தாங்கியுள்ளாள். மகேஸ்வரி மானும், மழுவும் கொண்டு விளங்குகிறாள். இச்சிற்பங்களும் சோழர் காலத்தவையே.

**கல்வெட்டுக்கள்**

மத்திய அரசுக் கல்வெட்டுத் துறையினர் இக்கோயிலிலிருந்து 1912ம் ஆண்டு நான்கு கல்வெட்டுக்களைப் படியெடுத்துள்ளனர், இவற்றுள் பல்லவர் காலத்தைச் சேர்ந்த இரண்டு கல்வெட்டுகள் கூறும் செய்திகள் மிகவும் சிறப்பானவை. முதற்கல்வெட்டு' அபராஜிதனின் நான்காம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்ததாகும். இதில்,

பைய்யூர் இளங்கோட்டத்து தெக்கூர் நாட்டுத் திருமதங்கன் பள்ளிப மகா தேவர்க்குத் துறையூர் என்னும் ஊரின் பொன்னும்,

புரவும் கொடையாக அளித்த செய்தி கூறப்படுகிறது. இக் கொடையை அளித்தவன் சேர நாடுடைய குமாரந்தை குறும்பரா தித்தனுகிய காடுபட்டி பேரரையன் என்பான்.

அபராஜிதனின் ஐந்தாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த இரண் டாவது கல்வெட்டு' சேர நாடுடைய குமாரந்தை குறும்பராதித்த னுகிய காடுபட்டி பேரரையனின் மனைவியாகிய பொற்றி நங்கை என்பாள் இக்கோயிலில் நொந்தா விளக்கு எரிக்க நூறு ஆடுகளைத் தானமாக அளித்த செய்தி கூறப்படுகிறது.

**சமணப் பள்ளி**

கல்வெட்டுக்களில் இவ்வூர் 'திருமதங்கன் பள்ளி' என்றழைக்கப் படுகிறது. 'பள்ளி' என்று முடியும் பெயருடைய இடங்களுக்குச் சமணமதத் தொடர்பும் இருந்துள்ளது. இதனைத் திருக்காட்டுப் பள்ளி, திருச்சிராப்பள்ளி போன்ற பெயர்களைக் கொண்டு அறிய லாம். எனவே திரு மதங்கன் பள்ளியும் ஒரு காலத்தில் சமணப் பள்ளியாகவே விளங்கியிருத்தல் கூடும்.

**பழைய ஊர்கள்**

சோழர் காலத்தில் கோட்டமாகவிளங்கிய பைய்யூர்க் கோட் டம், பல்லவர்கள் காலத்தில் வையூர் இளங்கோட்டமாக இருந் திருக்கிறது. மேலும் தெக்கூர், துறையூர், பூவலூர் போன்ற ஊர் களின் பெயர்களும் இக்கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இவற்றுள் பூவலூர் என்பது தற்போது 'பூவலூரு' என்னும் பெய ரால் வழங்கி வருகிறது. இவ்வூர் சத்திய வேட்டிலிருந்து வடக்கே சுமார் ஐந்து கல் தூரத்தில் கடுருக்கு அருகில் உள்ளது. துறையூர் என்பது தற்போது மதுராந்தகம் வட்டத்தில் உள்ள துறையூராக இருக்கலாம்.

**புரவு:** 'துறையூர் பொன்னும் புரவும்' என்று கல்வெட்டு கூறு கிறது. இதிலுள்ள 'புரவு' என்னும் சொல் பொருளாகவோ காசா கவோ செலுத்தும் நிலவரியினைக் குறிப்பதாக உள்ளது. இதனை நிலவரி வசூலைக் கவனிக்கும், புரவு வரித்திணைக்களம் என்னும் துறை சோழர் காலத்தில் இருந்ததைக் கொண்டு அறியலாம்.

**குறும்பராதித்தன்:** குறும்பராதித்தன் என்னும் பட்டப்பெயர் பூண்ட காடுபட்டிப் பேரரையன் என்பான் இக்கல்வெட்டில் குறிக் கப்பெறுகிறுன். குறும்பராதித்தன் என்பதற்குக் குறும்பர்களி லேயே சூரியனைப் (ஆதித்தன்) போன்றவன் என்று பொருள். கி. பி. பதினோராம் நூற்ருண்டில் சோழர்கள் பல்லவர்களை வென்ற காலம்

வரை, இப்பகுதியினைக் குறும்பர்கள் என்னும் குறுநில மன்னர்கள் தனியுரிமை ஆட்சி (sovereign) புரிந்து வந்தனர்'[11] என்று அறிஞர் சிவல் குறிப்பிடுகிறார். எனவே, இக்கல்வெட்டுக்களில் கூறப்பெறும் சேர நாடுடைய குமாரந்தை குறும்பராதித்தனாகிய காடுபட்டிப் பேரரையன் என்பவன் அபராஜித பல்லவ மன்னன் காலத்தில் இப் பகுதியின் குறுநில மன்னனாக விளங்கினான் என்று அறியலாம்.

**விடேல் விடுகு:** 'விடேல் விடுகு' உழக்கு என்னும் முகத்தலளவு முறை இக்கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறது. அக்காலத்தில் அளவுகள் அரசர்களின் பட்டப் பெயர்களோடு சேர்த்து வழங்கப் பெறும். இங்கு குறிக்கப் பெறும் விடேல் விடுகு என்னும் பட்டப் பெயர் மூன்றாம் நந்திவர்மனைக் குறிக்கும்.

இவ்வாறு வரலாற்றிற்குப் பல சுவையான செய்திகளை எடுத்தியம்பும் கல்வெட்டுக்கள் இங்கு காணக் கிடைப்பது இவ்வூரின் சிறப்பினை நன்கு உணர்த்தும். ஈதன்றி இக்கோயிலின் முன்பு உள்ள கிணற்றுக் கல்லின்மீது இரு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றுள் கோல் கொண்டாவைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த நவாப் குதுப் சாஹி அபு ஆஸாம் (1672—1887) காலத்திய வடமொழிக் கல்வெட்டு ஒன்று. மற்றொன்று தெலுங்குக் கல்வெட்டு. 'இவ்விரண்டு கல்வெட்டுகளும் சக ஆண்டு 1686-ல் (கி. பி. 1686) பொறிக்கப் பட்டதாகும்.

இக்கல்வெட்டுகள் தேசூரைச் சேர்ந்த கிருஷ்ணரெட்டி என்பவர் இக்கிணற்றினைத் தோண்டிப் பூஞ்சோலை ஒன்றினை அமைத்துக் கொடுத்த செய்தியைக் கூறுகின்றன. கிருஷ்ண ரெட்டியின் முன்னோர்களில் ஒருவராகிய பெட கிருஷ்ணரெட்டி என்பவர் மதுராந்தக கோத்திரம் பந்த குலத்தைச் சேர்ந்தவராகக் குறிக்கப் பெறுகிறார். இவர் திருமலை தொழப்பாச்சாரியார் என்பவருக்குச் சீடர். 'திருமலை தொழப்பாச்சாரியார் காகுஸ்த வியாயமு' என்னும் நூலினை இயற்றிய மட்டள அனந்தா என்பவரின் ஆசான். மட்டள அனந்தாவும் தொழப்பாச்சாரியரும் கி.பி. 1565-ம் ஆண்டு வாக்கில் வாழ்ந்தவர்கள் என்று திரு. வீரசலிங்கம் பந்துலு அவர்களும் திரு. கிருஷ்ண சாஸ்திரி அவர்களும் கருதுகிறார்கள்.[12] எனவே பெட கிருஷ்ண ரெட்டியும் இக்காலத்தைச் சேர்ந்தவரே.

**குறும்பர் கோட்டை:** சத்திய வேட்டிற்கு வடமேற்கே கோட்டை ஒன்று இருந்ததற்கான இடிபாடுகள் காணப்படுகின்றன. இவ்வூரில் குறும்பர் கோட்டை இருந்ததாகத் திரு.கா. அப்பாதுரையார் 'தென்னாட்டுப் போர்க்களங்கள்'[13] என்னும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இப்பகுதியே அக்கோட்டைப் பகுதியாகும்.

1

ஸ்வஸ்தி ஸ்ரீ
கொவ(ப) ராயித பற்மற்கு யாண்
டு நாலாவது பைய்யூரிளங்
கொட்டத்துத் தெக்கூர் நாட்
டுத் திரு மதங்கன் பள்
ளி மஹாதெவற்கு இந் நாட்
டுத் துறையூர்ப் (பொ)ன்னு
ம் புரவும் மடங்க நா
ஹெ போகமாக குடுத்தான்
செர நாடுடைய குமாரந்
தை குறும்பாரதித்த நாகி
ய் காடுபட்டிப் பெரரை
ய னென் (1°) இத்தன்ம
ம் ரக்ஷித்தானடி யென்
றலே மேலன (11°)

2

ஸ்வஸ்தி ஸ்ரீ
கொ அபராயித பற்மற்
கு யாண்டு அஞ்சாவது செ
ர நாடுடைய குமாரந்தை குறும்பராதி
த்தநாகிய காடுபட்டிப் பெரரைய
ன் மணவாட்டி பொற்றி நங்கையென்
பைய்யூரிளங் கொட்டத்து தெக்கூ
ர் நாட்டுத் திரு மதங்கன் பள்ளி மா
தெவர்க்கு ஒரு நந்தா விளக்கு னுக்
கு வைத்த ஆடு நூறு இவை சாவாமு
வாப் பெராடாக வைத்தென் இவ்
வாடு நூறுங்கொண்டு நிசதமு
ழக்கு நெய் விடெல்விடுகோடொக்கு மு
ழக்கிறு லட்டு வொமானெம் திரு
மதங்கன் பள்ளி பூ(வ)லூர் ஊரொ
ம் இதற்றிறம்பில் திருவா....

## சுப்பாரெட்டி பாளையம்

### அமைவிடம்

சுப்பாரெட்டி பாளையம் பொன்னேரி வட்டத்தில் மீஞ்சூருக்குத் தெற்கே 7 கி. மீ. தூரத்தில் உள்ளது. கொற்றலையாற்றின் தென்

கரையில் அமைந்துள்ள இச்சிற்றூரினைச் சுற்றிலும் வரலாற்றுக் கலைச்சிறப்பு வாய்ந்த பல சிற்பங்கள் போற்றுவாரில்லா நிலையில் சிதறிக் கிடக்கின்றன. இக்கலைச் செல்வங்களின் சிறப்பினை வரலாற்றுலகிற்கு எடுத்துரைப்பது இன்றியமையாததாகும்.

### விஷ்ணு சிலை

ஊருக்கு வடமேற்கில் சுமார் ஒரு கி. மீ. தூரத்தில் கொற்றலையாற்றின் வடகரையில் முற்காலச் சோழர் கலைப்பாணியைச் சேர்ந்த விஷ்ணு சிலை ஒன்று நிற்கும் நிலையில் காணப்படுகிறது. அடிமுதல் முடிவரை 87 செ. மீ உயரமும் 41 செ. மீ அகலமும் உடைய இச்சிலையின் கீழ் வலது கரம் சிதைந்துள்ளது. கீழிடது கரம் தொடை மீது அமர்ந்துள்ளது. தலையில் அழகு மிக்க கிரீடமகுடம் காணப்படுகிறது. மார்பில் காணப்படும் புரிநூலின் ஒரு பகுதி பாதம் வரை சென்றுள்ளது. மார்புப்பகுதியும் வயிற்றுப்பகுதியும் வளைவுகளின்றிச் சமமான தோற்றத்துடன் காணப்படுகின்றன. இடுப்பில் அணிந்திருக்கும் ஆடை கணுக்கால் வரை நீண்டு கச்சையின் ஒரு பகுதி முன்னால் வளைந்துள்ளது,

### மகாவீரர் சிலை

சுப்பாரெட்டி பாளையத்திற்கு மேற்குப் புறத்தில் வயலில் இருபத்து நான்காவது தீர்த்தங்கரரான் மகாவீரரின் சிலை ஒன்று உள்ளது. இதனை இவ்வூர் மக்கள் எண்ணெய்ச் சாமியார் என்று அழைக்கிறார்கள். அமர்ந்த நிலையில் காணப்படும் மகாவீரரின் சிலை சோழர் காலத்தைச் சேர்ந்ததாகும்.

### சீமாவரம் சப்த மாதர்கள்

சுப்பா ரெட்டி பாளையத்திற்கு மேற்கே இரண்டு கி. மீ. தூரத்தில் சீமாவரத்தில் மயிலையம்மன் கோயில் உள்ளது. கோயில் தற்காலத்தியது. கருவறை கிழக்கு நோக்கியுள்ளது.

இக்கோயிலில் பல்லவர் காலத்தைச் சேர்ந்த மாஹேஸ்வரி சிலையும், பிற்காலப் பல்லவர் கலைப் பாணியைச் சார்ந்த தாய்மார் எழுவர் சிலைகளும், யோகேஸ்வரர், விநாயகர் போன்றோர் சிலைகளும் காணப்படுகின்றன, இச் சிலைகள்யாவும் சென்னை மயிலையிலிருந்து இங்கு கொண்டு வந்து வைத்ததாகக் கூறப்படுகிறது. எனவேதான் இக் கோயில் மயிலையம்மன் கோயில் என்று அழைக்கப் பெறுகிறது.

**பல்லவர் கால மாஹேஸ்வரி**

இச்சிலை 45 செ. மீ. உயரமும் 27 செ. மீ. அகலமும் கொண்டு சிறிய அளவினதாகக் கண்கவர் அழகுடன் காணப் படுகிறது. சிலை வடிக்கப்பட்டுள்ள கல் பசுமையாக உள்ளது. பத்ர பீடத்தில் அமர்ந்து மேலிருகரங்களில் மானும் மழுவும் கொண்டு, கீழ் வலது கரத்தினை அபய முத்திரையிலிருத்தி, இடது கரத்தினைத் தொடைமீது வைத்துள்ள நிலை பரவச மூட்டக் கூடிய தாக உள்ளது. நெற்றியில் நெற்றிக்கண் உள்ளது. மார்பினில் காணப்படும் புரிநூல் வலது கைமீது ஏறிச் செல்கிறது. அரையில் அணிந்துள்ள ஆடை பாதம் வரை நீண்டுள்ளது.

இந்தியாவில் பல இடங்களில் சப்தமாதர்களின் சிலைகளும், சிற்பங்களும் கிடைத்திருக்கின்றன. வட மாநிலங்களில் புனே, பாட்னா ஆகிய இடங்களில் காணப்படும் சப்த மாதர்களின் மடிகளில் குழந்தைகள் காட்டப்பட்டுள்ளன. இவை உயிர்களைக் காக்கும் அன்னையின் வடிவை நமக்கு உணர்த்துகின்றன. ஆனால் தமிழகத்தில் சப்த மாதர்களைப்போல் கன்னியர்களையும் மக்கள் வழி பட்டுள்ளனர்.[41]

சீமாவரத்தில் காணப்படும் சப்தமாதர்கள் சிலைகள் அனைத்தும் அமர்ந்த நிலையில் நாற்கரங்களுடன் காணப்படுகின்றன. மேற் கரங்களில் அவரவர்களுக்குரிய ஆயுதங்களைத் தாங்கியுள்ளார்கள். கீழ்க்கரங்கள் அபயமுத்திரையிலும் தொடைமீது வைத்த நிலையிலும் உள்ளன. திருத்தணி வீரட்டானேஸ்வரர் கோயிலில் காணப்படும் சப்த மாதர்களைப் போன்று பீடங்களில் அவரவர் களுடைய வாகனங்கள் காணப்படுவது இச்சிலைகளின் சிறப்பாகும். சில சிலைகள் மேலிருகரங்களில் வழக்கமாக கொண்டிருக்கும் ஆயுதங்களுக்குப் பதிலாக வேறு ஆயுதங்களைக் கொண்டிருக் கின்றன. எடுத்துக் காட்டாக, வராகி சங்கு சக்கரத்திற்கு பதிலாக, பாசமும் கலப்பையும் தாங்கியுள்ளாள். பீடத்தில் சிம்மத்திற்குப் பதிலாக ஆட்டினை வாகனமாக கொண்டுள்ளாள். இந்திராணி சக்தி வச்சிரத்திற்குப் பதிலாக வச்சிரம், சக்கரம் ஆகியவற்றைக் கொண்டுள்ளாள். சாமுண்டி மேலிடது கரத்தில் உடுக்கைக்குப் பதிலாகக் கபாலத்தினை ஏந்தியுள்ளாள். பீடத்தில் எருமைக்குப் பதிலாகப் பேய் காணப்படுகிறது.

சப்த மாதர்களுடன் வழக்கமாக காணப்படும் யோகேஸ்வரர் விநாயகர் போன்ற சிலைகளும் அமர்ந்த நிலையில் உள்ளன. யோகேஸ்வரர் சிலையின் ஆசனத்தின் கீழ் நந்தி வாகனம் காணப் படுகிறது. இவைகளும் பிற்காலப் பல்லவர் காலத்தவையே.

**மயிலையம்மன் கோயில் சீமாவரம் சப்த மாதர்கள்**

1. யோகேஸ்வரர் — அக்கமாலை | திரிசூலம் — பீடத்தில்
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — நந்தி வாகனம்

2. இந்திராணி — வச்சிரம் | சக்கரம்
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — யானை வாகன

3. வராகி — பாசம் | கலப்பை
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — ஆடு வாகனம்

4. கௌமாரி — சக்தி | வஜ்ரம்
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — மயில் வாகனம்

5. மாஹேஸ்வரி — மழு | மான்
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — காளை வாகனம்

6. பிராமி — அக்கமாலை | கெண்டிகை
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — அன்ன வாகனம்

7. சாமுண்டி — திரிசூலம் | கபாலம்
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — பேய் வாகனம்

8. வைணவி — சக்கரம் | சங்கு
அபயம் | தொடை மீது அமர்ந்த நிலை — கருடன்

6. விநாயகர் — அங்குசம் | பாசம்
தந்தம் | மோதகம்

## ஞாயிறு

**ஊரமைவு**

ஞாயிறு பொன்னேரி வட்டத்தில் மீஞ்சூருக்கு மேற்கே 6 கி.மீ. தூரத்திலும், காரனோடைக்கு கிழக்கே 8 கி. மீ. தூரத்திலும்

அமைந்துள்ளது. இவ்வூரில் பழமைமிக்க இரண்டு சிவன் கோயில்கள் உள்ளன.

### ஊர்ச் சிறப்பு

சிவபெருமானைச் :சூரிய பகவான் இவ்விடத்தில் வழிபட்டதாலேயே இவ்வூர் ஞாயிறு என்று பெயர் பெற்றது. சுந்தர மூர்த்தி நாயனாரின் மனைவியாராகிய சங்கிலி நாச்சியார் இவ்வூரில் தோன்றினார் என்பதனைப் பெரிய புராணம்,

நாலாங்குலத்திற் பெருக நலம் உடையார் வாழும்
ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா
யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மேல் அவதரித்தார்
ஆலா லஞ்சேர் கறைமிடற்றார் அருளால் முன்னை
அநிந்திதையார்.

—பாடல்-207

என்னும் பாடல் மூலம் விளக்குகிறது, சங்கிலி நாச்சியார் வழிபட்டதாகக் கூறப்படும் ஒரு சிறிய சிவன் கோயில் இவ்வூரில் இன்றும் காணப்படுகிறது. லிங்கம், நந்தி, விநாயகர் ஆகியவற்றைக் கொண்டு விளங்கும் இக் கோயில் தற்போது புதுப்பித்து கட்டப் பட்டு வருகிறது.

### புஷ்பரதேஸ்வரர் கோயில்

இக் கோயில் ஊருக்கு மேற்குப் புறத்தே அமைந்துள்ளது. முன் மண்டபம், மகா மண்டபம். அலங்கார மண்டபம் ஆகிய வற்றைக் கொண்டுள்ள கோயிற் கருவறை கிழக்கு நோக்கியுள்ளது. ஸ்வர்ணாம்பிகை என்று அழைக்கப்படும் தேவிக்குத் தனிக்கோயில் உண்டு. தெற்கு நோக்கியுள்ள கோபுரவாயில் முற்றுப் பெறாத நிலையில் உள்ளது. இக் கோயிற் சிற்பங்களில் குறிப்பிடத்தக்கது, பரிவாரக் கோயிலில் உள்ள முற்கால சோழர் காலத்தைச் சேர்ந்த சண்டிகேஸ்வரர் சிற்பமும், ஸ்வர்ணாம்பிகை கோயிலிலுள்ள விஜய நகர காலத்தைச் சேர்ந்த சங்கிலி நாச்சியார் சிற்பமும் ஆகும். சங்கிலி நாச்சியார் தம் பிறந்த ஊராகிய ஞாயிறில் உள்ள சிவபெருமானை வழிபட்டு வந்ததாகப் பெரிய புராணத்தில் சங்கிலி நாச்சியார் வரலாறு கூறும். சிற்பத்தில் சங்கிலி நாச்சியார் இட்டு முழங்

கையில் பூக்கூடையைத் தாங்கி, கூப்பிய கரங்களுடன் காணப்படுகிறார்.

கருவறையின் பின்புறச் சுற்றுச் சுவரில் காணப்படும் துர்க்கை, பிரம்மா லிங்கோத்பவர், தட்சிணாமூர்த்தி போன்ற சிற்பங்கள் சோழர் காலத்தைச் சேர்ந்தவை. அலங்கார மண்டப வாயிலின் வலப்புறம் காணப்படும் கண்வ மகரிஷியின் சிற்பம் பிற்காலத்ததாயினும் கலையழகு மிக்கதாகும். சோழர் காலந் தொட்டு விஜய நகர காலம் முடிய தோற்றுவிக்கப்பட்ட 14 செப்புத் திருமேனிகள் இக் கோயிலில் காணப்படுகின்றன. இவற்றுள் பிரதோஷ மூர்த்தியின் செப்புருவம் கண்கவர் சோழர் காலப் படைப்பாகும்.

**கல்வெட்டுகள்**

புஷ்பரதேஸ்வரர் கோயிலில் பாண்டியர் காலக் கல்வெட்டு ஒன்றும், விஜய நகர காலக் கல்வெட்டுகள் இரண்டும் காணப்படுகின்றன. பாண்டியர் காலக் கல்வெட்டு ஜடாவர்மன் திரிபுவன சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவனின் 14ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்ததாகும். மிகவும் சிதைந்துள்ளதால் கல்வெட்டு கூறும் செய்தியினைத் தெளிவாக அறிய இயலவில்லை. ஈழத்திலிருந்து திறை வசூலித்த விஜய நகர மன்னன் வீரபிரதாப தேவ ராயரின் கல்வெட்டில்[15] இவ்வூர் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து, புழல் கோட்டத்து ஞாயிற்று நாட்டை சேர்ந்த ஞாயிறு என்று அழைக்கப்படுகிறது. புஷ்பரதேஸ்வரர் பூத்தோர் ஆண்டார் என்று குறிப்பிடப்படுகிறார். கி. பி. 1526 ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்ட விஜய நகர மன்னன் வீரபிரதாப அச்சுதய்ய தேவமாகராயர் காலக் கல்வெட்டு[16] பூத்தோர் விளாகம் என்னும் கிராமத்தினை இக்கோயிலுக்குக்கொடையாக அளித்த செய்தியைக் கூறுகிறது. இக்கொடையை அளித்தவன் கந்தன வோலு என்னும் ஊரினைச் சேர்ந்த பொன்னப்ப நாயக்கர் மகன் நாகம நாய்க்கர் என்பவராவார். இக்கல்வெட்டில் காணப்பெறும் கந்தனவோலு என்னும் ஊர் தற்போது ஆந்திரபிரதேசத்திலுள்ள கர்னூலைக் குறிக்கும்.

## சிறுவரப் பேடு

இவ்வூர் கும்மிடிப்பூண்டி வட்டத்தில் சென்னைக்கு வடக்கே ஜி. என். டி. சாலையில் சுமார் 35 கி. மீ. தூரத்தில் அமைந்துள்ள தொன்மைச் சிறப்புமிக்க ஊராகும். இராமபிரான் குதிரைவேள்வி

செய்வதற்கு விட்டக் குதிரையை குச - லவர்கள் மடக்கிப் பிடித்து, இராமனுக்கு எதிராக அம்பெடுத்து சமர் செய்தனர். எனவே இவ் வூருக்கு சிறுவர் இருவர் அம்பெடு என்னும் பெயர் வழங்கியது. நாளடைவில் இப்பெயர் மருவி சிறுவரம்பேடு என வழங்கிவருகிறது. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் இவ்வூரினைச் சிறுவை, சிறுவா புரி எனக் குறிக்கின்றது. இவ்வூருக்குச் சரவணம்பேடு, குசலபுரி என வேறு பெயர்களும் உண்டு. இவ்வூரில் வரலாற்றுச் சிறப்புமிக்க பல கோயில்கள் உள்ளன.

**அகத்தீஸ்வரர் ஆலயம்:**

மாட வீதிகள் அமைந்த இவ்வூரில், கிழக்கு மாடவீதியில் அகத் தீஸ்வரர் ஆலயம் உள்ளது. கோபுரவாயில் சிதைந்து காணப்படு கிறது. அர்த்த மண்டபம், மகாமண்டபம், கல்யாண மண்டபம், சபா மண்டபம ஆகியவற்றைக் கொண்டு விளங்கும் இக்கோயிலின் கருவறை கிழக்கு நோக்கி உள்ளது. கஜப்பிருஷ்ட அமைப்பைக் கொண்டுள்ள பிரதானக் கோயிலைச் சுற்றுப் பரிவாரக் கோயில்கள் காணப்படுகின்றன. இப்பரிவாரக் கோயில்களில் உள்ள சண்டி கேஸ்வரர், பைரவர் சூரியர், ஐயனர் போன்ற சிற்பங்கள் சோழர் கலைப்பாணியைக் கொண்டு விளங்குகின்றன. முன் - மண்டபத் தூண்களில் காணப்படும் விஜயநகர காலச் சிற்பங்கள் காண்போர் கண்ணைக் கவரும் சிறப்புடையவை.

**சமணக்கோயில்:**[17]

ஊரின்வடபுறத்தில் அமைந்துள்ள இக்கோயில் மிகவும்சிதைந்த நிலையில் உள்ளது. தெற்கு நோக்கியுள்ள கருவறையில் இருபத்தி மூன்ருவது தீர்த்தங்கரரான பார்சுவ நாதரின் சிற்பம் காணப்படு கிறது. ஆடையின்றி நின்ற நிலையில் காணப்படும் பார்சுவநாத ரின் தலைக்குமேல் ஐந்து தலை அரவம் காணப்படுகிறது. அரவின் உடல் தீர்த்தங்கரருக்குப் பின்புறம் வளைந்தவாறு செதுக்கப்பட்டுள் ளது. பார்சுவநாதரின் வலப்புறம் பத்மநிதியும், இடப்புறம் சங்க நிதியும் சிறியஅளவில் வடிக்கப்பட்டுள்ளனர். பத்மநிதியின் தலைக்கு மேலே தாமரை மலரும், சங்க நிதியின் தலைக்குமேலே சங்கும் பொறிக்கப் பட்டுள்ளன. இச்சிற்பம் சோழர் காலத்தைச்சேர்ந்தது.

**கல்வெட்டுகள்:**

பார்சுவநாதர் கோயிற் கருவறையின் கூரைப் பகுதியில் மிகவும் சிதைந்த நிலையில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

1....சபையோம்......
2...விரிச்சிக...

என்னும் சொற்களை மட்டுமே அறிய முடிகிறது.

**துர்க்கை கோயில்**[17]

சமணக் கோயிலுக்குச் சற்றுத்தென்புறத்தில் துர்க்கை கோயில் உள்ளது. கோயில் தற்போது புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளது சுமார் மூன்றடி உயரமுள்ள மேடை மீது கட்டப்பட்டுள்ள இக் கோயிலில் முற்காலச் சோழர் கலைப்பாணியைக் கொண்டு விளங் கும் துர்க்கை சிற்பம் ஒன்று உள்ளது. நான்கு கரங்கள் கொண்டு விளங்கும் இச்சிற்பத்தின் மேலிருகரங்களில் சங்கும் சக்கரமும் காணப்படுகின்றன. கீழ் வலது கரம் அபய முத்திரையில் இருக்க, இடது கரம் தொடை மீது அமர்த்தப்பட்டுள்ளது. தலையில் கரண்ட மகுடமும், காதுகளில் குண்டலங்களும், கழுத்தில் ஆரங்களும் அணி செய்கின்றன.

**கல்வெட்டு :**

சிதைந்திருந்த இக்கோயிலினை அண்மையில் புதுப்பித்தபோது சுவரினுள் மறைந்திருந்த முழுக் கல்வெட்டு ஒன்றினை வரலாற்றுப் பேரவை, கவரைப் பேட்டை கிளையினர் படியெடுத்துள்ளனர். கல் வெட்டு பத்து வரிகள் கொண்டுள்ளது. சில எழுத்துக்கள் சிதைந் துள்ளன.

1. திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ விசைய கண்டகோ
2. பால தேவற்கு யாண்டு ருசாவது சிறுவாந் பேட்டு...
3. ...கங்களூர் கரிப்பாய்த் தரிப்பற்று...
4. ...பமேகிற் அவிலெ நுளப்பாற்று ழா...
5. ...வாழ வந்தாந் கருமாணிக்கப் பெரு...
6. (க) ரு மாணுய்க்கர் கைக்கொண்டு குடி கு
7. லையாதபடி நோக்குகையாலே இ;
8. வர் பேரால் கருமாணிக்க நல்லூரெந்
9. று பெயரிட்டோம் இச்சிறு (வ)ா ந் பேட்
10. டு ஊரொம்.[18]

இக்கல்வெட்டு ஸ்ரீ விஜய கண்ட கோபால தேவரின் ஐந்தாம் (கி.பி. 1255)[19] ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்டுள்ளது. இதில் இவ்வூர் சிறுவாந்பேடு என்று குறிக்கப் பட்டுள்ளது, கருமாணிக்கர் என்பவர் இவ்வூர் மாணுய்க்கராகக் (ஊர் பெருந்தனக்காரர்) கூறப்

பட்டுள்ளார். இச்சிறுவாப்பேட்டு ஊராரின் குடிகுலையாதபடி காத்தபடியால் இவ்வூர் மக்கள் இவர் பெயரால் கருமாணிக்க நல்லூர் என்று ஒரு ஊருக்கு பெயரிட்டனர். நல்லூர் என்னும் ஊர் சிறுவரம்பேட்டு ஊராட்சி எல்லைக்குள் அமைந்த ஒரு சிற்றூராக இன்றும் உள்ளது.

**பால சுப்ரமணியர் கோயில் :**

ஊருக்கு மேற்குப்புறத்தில் அமைந்துள்ள இக்கோயில் அண்மையில் புதுப்பிக்கப் பெற்றுள்ளது. ஏழு நிலைக்கோபுரம் வாயிலை அலங்கரிக்கிறது. கோயில் கருவறை, அர்த்த மண்டபம், அலங்கார மண்டபம், ரிஷப மண்டபம், மயில் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டு விளங்குகிறது. கல்வெட்டுக்கள் ஏதும் காணப்படவில்லை. கருவறையில் உள்ள சுப்ரமணியர் சிற்பத்தின் புகைப்படத்தைக் கண்ணுற்ற தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர், டாக்டர். இரா. நாகசாமி அவர்கள், இச்சிற்பம் பல்லவர் காலக் கலைப்பாணியைக் கொண்டு விளங்குவதாகக் கருத்து தெரிவித்துள்ளார்.

இத்தகைய தொன்மை வாய்ந்த கோயில்களுடன், திருவூரகப் பெருமாள் கோயில், வரதராஜ பெருமாள் கோயில், ஊரின் புறத்தே அமைந்துள்ள கிராம தேவதையான எல்லையம்மன் கோயில் ஆகிய கோயில்கள் இவ்வூருக்கு மேலும் அணி செய்கின்றன.

## பழவேற்காடு

**ஊரமைவும் அதன் பிற பெயர்களும் :**

பழவேற்காடு சென்னைக்கு வடக்கே 60 கி.மீ தூரத்திலும் பொன்னேரியிலிருந்து 18 கி.மீ தூரத்திலும் உள்ளது. இவ்வூர் கடற்கரை ஓரமாக அமைந்துள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகும். பொன்னேரிக்கும் இவ்வூருக்கும் இடையில்தான் திருப்பாலீஸ்வரர் கோயில் கொண்டுள்ள திருப்பாலைவனம் உள்ளது.

இவ்வூர் ஆதிநாராயண சுவாமி கோயிலில் காணப்படும் தெலுங்குக் கல்வெட்டு[20] ஒன்று இவ்வூரினை, 'பிரளயகாவேரி' என்று குறிப்பிடுகிறது. 'மல்லப்பட்டினம்' என்னும் மற்றொரு பெயரும் இவ்வூருக்கு வழங்கப்பட்டுள்ளது. கடற்கரையோரம் அமைந்திருப்பதாலும் பல்லவ அரசர்களின் 'மாமல்லன்' என்னும் பட்டப் பெயரை ஊர் பெயரில் கொண்டிருப்பதாலும் இவ்வூர் பல்லவர்கள் காலத்தில் மாமல்லையைப் போன்று துறைமுகப்பட்டினமாக விளங்கி இருக்கலாம்.[21] கி.பி. 17-ஆம் நூற்றூண்டு முதல் ஐரோப்பியர்கள்

இவ்வூரினை புலிகாட் (pulicut) என்று அழைத்தனர். கடற்கரை ஓரத்தில் பவளங்கள் அதிக அளவில் கிடைத்ததால் இவ்வூருக்கு 'பவளக்காடு' என்னும் பெயரும் வழங்கி வந்துள்ளது.

தற்போது வழங்கப்பெறும் பழவேற்காடு என்னும் பெயர், இவ்வூரைச் சுற்றிலும் கருவேல மரங்கள் நிறைந்திருந்ததால் ஏற்பட்ட பெயராகும். இப்பகுதியில் வேற்காடு என்னும் பெயருடன் பல ஊர்கள் இருந்தமையால் அவற்றுள் பழமையானது என்பதாலேயே இவ்வூர் பழவேற்காடு எனப்பட்டது.[22]

**ஆதி நாராயண சுவாமி கோயில் ;**

இக்கோயில் ஊருக்கு நடுவே மிகவும் சிதைந்த நிலையில் காணப்படுகிறது. முன் மண்டபம், மகா மண்டபம், கல்யாண மண்டபம், ஆகியவற்றைக் கொண்டு விளங்கும் இக்கோயிற் கருவறை கிழக்கு நோக்கியுள்ளது. பங்கஜவல்லி என்று அழைக்கப்படும் தேவிக்குத் தனிக்கோயில் உள்ளது. கோயிலின் தெற்குப் பக்கச் சுவரில் காணப்படும் 16ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த தெலுங்குக் கல்வெட்டு ஒன்று சிதிலமாயிருந்த பங்கஜவல்லி கோயிலைப் புதுப்பித்த செய்தியையும், கல்யாண மண்டபம் கட்டிய செய்தியையும் கூறுகிறது. பால வந்தகுலு என்பவர் இத்தர்மத்தைச் செய்தவராகக் குறிக்கப் பெறுகிறுர், இக்கல்வெட்டில் இவ்வூர் 'பிரளய காவேரி' என்றழைக்கப்படுகிறது.

**சாம ஈஸ்வரசாமி கோயில்**

கோயில் கருவறை, முன்மண்டபம், மகா மண்டபம் ஆகியுவற்றைக்கொண்டு விளங்குகின்றது. தேவிக்குத் தனி ஆலயம் உள்ளது. விஜயநகர காலத்திய இக்கோயில் சிற்பக்கலையழகு மிக்கது.

**மரச்சிற்பங்கள்:**

கோபுரத்தின் மேல்நிலையைத் தாங்கும் இரண்டு மரத்தூண்கள் வாயிலைஅலங்கரிக்கின்றன. இத்தூண்களோடு சேர்த்துப் பொருத்தப்பட்டுள்ள மரச்சட்டங்களை கி. பி. 16ஆம் நூற்றுண்டை சேர்ந்த அழகிய மரச்சிற்பங்கள் அணி செய்கின்றன. இவற்றுள் மரச்சட்டங்களின் மேற்புறம் காணப்படும் குதிரை வீரனின் மரச்சிற்பங்கள் கலையழகு மிக்கவை. தூண்களுக்கு இருபுறமும் யாளி சிற்பங்கள் உள்ளன. விஜயநகர கால மகா மண்டபங்களிலும் கல்யாண மண்டபங்களிலும் தூண்களோடு சேர்த்து வடிக்கப்பெற்ற குதிரை வீரனின் கற்சிற்பங்களைப் போன்று மிகத் தத்ருபமாக இம்மரச் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

வீரன் அமர்ந்துள்ள குதிரை தன் முன்புறக் கால்களைத் தூக்கிய வாறு உள்ளது. குதிரையைச் சுற்றிலும் இசைக்கலைஞர்கள் காண் பிக்கப்பட்டுள்ளனர். குதிரையின் முன்புற வலது பக்கத்தில் - கடி வாளத்தை ஒரு வீரன் பிடித்துள்ளான். இடது புறத்தில் குடை பிடித்தவாறு ஒருவன் நின்றுள்ளான். குதிரையைச் சுற்றிலும் மத்த ளம் வாசிப்பவன், தாளம் இசைப்பவன், குழல் ஊதுபவன் ஆகி யோர் உள்ளனர். கோபுர விதானத்தின் நடுவில் விரிந்த தாமரை போன்ற அமைப்பு, மரப்பலகையில் மிக அழகுற வடிக்கப்பெற் றுள்ளது.

**கற்சிற்பங்கள்**

பிரதானக் கோயிலின் முன் மண்டபத்தில் உள்ள தூண்களின் மேற்பகுதியை இணைக்கும் உத்தரத்தில் புராண கதைகளை விளக்கும் சிறிய அளவினதான கற்சிற்பங்கள் பல காணப்படுகின்றன. வலப் புறத்தில் அனுமனின் பல்வேறு தோற்றங்கள் வடிக்கப் பட்டுள்ளன. இடப்புறத்தில் மனுநீதி சோழன் கதையின் பல்வேறு காட்சிகள் கவினுறச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

**டச்சுக்கோட்டை**

டச்சுக்காரர்கள் 1609-ல் இங்கு வந்து 1610-ல் 'கல்டிரியா' (Geldria) என்ற கோட்டையைக் கட்டினர். சிதைந்த கட்டிடச் சுவர்ப் பகுதிகளும், கோட்டைச்சுவரின் அடிப்பகுதிகளும் இக்கோட் டையின் சின்னங்களாக இன்று காணப்படுகின்றன. கோட்டையைச் சுற்றி பெரிய அகழி உள்ளது. பக்கிங்ஹாம் கால்வாய் இக்கோட் டையின் கிழக்குப் பகுதியினை ஒட்டிச் செல்கிறது. கோட்டைக்குள் தண்ணீர் புகாதவாறு தடுப்பதற்குத் தடுப்புச்சுவர் ஒன்றும் கட்டப் பட்டுள்ளது. இக்கோட்டையின் முதல் டச்சு கவர்னர் பி. இ. வான் ஹோகன் ட்ரூப் (P. E. Van Hogar dorp) என்பவராவார்.[23]

**டச்சு இடுகாடு (Dutch cemetry)**

இவ்வூரில் 1656 - இல் தோற்றுவிக்கப்பட்ட டச்சுக்காரர்களின் இடுகாடு (cemetry) ஒன்று காணப்படுகிறது. இங்குள்ள கல்லறை களின் (Tombstones) காணப்படும் சிற்பங்களும் கல்வெட்டுகளும் கலையழகு மிக்கவை. இக்கல்லறைச் சிற்பங்கள் இங்கு வாழ்ந்த டச்சுக்காரர்களின் செல்வச் சிறப்பையும், அவர்கள் அணிந்த உடை கள் அணிகள் ஆகியவற்றைப் பற்றியும் நமக்குத் தெள்ளத் தெளி வாக உணர்த்துகின்றன. இவ்விடுகாட்டின் வாயில் ரோமானியப் பாணியிலமைந்த (Romanesque) வில் வட்ட வடிவில் உள்ளது.

வாயில் முகப்பின் இருபுறமும் நின்ற நிலையில் இரண்டு எலும்புக் கூட்டுக் கற்சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் வலதுபுறம் காணப்படுவது பெண் உருவம். இடதுபுறம் காணப்படுவது ஆண் உருவம். இச்சிற்பங்கள் மிக நேர்த்தியான முறையில் வடிக்கப்பட்டுள்ளன. வலப்புறம் காணப்படும் எலும்புக்கூட்டுச் சிற்பம் வாயில் முகப்பின் மீது காணப்படும் மண்டையோட்டுச்சிற்பத்தினைத் தாங்குகிறது. இடப்புறம் காணப்படும் சிற்பம் முட்டை வடிவிலான மணல் சொரிந்து காலங்காட்டும் கருவியினைத் (Hour-glass)[24] தலை மீது கொண்டுள்ளது. இச்சிற்பம் முட்டையின் மேலோட்டினைத் தாங்கும் ஒரு டச்சு கவர்னரைக் குறிப்பதாகச் செவி வழிச் செய்தி கூறுகிறது. கொடிய பஞ்சம் ஒன்று வந்த காலத்தில் இக்கவர்னர் மக்களுக்கு முட்டையோட்டில் அரிசி அளந்து கொடுத்ததை இச்சிற்பம் குறிப்பதாகக் கூறப்படுகிறது.

**கல்லறைக்கல்வெட்டுகளும் சிற்பங்களும் கூறும் சிறப்புச் செய்திகள்**

இங்குள்ள கல்லறைகளின் மீது காணப்படும் சிற்பங்கள் 17 ஆம் நூற்றுண்டில் இவ்வூர் இருந்த நிலையையும், கல்வெட்டுகள் இங்கு வாழ்ந்த மக்களைப்பற்றியும் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

ஐயோன்னஸ் வெர்கர்க் (Ioannes Verkerk)[25] என்பாரின் கல்லறை மீது காணப்படும் ஒரு சிற்பம் இவ்வூரிலுள்ள மாதா கோயிலைக் குறிப்பதாக உள்ளது. இச்சிற்பத்தில் மாதாகோயில் மரங்கள் சூழ்ந்து காணப்படுகிறது. கோயிலுக்கு முன்னுல் பாதிரியார் ஒருவர் முழங்காலிட்டு வணங்கும் நிலையில் காட்டப் பட்டுள்ளார்.

ஆப்பிரகாம் மெனேஸ் (Abraham Menois)[26] என்பவரின் கல்லறை மீது காணப்படும் சிற்பம் 1684ஆம் ஆண்டில் இவ்வூரிலிருந்த டச்சுக்கோட்டையைக் காட்டுகிறது. நீர் நிறைந்த அகழியின் நடுவில் 'கல்டிரியா' கோட்டை உள்ளது. அகழியில் தாமரை மலர்களும் மீன்களும் நிறைந்து காணப்படுகின்றன. கோட்டையின் மேல் மாடத்தில் டச்சுக்காரர்கள் தம் பெண்களோடு நின்றிருக்கும் காட்சி போற்றத்தகுந்த அழகு மிக்கது. கோட்டையின் அருகாமையில் சுற்றுச் சுவர்களில்லாத நகர மக்களின் இல்லங்கள் காணப்படுகின்றன. பழவேற்காட்டிற்கு மேற்கே 40 கி. மீ. தூரத்திலுள்ள ஊத்துக்கோட்டை என்னும் ஊரில் கோட்டை ஒன்று இருந்ததைப் பற்றி இக்கல்லறைக் கல்வெட்டு குறிக்கிறது.

சார்லஸ் டிலோன் (Charles Delon)[27] என்பவரின் கல்லறை இங்கு உள்ளது. கல்வெட்டில் இப்பெரியார் 1800 ஆம் ஆண்டு

ஆகஸ்ட் மாதம் 14ஆம் நாள் தமது 72-வது வயதில் இவ்வூரில் இறந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. இப்பெரியார்தான் முதன் முதலில் 1728-ல் சென்னையில் அச்சுக்கலையை அறிமுகப்படுத்தினர். இவர் சென்னைக்கு வருமுன்னர் பாண்டிச்சேரியில் ஓர் அச்சுக் கூடத்தை நிறுவி நடத்தி வந்தார்.

இது போன்று பல முக்கிய வரலாற்றுச் செய்திகளை தன்னகத்தே கொண்டு விளங்கும் இக்கல்லறைப் பகுதியைப் பாதுகாப்பது அவசியம்.

**மாதா கோயில்**

பழவேற்காட்டிற்கு வடக்கே கோட்டை குப்பம் பகுதியில் கத்தோலிக்க கிருத்துவ மாதாகோயில் ஒன்று உள்ளது. இம்மாதா கோயில் 1614-ஆம்ஆண்டு ஹாலந்து நாட்டைச்சேர்ந்த பீட்டர்பால் ப்ளாக்கர்மென் (Peter Paul Falgrman) என்னும் பாதிரியாரின் மேற்பார்வையில் கட்டப்பட்டதாகும். ஏப்ரல் மாதத்தில் இக் கோயிலுக்கு விழா நடைபெறுகிறது. கிறித்தவர் அல்லாத மக்களும் வெவிழாவில் பெருமளவில் கலந்துக் கொள்கின்றனர். இம் மாதாகோயில் 1678ஆம் ஆண்டு இருந்த தோற்றத்தை இவ்வூரிலுள்ள கல்லறைச் சிற்பம் ஒன்று காட்டுகிறது.

**நிழற் கடிகாரம்**

ஊரின் தெற்குப் புறத்தே அமைந்துள்ள மசூதியின் முன்னுள்ள திறந்த வெளியில் நிழற்கடிகாரம் ஒன்று உள்ளது. சூரிய வெளிச்சத்தின் நிழலைக் கொண்டு காலத்தை மிகத்துல்லியமாகக் காட்டும் இக்கடிகாரத்தின் அமைப்பு வியத்தகு முறையில் உள்ளது. ஓர் உயர்ந்த பீடத்தின் மீது கால எண்களைக் குறிக்கும் இரும்புத் தகடு ஒன்று கிழக்கு மேற்காகப் பதிக்கப்பட்டு, அதன் நடுவில் சுமார் 3 செ. மீ உயரமும் 1.5 செ. மீ அகலமுமுள்ள நீள்சதுர வடிவிலான இரும்புத்துண்டு ஒன்று பொருத்தப்பட்டுள்ளது. சூரியனின் வெளிச்சம் இரும்புத்துண்டின் மீது விழும்போது, அவ்விரும்புத் துண்டின் நிழல் எண்கள் குறிக்கப்பட்டுள்ள இரும்புத் தகட்டின் மீது விழும். எந்த எண் மீது நிழல் விழுகிறதோ அதுவே அப்போதைய நேரம் என்று எளிதில் அறிந்து கொள்ளலாம்.

**தோணி ரேவு**

இது பழவேற்காட்டிற்கு அருகேயுள்ள ஒரு தீவாகும். இத் தீவுக்கும் பழவேற்காட்டுக்கும் இடையே செல்லும் பக்கிங்ஹாம் கால்வாய் வழியாக எண்ணூரிலிருந்து பழவேற்காட்டிற்கு படகில்

செல்லலாம். மூன்று பக்கம் கடலும் நான்காவது பக்கம் கால் வாயும் சூழ அமைந்த இத்தீவில் பழமையான கலங்கரை விளக்கு ஒன்று இருக்கிறது. இங்கு மீனவர்களும் முகமதியர்களும் அதிகமாக வாழ்கின்றனர். டச்சுக்காரர்கள் காலத்தில் இத்தீவிலிருந்துதான் கைத்தறித் துணிகள் மலேயா போன்ற கிழக்காசிய நாடுகளுக்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது.[28] இன்றும் இத்தீவில் கைத்தறி நெசவு, பனை ஓலைப் பொருட்கள் செய்தல் போன்ற தொழில்கள் நடைபெற்று வருகின்றன.

### கரி மணல்

இது பழவேற்காட்டுத் தீவிலுள்ள கடற்கரைச் சிற்றூர். கி. பி. 16, 17 ஆம் நூற்றாண்டுகளில் கப்பல்களில் வந்த ஐரோப்பியர் களுக்குக் கடல்கடந்த நிலப்பகுதியில் தெரிந்த முதல் ஊர் இதுவே. வெள்ளையராட்சி காலத்தில், சென்னை மாநகரில் சிறந்து விளங்கிய ஐரோப்பிய வணிகர் பலர் வேனிற் காலத்தில் இவ்வூரில் தங்கி வந்தனர்.[29]

## திருப்பாலைவனம்

### அமைவு

திருப்பாலைவனம் சென்னையிலிருந்து பொன்னேரி வழியாகவும், காட்டூர் வழியாகவும் பழவேற்காடு செல்லும் பாதையில் அமைந் துள்ள வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சிற்றூராகும். இவ்வூர் பொன் னேரியிலிருந்து சுமார் 12 கி. மீ தூரத்தில் உள்ளது.

### கோயில்கள்

திருப்பாலைவனத்தில் தற்போது காணப்படுகின்ற பழமை யானதும் பெரியதானதும் மிகவும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததுமாகிய ஒரே சிவன் கோயில் திருப்பாலீஸ்வரர் கோயி லாகும். இதனைத் தவிர மேலும் இரண்டு பிடாரிக் கோயில்களும், ஓர் ஈஸ்வரன் கோயிலும், சிதைந்த நிலையிலுள்ள ஒரு பெருமாள் கோயிலும் உள்ளன.

### திருப்பாலீஸ்வரர் கோயில்

திரு. மா. இராச மாணிக்கனார்[30] இக்கோயில் முதலாம் குலோத்துங்க சோழ தேவருக்கு முன்பு ஆட்சி புரிந்த வீரராசேந் திர சோழ தேவர் (கி. பி. 1064 —1069) காலத்தில் கட்டப்பட்ட தாகக் குறிக்கிறார். இக்கோயிற் கல்வெட்டுகளை நன்கு ஆய்வு செய்த செல்வி. எம். எஸ். ஆயிஷா பேகம் 'திரிபுவன சக்கரவர்த்தி

கள் வீரராசேந்திர சோழ தேவர்[31] என்று மறுபெயர் கொண்ட மூன்றும் குலோத்துங்கச் சோழனால் கட்டுவிக்கப்பட்டதுதான் திருப் பாலீஸ்வரர் கோயில்' என்று கருத்துரைக்கிறார். இது மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் சோழவடுகன் என்பானது மேற்பார் வையில் மறுமடியும் கட்டப்பட்டுள்ளது என்பதற்கும் கல்வெட்டுச் சான்று உள்ளது. இக்கோயில் நீள்சதுர அமைப்புடையது. கோயி லின் மதில் கிழக்கு மேற்காக 506 அடி நீளமும், தெற்கு வடக்காக 550 அடி நீளமும் உடையது. கோயிலில் அம்மனுக்கும், நடராஜ ருக்கும் தனித்தனித் சன்னதிகள் உள்ளன. சுவாமிக்கும் அம்மனுக் கும் இடையில் முருகன் சன்னதி உள்ளது. இக்கோயிலில் சுவாமிக்கு வலப்புறத்தில் அம்மன் சன்னதி அமைந்திருப்பது ஒரு தனிச்சிறப்பாகும்.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள ஈஸ்வரர் சன்னதி அர்த்த மண்டபம் முருக மண்டபம் முன் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டு விளங்குகிறது. முகமண்டபத்தில் பக்கத்திற்கு இரண் டாக நான்கு முழுத்தூண்கள் உள்ளன. சோழர் காலத்தைச் சேர்ந்தவை. கருவறையின் நுழைவாயிலில் விநாயகரும் தட்சிணாமூர்த்தியும் உள்ளனர். முகமண்டபத்தின் வெளிச்சுவரில் தென்புறமும் வடபுறமும் பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு தேவ கோட்டங்கள் உள்ளன. ஆனால் அவற்றில் சிற்பங்கள் இல்லை. கருவறையின் பின்புறம் கஜபிருஷ்டமாக அமைந்துள்ளது. விமானம் தூங்கானை மாடவடிவில் உள்ளது. அர்த்த மண்டபத் தின் வெளிப்புறத்தில் சிற்பங்களுடன் கூடிய ஐந்து தேவகோட்டங் கள் உள்ளன. கருவறையின் முன் அமைந்திருப்பது நடராஜர் மண்டபம்.

> ''காளயுக்தி வருடம் மேஷ பகுள திருவாளர் இராமநமோ மண்டலேஸ்வர மந்திர மீசர குண்டர உரி ஹர்பரோர் ஒபுள ராஜய்யா மகன் ரெட்டிராஜா கட்டிய மண்டபம்''

என்பது இம்மண்டபத் தூணில் காணப்படுகின்ற தெலுங்குக் 'கல்வெட்டு ஒன்றின் தமிழாக்கமாகும். எனவே ஒபுள ராஜய்யா என்பவரின் மகனான ரெட்டி ராஜா என்பவனால் இம்மண்டபம் கட்டப்பட்டது தெரிய வருகிறது.[32]

கோயிலில் உள்ள மற்றொரு கல்வெட்டு இக்கோயிலின் மஹா மண்டபமும், கோயிலின் படிகளும் பையூர்க்கோட்டத்தை ச்சார்ந்த ஆமூரில் உள்ள ஒருவரால் கொடையாக அளிக்கப் பட்டவை' என்ற செய்தியைத் தருகின்றது.[33] மஹாமண்டபத்தைக் கல்யாண

மண்டபம் என்றும் அழைக்கின்றனர். விஜயநகரக் காலத்தைச் சேர்ந்தது இது.

ஈஸ்வரர் சந்நிதிக்கு வலதுபுறம் அமைந்துள்ள அம்மன் சந்நிதி மூன்றும் இராஜராஜனுல் கட்டப்பட்டு, சம்புவராய மன்னனுன இராசநாராயண சம்புவராயனின் காலத்தில் பழுது பார்க்கப் பட்டது.[34]

இக்கோயிலின் தலவிருட்சமான பாலைமரம் தென்மேற்கு மூலை பயில் காணப்படுகின்றது.

முதலாம் குலோத்துங்கன் காலத்தில் 'திருத் தர்த்துறை என்று அழைக்கப்பட்டது.

## கல்வெட்டுச் செய்திகள்

### அரசர்கள்

சோழ மன்னர்களான முதல் குலோத்துங்கன், விக்கிரம்ச் சோழன், இரண்டாம் குலோத்துங்கன் இரண்டாம் இராஜராஜன், இரண்டாம் இராஜாதிராஜன், மூன்றும் குலோத்துங்கன், மூன்றும் இராஜராஜன், தெலுங்குச் சோழர்களான தம்முசித்தி திருக்காளத்தி தேவகண்டகோபாலன், இராசராச கண்டகோபாலதேவன், விஜயகண்ட கோபாலன், பாண்டியமன்னனுன முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சம்புவராய் மன்னனுன மஹாமண்டலேஸ்வர பிரதாபருத்ர தேவர்; விசயநகர காலத்தைச் சேர்ந்த புக்கர், குமார வீரசாயன உடையார் போன்ற மன்னர்கள் காலக் கல்வெட்டுக்களும், நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாகக் காணப் படும் பெயர் குறிப்பிடாத சில கல்வெட்டுக்களும் இக் கோயிலில் காணப்படுகின்றன. மேலும் இம்மன்னர்கள் காலத்தைச் சார்ந்த பல்வேறுமக்களின் பெயர்களும் இக்கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன.

### நந்தவனங்கள்

திருப்பாலைவனம் கோயிலுக்குச் சொந்தமான நந்தவனங்கள் மூன்று இருந்தன என்று கல்வெட்டுக்கள் மூலம் தெரியவருகின்றன.

1. ஆலால சுந்தரன் திருநந்தவனம். இது முதல் குலோத் துங்கன் காலத்தில் ஏற்படுத்தப் பட்டது.[35]

2. பத்தர் சித்தத்துறைவான் திருநந்தவனம். இது மூன்றும் இராஜராஜன் காலத்திலோ அல்லது அதற்கு முன்னரோ ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.[36]

3. ஐம்பத்தெழுவர் திருநந்தவனம். இது விஜய நகர் காலத்தைச் சேர்ந்தது. காலம் கி.பி.14ஆம் நூற்றாண்டு.[37]

இவை தவிர மேலும் நான்கு கல்வெட்டுக்கள் நந்தவனங்களுக்குக்கொடை அளித்தோரைப் பற்றிக் கூறுகின்றன. அவற்றுள் இரண்டு, மூன்றும் குலோத்துங்கன் காலத்தையும், ஒன்று மூன்றும் இராஜராஜன் காலத்தையும் ஒன்று விஜய நகர மன்னரான புக்கராயர் காலத்தையும்[38] சார்ந்தது. மற்றொரு கல்வெட்டில் மன்னன் பெயர் குறிப்பிடப்படவில்லை.

**மடங்கள்**

கல்வெட்டுகள் மூன்று மடங்களைப் பற்றிக்குறிப்பிடுகின்றன விக்கிரம சோழன் காலக் கல்வெட்டிலும், மூன்றும் இராஜராஜன் காலக் கல்வெட்டிலும், மடங்களைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

> 'ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து கோளூர் நிலை திருப்பாற்றுறை திருப்பாலைவன முடையாற் கோயில் தன்மதாவளன் திருமடம்''

என்று விக்கிரம சோழனின் 14 ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு குறிப்பிடுகிறது.[39]

> ''பையூர்க் கோட்டத்துத் திருப்பாலைவனத்து அவிமுத்தீஸ்வரத்துக்கு வடக்கிற் கண்ட கோபால மாணிக்கத்தின் மடம்''

என்று மூன்றும் இராஜராஜனின் கல்வெட்டு கூறுகிறது.[40]

மேலும் இதே மன்னனின் 7 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில்

> 'அன்பர்க்கடியான் மடம்'

என்று ஒரு மடம் இடம் பெற்றுள்ளது.[41]

கண்ட கோபால மாணிக்கமடம் அடியார்களை உண்பித்தலும் நந்தவனத்தைப் பாதுகாத்தலும் ஆகிய செயல்களை மேற்கொண்

டது. அன்பர்க்கடியான் மடத்தில் ஆண்டார்கள் இருந்தனர். அவர்கள் கோயிலில் இருந்த திருக்கோட்டி மண்டபத்தை மேற் பார்த்தனர். திருமுறை ஓதினர். பத்தர் சித்தத்து உறைவான் திருநந்தவனத்தை வளர்த்தனர்.[42]

### பழங்காசுகள்

பழங்காசு, புஜபலன் மாடை, கண்ட கோபாலன் மாடை என்ற பெயர்கள் கொண்ட மூவகைக் காசுக்கள் கல்வெட்டுக்களில் சொல்லப் பட்டுள்ளன. பழங்காசும், புஜபலன் மாடையும் இரண் டாம் இராஜராஜன் காலத்திலும்[43] தெலுங்கு சோழர்களான திருக் காளத்தி தேவ கண்ட கோபாலன், விஜய கண்ட கோபாலன் ஆகி யோர் காலத்தில் 'கண்ட கோபாலன் மாடை' யும் வழக்கத்தில் இருந்திருக்கின்றன.[44]

### விழாக்கள்

அக்காலத்தில் பல்வகை விழாக்கள் இக்கோயிலில் கொண்டா டப் பட்டதற்கான சான்றுகள் கல்வெட்டுக்களில் உள்ளன. அவை வருமாறு : திருவாதிரை விழா, ஆருத்ரா விழா, உத்தராயன சம்க் ரந்தி ஆகியவை. திருவாதிரை விழாவும், ஆருத்ரா என்ற விழா வும் மார்கழி மாதத்தில் கொண்டாடப்பட்டன.[45] தற்போது திரு வாதிரை விழா இக்கோயிலில் கொண்டாடப்படுகின்றது.

### நிலங்கள்

இக்காலத்தில் நிலங்களுக்குப் பல்வகைப் பெயர்கள் இருப்பது போன்று, அக்காலத்திலும் நிலங்கள் பல்வகைப் பெயர்களால் அழைக்கப் பட்டன. 'ஆலால சுந்தர விளாகம்' என்று ஒரு நிலத் தின் பெயர் கல்வெட்டில் குறிக்கப் படுகின்றது.[46]

### அளவை முறைகள்

பல்வேறு அளவை முறைகள் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள் ளன. நிலங்களை அமைப்பதற்கு இருவகை அளவை முறைகள் பயன்படுத்தப் பட்டன. 1. வாழ வந்தான் கோல். 2. கண்டர கண்டன் கோல். மூன்றும் இராஜராஜனின் கீழ் இருந்த ஓர் சிற்ற ரசனின் ஆட்சியின் போது வாழ வந்தான் கோலும், வீரஸாயன உடையார் என்ற விஜய நகர மன்னன் காலத்தில் கண்டர கண்டன் கோலும் பயன்படுத்தப் பட்டன.[47] மேலும் விக்கிரம சோழன் காலத்தில் 'பதினறு சாண் கோல்' என்ற ஒன்று பயன்படுத்தப் பட்டதாக இம்மன்னனின் 14 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு

குறிப்பிடுகின்றது[18] மேலும் நிலங்களை விற்கும் போது 'வேலி' கணக்காகவும், 'குழி' கணக்காகவும் விற்றனர்.[19]

### சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும்

இக்கோயிலில் காணப்படுகின்ற சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும் கி.பி. 11 நூற்றாண்டிலிருந்து (சோழர் காலத்திலிருந்து) தற்காலம் வரையிலான காலத்தைச் சேர்ந்தனவாக உள்ளன. சிற்பங்களின் எண்ணிக்கை 19, செப்புத் திருமேனிகளின் எண்ணிக்கை 10.

### நாட்டுப் பிரிவுகள்

இக்கோயில் கல்வெட்டுக்களில் பல மண்டலங்கள், கோட்டங்கள், நாடுகள், ஊர்கள் ஆகியவற்றின் பெயர்கள் சொல்லப் பட்டுள்ளன.

#### மண்டலங்கள்

1. ஜயங்கொண்ட சோழமண்டலம்
2. சோழ மண்டலம்

#### கோட்டங்கள்

1. பைய்யூர் கோட்டம்
2. புலியூர் கோட்டம்
3. ஊற்றுக் காட்டூர்க் கோட்டம்
4. புழற் கோட்டம்
5. இக்காட்டுக் கோட்டம்
6. செங்காட்டுக் கோட்டம்

#### வளநாடுகள்

1. ராஜ ராஜ வளநாடு
2. விக்கிரம சோழ வளநாடு
3. நித்த விநோத வளநாடு
4. தென்துறை நித்த விநோத வளநாடு
5. மெய்குன்ற வளநாடு
6. குலோத்துங்க சோழ வளநாடு

**நாடுகள்**

1. பைய்யூர் நாடு
2. குன்றத்தூர் நாடு
3. திருமுனைப்பாடி நாடு
4. நடுவு நாடு
5. குன்ற நாடு
6. நாயற்று நாடு
7. பேரூர் நாடு
8. காக்கலூர் நாடு
9. திருநறையூர் நாடு

**சதுர்வேதி மங்கலங்கள்**

1. சத்ரு பயங்கர சதுர்வேதி மங்கலம்
2. குஞ்சரமல்ல சதுர்வேதி மங்கலம்
3. கேரளாந்தக சதுர்வேதி மங்கலம்
4. விக்கிரம சோழ சதுர்வேதி மங்கலம்

**கூற்றம்**

1. ஆலூர்க் கூற்றம்

**ஊர்கள்**

1. சாத்தூர்
2. அரமூர்
3. குன்றத்தூர்
4. திருவான்மியூர்
5. கோளூர்
6. இரையூர்
7. வயலூர்
8. பேரூர்
9. அதங்கூர்
10. நெல்லூர்
11. குலோத்துங்க சோழன் பைய்யூர்
12. மெதுலூர்
13. ஆலூர்
14. ஆமூர்
15. எயினூர்
16. திருப்பாச்சூர்
17. உறனூர்
18. அளிநல்லூர்
19. பெருங்குறும்பூர்
20. ஈஞ்சூர்
21. ஆலத்தூர்
22. விருதுராஜ பயங்கர நல்லூர்
23. நரையூர்

**கிராமங்கள்**

1. இந்தம்பேடு
2. பனங்குடி
3. திருப்பாலைவனம்
4. பூவரம்பி
5. நடுவில்லை
6. மென் முதலை மேடு
7. புதுவாயில்
8. பெரும்பேடு
9. பொன்னம்பாக்கம்

**தெருக்கள்**

1. பெரிய தெரு
2. பிரிதி மாணிக்க பெருந் தெருவு

இவ்வாறு பலவகையான சிறப்புடன் இக்கோயில் அமைந்துள்ளது.

## அடிக்குறிப்புகள்

1 Dr. R. Nagaswamy, Gangaikondacholapuram, p. 29.
2 கல்வெட்டு, கவரைப் பேட்டை வரலாற்றுப் பேரவை யினரால் படியெடுக்க பட்டுள்ளது.
3 S.I.I., X, 768.
4 Sir. Robert Bruce Foote, Madras Journal XXII, Part II, p. IV.
5 Wadia, Geology in India, p. 72.
6 அ. அப்துல் மஜீத், தொல்லியல், கொங்கு. 1976, ப. 16.
7 V. D. Mahajan, Ancient India, p. 28.
8 S.I.I. XII, 86.
9 S.I.I. XII, 87.
10 Epi. Rep. of 1916, p. 119.
11 Robert Sewel, 1882. The Antiquarian Remains of the Presidency of Madras
12 Epi Rep. of 1912, p. 88.
13 கா. அப்பாதுரை, தென்னாட்டுப் போர்க்களங்கள்.
14 நடன. காசிநாதன், தாய்மார் எழுவர் வழிபாடு, கல்வெட்டு எண் 14, ப. 29.
15 144 of 1916
16 145 of 1916
17 கொங்கு, மார்ச்சு 1976, ப. 54.
18 கல்வெட்டு, கவரைப்பேட்டை வரலாற்றுப் பேரவையினரால் படியெடுக்கப் பட்டுள்ளது.
19 ARE 1920, Para 57.

20 கல்வெட்டு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் படியெடுக்கப்பட்டுள்ளது.

21 தென்னிந்தியக் கோயிற்சாசனங்கள், பாகம்-3, பகுதி—1, ப. 1135.

22 (a) பூந்தமல்லிக்கு அருகிலுள்ள திருவேற்காடு.
(b) கும்மிடிப்பூண்டிக்கு அருகிலுள்ள வேற்காடு.

23 C. S. Julian James Cotton, List of Inscriptions on tombs or monuments in Madras, Vol. II, p. 88.

24 Ibid p. 76.

25 Ibid p. 81, No. 1515.

26 Ibid p. 83, No. 1521.

27 Ibid p. 87, No. 1543.

28 Ibid p. 76.

29 சோமலே, செங்கற்பட்டு மாவட்டம், ப. 22.

30 டாக்டர். மா. இராச மாணிக்கனர், திருப்பாலைவனம் கல்வெட்டுக்கள், ப. 6.

31 செல்வி. எம். எஸ். ஆயிசா பேகம், திருப்பாலைவனம், பதிப்பிக்கப்படாத ஆய்வு.

32 368 of 1929

33 369 of 1929

34 377 of 1929

35 350 of 1929

36 340 of 1929

37 374 of 1929

38 370 of 1929

39 325 of 1929

40 330 of 1929

41 350 of 1929

42 டாக்டர். மா. இராச மாணிக்கனர், திருப்பாலைவனம் கல்வெட்டுக்கள், ப. 11.

43 310, 311 of 1929

44 308, 361 of 1929

45 337, 308 of 1929

46 341 of 1929

47 364, 357 of 1929

48 325 of 1929

49 319, 325, 328, 330 of 1929.

# சோழர் காலத் தொண்டை மண்டலத்தில் தனம் அளித்த வணிகர்கள்

ஆ. பத்மாவதி

கி. பி. 10-ஆம் நூற்றாண்டு முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை சோழர் காலத்தில் விவசாயமும் வாணிபமும் மிகவும் வளர்ச்சியடைந்த நிலையில் காணப்பட்டன.

**பொருளாதார நிலை :** வியாபாரத்தின் மூலம் பெரும் பொருட்கள் திரட்டிய வணிகர்களது பொருளாதார நிலைபற்றி அறிந்து கொள்ள கோயில்களுக்கு இவர்கள் கொடுத்த கொடைகளே மிகச் சிறந்த சான்றாகும்.

திருவிடந்தை என்ற ஊரிலுள்ள கோயிலுக்கு 15 கழஞ்சு பொன்னை, கொடுங்கோளூர் வியாபாரி ஒருவன் அளித்தான். தையூர் என்ற ஊரிலுள்ள மக்கள் அதனைப் பெற்றுக் கொண்டு அதற்கு வட்டியாக 24 கலம் 2 தூணி 1 பதக்கு 4 நாழி நெல்லை ஒவ்வொரு வருடமும் அளித்து வந்தனர்.[1]

இதே ஊரிலுள்ள கோயிலுக்கு ஆலையூர் வியாபாரி ஒருவன் கொடுத்த 15 கழஞ்சு பொன்னை, மாடம்பாக்கம் என்ற ஊரிலுள்ள மக்கள் பெற்றுக் கொண்டு தினம் 1 உழக்கு நெய் அளித்தனர். ஒரு நாள் நெய் அள்க்கத் தவறினாலும் அபராதம் 8¼ பணம் வசூலிக்கப் பட்டதுடன், அரசனுக்கு 1மஞ்சாடி பொன்னும் அளிக்க வேண்டும் என்ற நிபந்தனையும் காணப்படுகிறது.[2] மேலும் இவ்வூர் கோயிலுக்கு புருஷோத்தமங்கலத்தைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் 20 கழஞ்சு பொன்னை அளித்தான். அதனைப் புதுவூர் என்ற ஊரிலுள்ள மக்கள் பெற்றுக் கொண்டு வட்டியாக நெய் அளந்தனர். ஒருநாள் அளக்கத் தவறினாலும் அபராதம் 4¼ பணம் செலுத்த வேண்டும் என்ற நிபந்தனை காணப்படுகிறது.[3]

திருவொற்றியூரைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் 30 கழஞ்சு பொன்னை அக்கோயிலுக்கு அளித்த செய்தியும், அதனை தையூர் என்ற ஊரிலுள்ள மக்கள் பெற்றுக் கொண்டு 90 நாழி நெய்யும் ஒரு கலம் நெல்லும் வட்டியாகச் செலுத்தினர் என்ற செய்தியும் கல்வெட்டில் காணப்படுகிறது.[4]

மேலும் இதே கோயிலுக்கு கடற்பாற்பள்ளி என்ற ஊரைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் 16 1/8 கழஞ்சு பொன்னை 12 அந்தணருக்கு உணவிடும் பொருட்டு அளித்த செய்தியும் கூறப் பட்டுள்ளது.[5]

மேற்கூறியவாறு தனிபட்ட மனிதனுல் கொடுக்கப்படும் பொன்னை ஊர்மக்கள் பலர் பெற்றுக் கொண்டு வட்டி செலுத்தி வந்தனர் என்ருல் அவனுடைய பொருளாதார நிலை எந்த அளவு உயர்ந்திருந்திருக்க வேண்டும் என நம்மால் ஊகிக்க முடியும். திருக் கச்சூர் என்ற ஊரிலுள்ள வியாபாரிகளுக்கும் நெசவாளிகளுக்கும் எண்ணை வியாபாரிகளுக்கும் வரி நிர்ணயிக்கப் பட்டது. வருடத் திற்கு ஆறு பணம், ஒவ்வொரு கடை வைத்திருக்கும் வியாபாரி களும், தறி வைத்திருக்கும் கைக்கோளர், சாலியர், எண்ணெய் வியாபாரி ஆகியோரும் செலுத்த வேண்டுமென்று ஆணையிடப் பட்டது.[6]

இது போல; வல்லம் என்ற ஊரிலுள்ள எண்ணெய் வியாபாரி கள், நாளைக்கு ஒரு படி வீதம் தினம் ஒருவர் விளக்குக்கு எண்ணெய் வார்க்க வேண்டும் என ஆணையிட்ட செய்தி காணப்படுகிறது.[7] இவ்வாறு வியாபாரிகளிடமிருந்து பெரும்பான்மை பொருள் அர சுக்கு கிடைத்திருக்க வேண்டும். இத்தோடு அங்காடிப்பாட்டம், சுங்கவரி போன்ற வரிகளும் வணிகர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரிகளே. நாட்டின் பொருளாதார நிலை உயர சோழர் காலத்தில் வணிகர்களும் முக்கிய பங்கு வகித்திருக்க வேண்டும்.

**சமூக நிலை:** உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் வணிகம் செய்து பொருளாதார நிலையில் மிக உயர்ந்து விளங்கிய வணிகர்களுக்கு சமூகத்தில் சிறந்த செல்வாக்கு இருந்திருக்கவேண்டும். வியாபாரத் துறையில் ஈடுபட்டிருந்த இவர்களுக்கு நிலங்களும் உரிமையாக இருந்திருக்க வேண்டும். திருமழிசையிலுள்ள அகஸ்தீஸ்வரர் கோயிலுக்கு அவ்வூர் சபையாரிடம் உய்யக் கொண்ட சோழபுரத்து நகரத்தார்கள் 10,000 குழி நிலத்தை அளித்த செய்தி காணப்படு கிறது.[8] இவர்கள் நிலவுடமையாளர்களாகவும் வியாபாரிகளாக வும் இருந்ததால் நிலத்திலிருந்தும் வியாபாரத்திலிருந்தும் அதிக மான வருமானம் வந்து குவிந்திருக்க வேண்டும்.

எண்ணெய் வணிகர், உப்பு வணிகர், நெசவு வணிகர் போன்ற பல்வேறு வணிகர்கள் வாழ்ந்தனர். கோயிலுக்கு 30 கழஞ்சு பொன்னை வாரி வழங்கிய பெரும் வியாபாரிகளைப் போலல்லாமல் சாதாரண நிலையில் இவர்கள் வாழ்ந்திருத்தல் வேண்டும்.

**அரசியல் நிலை :** பொருளாதாரத்தில் மிக உயர்ந்த நிலையும், அதனால் சமூகத்தில் சிறந்த மதிப்பும் இருந்த காரணத்தினால் அரசியலிலும் இவர்கள் பங்கு வகித்தனர். இவர்கள் வாழ்ந்த நகரங்களில் உள்ள சபைகளில் இவர்களே அங்கம் வகித்து நகரசபையை நிர்வகித்தனர்.

மயிலார்ப்பு என்ற ஊரிலுள்ள வியாபாரிகள் ஒன்றுகூடி அய்ய புழால் காட்டூர் என்ற ஊரை 'வீரபட்டணம்' எனப் பெயரிட்டு, பின் சில சட்ட திட்டங்களையும், நடவடிக்கைகளையும் பேசி முடிவெடுத்த செய்தி கூறப்படுகிறது.[9]

அது போல திருக்கச்சூர் திருக்காட்டுப் பள்ளியுடைய நாயனார் கோயிலில், காஞ்சியையும் அதன் சுற்றுப் புறத்தையும் சேர்ந்த 24 நகர எண்ணெய் வியாபாரிகள் கூடி ஒரு செக்குக்கு ஒரு காசு வீசும் கொடுக்க வேண்டும் எனத் தங்களுக்குள் முடிவு செய்த செய்தி காணப்படுகிறது.[10]

இவ்வாறு வியாபாரிகள் தாங்களாகவே சட்ட திட்டங்களை அமைக்கவும் முடிவெடிக்கவும் தக்க அரசியல் பின்னணியைப் பெற்றிருந்தனர். எனவே, பொருளாதாரம், சமூகம், அரசியல் ஆகிய துறைகளில் மிகுந்த செல்வாக்குடன் வணிகர்கள் பிற்காலச் சோழர் காலத்தில் திகழ்ந்தனர் எனக்கூறலாம்.

### அடிக் குறிப்புகள்

1 260 of 1910
2 262 of 1910
3 263 of 1910
4 267 of 1910
5 19 of 1911
6 300 of 1909
7 405 of 1896
8 19 of 1911
9 256 of 1912
10 261 of 1909

# திருப்பருத்திக்குன்றத்து ஓவியங்கள் -ஒரு ஆய்வு

திருமதி சித்ரா விஜி

காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள திருப்பருத்திக்குன்றத்திலுள்ள சமணர் கோயிலில் இரு வேறு காலத்தைச் சார்ந்த ஓவியங்கள் உள்ளன. வர்த்தமானர் கோயில் சங்கீத மண்டபத்திலுள்ள இவ்வோவியங்கள் பற்றி காலஞ்சென்ற தி. நா. இராமசந்திரன் அவர்கள் 'திருப்பருத்திக்குன்றமும் அதன் கோயில்களும்' என்ற நூலில் விரிவாக ஆராய்ந்துள்ளார். அவற்றில் பிற்காலத்து ஓவியங்கள் கி. பி. 18ஆம் நூற்ருண்டைச் சார்ந்தவை என்ற அவர் கருத்து ஏற்புடையதே. சிதைந்துள்ள மற்ற ஓவியங்கள் சித்தன்ன வாசல் ஓவியங்களைப் போல வண்ணங்களில் இருந்தாலும் அவை கி. பி. 17ஆம் நூற்ருண்டைச் சார்ந்தவையாக இருக்கக்கூடும் எனக்கருதினர். ஆயினும் சோழர் ஓவியங்களையும் விஜயநகரக் கால ஓவியங்களையும் நுணுகி ஆராய்ந்தால் இடைப்பட்ட கால ஓவிய வளர்ச்சியைக் காணமுடிகிறது.

திருப்பருத்திக்குன்றத்திலுள்ள சிதைந்துள்ளஓவியங்கள் சோழர் தம்நுட்பமான சிற்ப, ஓவிய உயிர்த்துடிப்பை இழக்கத் தொடங்கிய காலத்திற்கும், விஜயநகரர் கலை அறிமுகமாகி எங்கும் பரவத் தொடங்கிய காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தவையாகத் தோற்றமளிக்கின்றன. இரண்டாம் புக்கராயரின் அமைச்சராக இருந்த இருகப்பர் என்பவர் சங்கீத மண்டபத்தைக் கட்டினர். இம் மண்டபத்தில் (1387-88) உள்ள சிதைவடைந்த ஓவியங்கள் அக்காலத்தவையாய் இருக்கக்கூடும். ஆதலின், அவை கி. பி. 14 ஆம் நூற்ருண்டைச் சார்ந்தவை எனலாம். தென்னிந்தியக் கலைப்பாணியைப் பிரதிபலிப்பதாக உள்ள இவ்வோவியங்கள் எஞ்சியுள்ள விஜயநகர ஓவியங்களில் காலத்தால் முற்பட்டவை என்று கூறலாம்.

கி. பி. 14 ஆம் நூற்ருண்டில் இருந்த சிற்பங்கள், செப்புத் திருமேனிகளின் உருவ அமைதியையே இவை பிரதிபலிக்கின்றன. சோழர் தம் கலைச்சிறப்பின் தொடர்ச்சியாக இவ்வோவியங்கள் இல்லாவிட்டாலும் பிற்கால ஓவியங்கள் போல பொலிவற்றவையாக இல்லை. அணிவகைகளை நோக்கும்போது பிற்கால விஜயநகரர் காலத்தைப்போல் அளவுக்கு அதிகமாகவும், பளுவாகவும் இல்லை.

எனினும் எளிமையாகவும், பொருத்தமுடையதாகவும் இருக்கின்றன. இவ்வோவியங்கள் கருத்தைக் கவரும் வகையிலும், நுண்மையாகவும், கலை உணர்வுடனும் விளங்குகின்றன. இக்கலை கி. பி. 16 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு படிப்படியாகக் குறைவதைக் காண்கிறோம். மேலும் உருவ அமைதி, நிற்கும் நிலை, பாதங்களின் அமைப்பு, விரல்களின் அமைதி, மெல்லிய இடை ஆகியவற்றுடன் கூடிய உருவங்கள் சோழர் காலத்திற்கும் விஜயநகர காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் கலைமரபு எவ்வாறு படிப்படியே மாறுதல் அடைந்தது என்பதை அறிந்துகொள்ள உதவியாக உள்ளன. இவ்வோவியங்கள் விஜயநகரப் பேரரசு வலிமை மிக்கதாக இருந்தது என்பதையும், பின்னர் அதன் கலை மரபு குறைந்த நிலையினையும் தெளிவாகக் காட்டுகின்றன.

இக்கோயிலிலுள்ள பழமையான கல்வெட்டு முதற் குலோத்துங்கன் காலத்தது. இருந்தாலும் சந்திரபிரபா கோயிலிலுள்ள முதல் இராஜேந்திர சோழனுடைய கல்வெட்டானது இந்தப்பகுதியில் சோழப்பேரரசின் ஆதிக்கம் எந்தஅளவு ஓங்கி இருந்தது என்பதைத் தெரிவிக்கிறது. இங்கு குலோத்துங்கன், விக்ரமன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் இராஜராஜன் ஆகியோர் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. கி. பி. 13 ஆம் நூற்றாண்டு வரை சோழர்கள் தொடர்ந்து நன்கொடை அளித்துள்ளதும், அதனையடுத்தும் பல்லவக் குறுநில மன்னனான கோப்பெருஞ்சிங்கன் பல கட்டிடப் பணிகள் செய்திருப்பதும் இக்கோயிலில் கலைமரபு தொடர்ந்து வந்திருக்கிறது என்பதைக் காட்டுகிறது. இதனை அடுத்த கலைப்பணி இருகப்பன் கட்டுவித்த சங்கீதமண்டபமே.

கலைஞர்கள் தம் ஆக்கத்தையும், திறமையையும் வெளிப்படுத்தவும், இசை வல்லுநர்கள் கலையை அரங்கேற்றவும், இசையிலுள்ள ஆர்வத்தைக் காட்டவும், இந்த சங்கீத மண்டபம் அல்லது சித்ரமண்டபம் பயன்பெறும் வகையில் அமைந்துள்ளது. இம்மண்டபங்கள் கலைக்கூடமாக அமைந்து துடிப்புடன் செயல்பட்டதால் கோயிலினுள் கலை மேம்பாட்டிற்கு ஆதாரமாக இருந்தது. இம்மண்டபங்களிலுள்ள கல்வெட்டுக்கள் கலைஞர்களின் பெருந்தகைமையை எடுத்துக்கூறுவனவாக அமைகின்றன. சிறுசிறு துண்டுக் கல்வெட்டுக்கள் மூலம் எவ்வாறு வரலாற்றை மாற்றி அமைக்க முடிகிறதோ அது போல இவை சிதைந்த ஓவியங்களேஆயினும் இந்தியாவின் ஓவியக் கலையின் வளர்ச்சியைத் தெரிவிக்கப் பெரிதும் உதவுகின்றன.

இவ்வோவியங்கள் வரைந்துள்ள முறை, வண்ணங்கள் முதலானவற்றை நோக்கும்போது பல்லவர், சோழர் காலத்தில் திகழ்ந்த

எழிலார்ந்த ஓவிய மரபின் இறுதி நிலை எனக் கொள்ளலாம். இவை பார்த்துப் பரவசமடைந்து பாராட்டக் கூடியனவாக உள்ளன. விதானத்திலுள்ள பிற பிற்கால ஓவியங்கள் நகைச்சுவை ஓவியங்கள் போல் உள்ளன. மற்ற சில கோயில்களைப் போல் பழைய ஓவியங் களுக்கு மேலேயே ஓவியந் தீட்டாமல் பண்டைய ஓவியங்களைவிட்டு விட்டு, பிற இடங்களில் ஓவியங்களை வரைந்துள்ளதைப் பார்க்கும் போது அக்கால ஓவியர்களின் கலா ரசனையை மக்கள் பெரிதும் போற்றுவர் என்பதில் ஐயமில்லை.

தமிழாக்கம்: **ஆர். வசந்த கல்யாணி**

# செங்கற்பட்டு மாவட்டத்தில் பழைய கற்காலப் பண்பாடு

து. துளசிராமன்

வரலாற்றுசிரியர்கள் வரலாற்றினை முப்பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். இவை வரலாற்றுக்கு முந்தியகாலம் (Pre historic period), இடைக்காலம் (Proto historic period) வாரலாற்றுக் காலம் (Historic period) என்பனவாம். எழுத்துச்சான்றுகள் தோன்றுவதற்கு முந்திய காலத்தை வரலாற்றுக்கு முந்திய காலம் எனவும், எழுத்துக்கலை தோன்றி அதனை அடிப்படைச் சான்ருகக் கொண்டு விளங்கும் காலத்தை வரலாற்றுக் காலம் எனவும் கூற லாம். வரலாற்றுக்கு முந்திய காலத்தில் மனிதன் நாடோடியாக வும் கரடு முரடான கற்கருவிகளை உபயோகித்த மனிதனுகவும் வாழ்ந்தான். எனவே, இதனைக் கற்காலம் எனவும் அறிஞர் குறிப் பர். கற்காலத்துக்கும் வரலாற்றுக் காலத்திற்கும் இடையில் வாழ்ந்த மக்கள் உலோகத்தின் பயனை அறிந்தவர்களாகவும், சுட்ட செங்கற்களாலான வீடுகளை அமைத்து வாழும் நாகரிகச் சிறப்பு எய் தியவர்களாகவும் விளங்கினர். இக்கால மக்களைப் பற்றி அறிவதற்கு தெளிவான எழுத்துச் சான்றுகள் இல்லாத காரணத்தால் இதனை வரலாற்றுக்கு முந்திய காலத்திற்கும் வரலாற்றுக் காலத்திற்கும் இடைப்பட்ட காலம் (Proto historic period) எனலாம்.

சுமார் 10 லட்சம் ஆண்டுகள்வரை பரவியிருந்த பிளைஸ் டோசீன் காலத்தில்தான்[1] இந்தியாவில் பழைய கற்காலப் பண் பாடு தோன்றியது. ஹோலோசீன் (Holocene) காலத்தில் மனிதன் நாகரிக வாழ்க்கையில் ஈடுபட்டலானுன்.

**பழைய கற்காலம்**

கற்காலம் (Stone Age) மூன்று பிரிவுகளைக் கொண்டது. அவை பழையகற்காலம் (Palaeoltihic Age), இடைக்கற்காலம் (mesolithic Age), புதிய கற்காலம் (Neolithic Age) என்பதாம். இந்தியாவில் பழைய கற்காலப் பண்பாடு சுமார் ஐந்துலட்சம் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றியிருக்கலாம் என டாக்டர் எச்.டி. சங்காலியா கருதுகிருர்,[2] கற்கருவிகளின் பொதுத்தன்மைகளையும்

தொழில் நுட்பங்களையும் அடிப்படையாகக் கொண்டு இந்தியாவின் பழைய கற்காலத்தை 1. முதற்கற்காலம் (Early or lower Palaeolithic) 2. இடைக்கற்காலம் (middle Palaeolithic) 3. கடைக்கற்காலம் (Late ro upper palaeolithic) என மூன்று கால கட்டங்களாக பிரிக்கலாம். தமிழ் நாட்டில் மேற்கூறிய மூன்று கால கட்டங்களைச் சேர்ந்த கற்காலப் பண்பாடுகளும் நிலவியிருந்ததற்கான சான்றுகள் பல இடங்களில் கிடைத்துள்ளன. செங்கற்பட்டு மாவட்டத்தில் முதல் இரண்டு கால கட்டங்களைச் சேர்ந்த ஏராளமான கற்கருவிகள் கோர்த்தலையாற்றுப் பள்ளதாக்கிலும் அதன் கிளை ஆறுன ஆரணியாற்றுப் படுக்கைகளிலும் அதன் கரையோரங்களிலும் கிடைக்கின்றன. இந்தியாவில் முதன் முதலாக தமிழ் நாட்டில்தான் பழங்கற்காலக் கருவி கண்டுபிடிக்கப் பட்டது. 1863-ல் ராபர்ட் புரூஸ்புட் என்ற ஆய்வாளர் செங்கற்பட்டு மாவட்டத்தில் பல்லாவரத்துக்கு அருகில் முதன் முதலாக இதனைக்கண்டுபிடித்தார். இவரைத் தொடர்ந்து 1930 ஆம் ஆண்டு வாக்கில் செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் வட்டத்தில் அத்திரம்பாக்கம் என்ற ஊருக்கருகில் கோர்தலையாற்று பள்ளத்தாக்கில் மேற்பரப்பு (Explorations) ஆயப்பட்டது. 1962-64 ஆம் ஆண்டுகளில் மத்திய தொல்பொருள் ஆய்வுத் துறையினர் இப்பகுதியின் சில இடங்களை அகழ்வாய்ந்து பல அறிய செய்திகளை வெளியிட்டனர்.

## சென்னை தொழில்முறை (Madras Industry)

ஒரு வகையான தொழில் நுட்பத்தோடு ஓரிடத்தில், அல்லது ஒரு எல்லைக்குள் கிடைக்கும், கற்கருவிகளின் தொகுதியை ஒரு தொழில் முறை (Industry) என்பர்.[3] கருவிகள் செய்வதற்கு ஏற்ற கற்களின் தன்மையையும் கற்கருவிகளின் நுட்பத்தையும் கொண்டு இந்தியாவின் பழைய கற்காலத்தை இரண்டு தொழில்முறைகளாக பிரிந்துள்ளனர். வட இந்தியாவில் சோன் (soan or sohan) ஆற்றுப்பள்ளத்தாக்கில் கிடைக்கும் கற்கருவிகளை சோன் தொழில் முறை (Soan Industry) என்றும் தமிழ் நாட்டில் சென்னைக்கு அருகில் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள கோர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியில் கிடைக்கும் கற்கருவிகளை சென்னை தொழில் முறை (Madras Industry) என்றும் அழைப்பர். சென்னை கற்கருவிகளில் ஒரு வகைக் கைக்கோடரிகள் மிக அதிக அளவில் கிடைப்பதால் அதனைக் கைக்கோடாரி பண்பாடு (Hand axe culture) என்றும் அழைப்பர். இக்கற்கருவிகள் படிகக்கல்லிலிருந்து (Quartzite) செய்யப் பெற்றவை. இப்படிகக்கல்லிருந்து (core) மிக எளிதாக சில்லுகளை பெயர்த்தெடுத்து கருவிகளை உண்டாக்கலாம்.

**கோர்த்தலை யாற்றுப் படுகைகள் (River Terraces)**

தமிழ் நாட்டில் திருவள்ளூர், பொன்னேரி வட்டங்கள் வழியே ஓடி, எண்ணூருக்கு அருகில் கடலோடு கலக்கும் கோர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கில்தான் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் இப்போதைய பாலாறு ஓடிக் கொண்டிருந்ததாகவும், அண்மைக்காலத்தில்தான் பாலாறு தன்னுடைய இப்போதைய நீர்ப் போக்கைமேற்கொண்டதாகவும் நில அமைப்பியல் ஆய்வாளர்கள் கருதுகிறார்கள்.

கோர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கை மேலோட்டமாகப் பார்த்தாலே அந்தப் பள்ளத்தாக்கில் ஒரு காலத்தில் மிகப் பெரிய ஆறு ஓடிக் கொண்டிருந்ததை உணரலாம். இப்போது அந்த ஆறு அளவில் மிகச் சுருங்கி விட்டது. இவ்வாற்றுப் பள்ளதாக்கில் திருவள்ளூர் வட்டத்திலுள்ள அலிகூர் மலைக் குன்றுகளிலிருந்து வடமதுரை வரைக்கும் ஆங்காங்கே சில ஆற்றுப் படுகைகள் காணப்படுகின்றன.[4] இப்படுகைகள் 'பிளீஸ்டோசீன்' காலத்தில் தோன்றியவை. இப்படுகைகளில் பழைய கற்கால கருவிகள் பல காணக்கிடைக்கின்றன.

திரு.வி.டி. கிருஷ்ணசாமி[5] மற்றும் டி.டி. பேட்டர்சன்[6] (V.D. Krishnasami and T. T. Paterson) போன்ற அறிஞர்கள் கோர்த்தலையாற்றுப் பள்ளதாக்கில் 100 அடி, 60அடி, 20அடி, 8அடி உயரங்களில் நான்கு படுகைகள் காணப்படுவதாக கூறுகிறார்கள். டாக்டர். எச்.டி. சங்காலியா (Dr. H.D. Sankalia) 60அடி, 20அடி, 8அடி, உயரங்களில் மூன்று படுகைகள்தான் காணப்படுவதாக குறிக்கிறார்.[7] இப்படுகைகள் முறையே வடமதுரை, சோழவரம், அத்திரம்பாக்கம், எருமைவெட்டிபாளையம் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**வடமதுரை**

வடமதுரை, கோர்த்தலையாற்றின் கிளை ஆறான ஆரணி ஆற்றின் கிழக்குக் கரையில் ஒரு சிறிய ஊராக இன்று காட்சியளிக்கிறது. இங்கு சுமார் 100 அடி உயரம் கொண்ட படிவுப்படுகை (Terrace) ஒன்று காணப்படுகிறது, இப்படுகை ஏற்பட்ட காலத்தில் இங்கு ஓடிய ஆற்றின் நீர் மட்டம் இன்றைய நீர்மட்டத்தைவிட 100 அடி உயரத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது. மத்திய தொல் பொருள் ஆய்வுத்துறையினர், இப் பகுதியில் நான்கு இடங்களை அகழ்வாய்ந்து பல கற்கருவிகளை வெளிக் கொணர்ந்தனர். இக் கருவிகளில் குறிப்பிடத்தக்கவை கைக் கோடாரிகளாகும்,

இவ்வகையைச் சேர்ந்த கைக் கோடாரிகள் பிரஞ்சு நாட்டின் வட பகுதியிலுள்ள ''அபவில்லி'' என்ற இடத்தில் முதலில் கிடைத்ததால் இவை அப வில்லியன் மரபைச் சேர்ந்தவை எனத் தொல்லியல் அறிஞர்கள் அழைக்கின்றனர்.[8] இக் கைக் கோடாரிகளன்றி கிழிப்பான்களும், சில்லுகளால் செய்யப்பெற்ற கற்கருவிகளும் இங்கு கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

**அத்திரம் பாக்கம்**

அத்திரம்பாக்கம், கோர்த்தலையாற்றின் வடகரையில் அமைந்துள்ள ஒரு சிற்றூராகும். இவ்வூருக்கு அருகில் 'பூதடி மன்னு வங்க' என்னும் ஓடை கோர்த்தலை ஆற்றோடு கலக்கிறது. சுமார் 20 அடி உயரமுள்ள படுகை ஒன்றும் இங்கு உள்ளது. இப்படுகையில் அகழ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது.[9] இந்த அகழ்வின் மூலம் இப்படுகை கீழிருந்து மேலாகக் கீழ்கண்டவாறு படிவடுக்குகளைக் கொண்டுள்ளதென அறியப்பட்டது. முதலில் சிதைந்த களிமண் பாறை ஓர் அடுக்காக உள்ளது. இதனுடைய மேல் பகுதி களிமண்ணாக உள்ளது. இக் களிமண்ணினூடே ''அசுலியன் மரபை'' சேர்ந்த கருவிகள் காணப்படுகின்றன. இப்படிவடுக்குக்கு மேல் உள்ள அடுக்கு சிதைந்த லேட்டரைட் (Laterite) சரளைக் கொண்டுள்ளது, இதில் காலத்தால் பிற்பட்ட கற்கருவிகள் கிடைக்கின்றன.

இந்தியாவிலேயே இவ்விடத்தில்தான் மிக அதிக அளவில் கற்கருவிகள் கிடைத்துள்ளன, சர். ராபர்ட் புரூஸ்புட் இப்படுகையின் கூழாங்கள் மேட்டில் (Boulder Congomerate) கைக் கோடாரிகளோடு மனித எலும்புப் பகுதி ஒன்றினையும் கண்டெடுத்தார்.[10] இங்கு கிடைக்கும் கைக்கோடாரிகள் அளவில் வடமதுரையில் கிடைக்கும் கைக்கோடாரிகளோடு ஒத்துள்ளன. ஆனால்இக்கருவிகள் முன்னவைகளைக் காட்டிலும் கட்டையாகவும் நேர்த்தியாகவும் உள்ளன. இக்கருவிகள் இருபக்கங்களிலும் சில்லுகள் பெயர்க்கப்பட்டு ''செதிள்'' போன்ற தோற்றம் பெற்றுக் காணப்படுகின்றன. கைக்கோடாரிகளோடு கிழிப்பான்களும் (clevers) சுரண்டிகளும் (Scrappers) சில்லு கருவிகளும் (Flake tools) கிடைக்கின்றன.

**குடியம்**

குடியம் என்னும் சிற்றூர் திருவள்ளூருக்கு சுமார் 30 கல் தூரத்தில் உள்ளது. இவ்வூருக்கு அருகில் மனசத்தம்மன் மலைக் குன்றுகளின் அடிவாரத்தில் பழைய கற்கால மனிதன் உருவாக்கி வாழ்ந்த குகைகள் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் 16

குகைகளில் மூன்று குகைகளில்தான் கற்கால மக்கள் வாழ்ந்த தற்கான தடயங்கள் கிடைக்கின்றன. இக்குகைகளின் மேற் பகுதியில் புகை படிந்துள்ளதைக் கொண்டு இங்கு வாழ்ந்த மக்கள் நெருப்பின் பயனை அறிந்திருந்தனர் எனக் கொள்ளலாம்.

இப் பகுதியில் மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறை டாக்டர் கே. டி. பானர்ஜி அவர்கள் தலைமையில் மூன்று இடங்களை அகழ் வாய்வு மேற்கொண்டது.[11] இவற்றுள் மனத்தச்சம்மன் குகையில் ((Ex. GDM-1) செய்யப்பெற்ற அகழ்வாய்வு முக்கியமானது. இங்கு வாழ்ந்த கற்கால மக்கள், கற்கருவிகள் செய்யும் தொழில் நுட்பத்தில் படிப்படியாக வளர்ச்சி பெற்றதை (Stages of technical delelopments in making tools) தெளிவாக அறிய முடிந்தது. இங்குகிடைத்த கற்கருவிகளில் முக்கியமானவை கைக்கோடாரிகள், கிழிப்பான்கள், வெட்டிகள் (choppers), சுரண்டிகள் (Scrappers) என்பனவாம்.

**கற்கருவிகளும் அதன் பயன்களும்**

கோர்த்தலையாற்றுப் பகுதியில் கிடைக்கும் கற்கருவிகள் பெரும்பாலும் படிகக்கல்லால் (Quartzite) செய்யப்பெற்றவை. இவ்வகைக் கற்கள் இப்பகுதியில் கூழாங்கற்கள் வடிவில் மிக அதிக மாகக் கிடைக்கின்றன. இக் கற்களைக் கொண்டு இங்கு வாழ்ந்த மக்கள் பல வகையான கருவிகள் செய்து அவற்றைத் தம் வாழ்வின் பல உபயோகங்களுக்குப் பயன்படுத்திக் கொண்டனர்.

**அபவில்லியன் கைக்கோடாரிகள் (Abbevillian Hand axes)**

வடமதுரையில் கிடைக்கும் கைக்கோடாரிகள் அபவில்லியன் வகையைச் சேர்ந்தவை. இவை பேரிக்காய் போன்ற வடிவமுடைய தாக இருக்கும். ஒருபுறம் கையால் பிடிப்பதற்கு ஏற்றவாறும், மற்றொருபுறம் கூர்மையாகவும் அமைந்திருக்கும். கைப்பிடிக்கும் பாகம் சில்லுகள் பெயர்த்தெடுக்கப்படாமல் இருக்கும். கைப் பிடிக்கும் பாகம் நசுக்குவதற்கும் கூர்மையான பக்கங்கள் விலங்கு களின் தோலை உரிப்பதற்கும் வெட்டுவதற்கும் பயன்பட்டன.

**அசூலியன் கைக்கோடாரிகள் (Achul an hand axes)**

இவ்வகைக் கைகோடாரிகள் முட்டை வடிவினவாக இருக்கும். வடிவில் சிறுத்தும், நடுப்புறம் குவிந்தும் சுற்றிலும் கூர்முனையுடைய வாகவும் காணப்படும். ஈட்டி போன்ற வடிவுள்ள கைக்கோடாரி களும் இவ்வகையைச் சேர்ந்தவையே. இவை, விலங்குகளின்தோலை உரிப்பதற்கும், மரக்கிளைகளை வெட்டுவதற்கும், நிலத்தைத்தோண்டு

வதற்கும் பயன்பட்டன. ஈட்டி போன்ற வடிவுடைய கைக்கோடாரி களை மரப்பிடியின் நுனியில், மரப்பட்டை அல்லது தோல்கொண்டு கட்டி வேல் போலப் பயன்படுத்தலாம்.

**கிழிப்பான்கள் (Cleavers)**

இவை இன்றைய கோடாரி போன்ற தோற்றம் கொண்டவை. மேல் பாகம் தட்டையாகவும். சுற்றிலும் கூர்மையான விளிம்புகள் கொண்டும் இருக்கும். இவற்றை மரப்பிடியில் பொருத்தினால் கோடாரி போன்று மரம் வெட்டப் பயன்படும். விலங்குகளின் தோலை உரிக்கவும் மரப்பட்டைகளைச் சீவவும் இவை பயன்பட்டன.

**சுரண்டிகள் (Scrappers)**

இவை முட்டை வடிவிலான கூர்மையான பக்கங்கள்கொண்டு விளங்கும். நீளமான சுரண்டிகளும் உண்டு. மரப்பட்டைகளை உரிப்பதற்கும், விலங்குகளின் இறைச்சியைச் சுரண்டுவதற்கும் இவை பயன்பட்டன.

**வட்ட உருவக் கருவிகள் (Discoids)**

கூர்மையான விளிம்பினைக்கொண்டு வட்ட வடிவமாக விளங்கும் இக்கருவிகளை வீசியெறிந்து விலங்குகளைக் கொல்லலாம்.

**வாழ்க்கை முறை**

கோர்த்தலையாற்றுப் பகுதியில் வாழ்ந்த பழங் கற்கால மக்கள் நாடோடிகளாகவும், வேட்டையாடும் தொழிலினை மேற்கொண்ட வர்களாகவும் விளங்கினர். இவர்கள் கற்களையும், உறுதியான மரக்கிளைகளையும் கருவிகளாகப் பயன்படுத்தினர். நெருப்பின் பயனை அறிந்திருந்தனர். மரப்பட்டைகளையும், விலங்குகளின் தோலையும் ஆடைகளாகப் பயன்படுத்தினர். மலைக்குகைகளில் வாழ்ந்தனர். இவர்கள் இறந்தவர்களை அடக்கம் செய்யும் வழக் கத்தினை அறிந்து இருக்கவில்லை.

### செங்கை மாவட்டத்தில்<br>பழைய கற்காலக் கருவிகள் கிடைக்குமிடங்கள்

**திருவள்ளூர் வட்டம்**

| | |
|---|---|
| குடியம் | கூனிபாளையம் |
| அத்திரம்பாக்கம் | வடமதுரை |
| கிருஷ்ணாபுரம் | ஊத்துக்கோட்டை |
| ரங்கபுரம் | மதரிமேடு |

| | |
|---|---|
| தேவேந்திரபாக்கம் | புதூர் |
| நம்பாக்கம் | கரடி புதூர் |

**பொன்னேரி வட்டம்**

| | |
|---|---|
| மஞ்சாங்கரனே | எருமைவெட்டி பாளையம் |

**கும்மிடிப்பூண்டி வட்டம்**

| | |
|---|---|
| போந்தவாக்கம் | ரோஷ நகர் |
| மாதர் பாக்கம் | அமரம்பேடு |

**ஸ்ரீபெரும்புதூர் வட்டம்**

| | |
|---|---|
| திருமுல்லைவாயில் | புத்தூர் |
| ஸ்ரீபெரும்புதூர் | |

**காஞ்சிபுரம் வட்டம்**

| | |
|---|---|
| பரந்தூர் | வதியூர் |

**திருத்தணி வட்டம்**

| | |
|---|---|
| நாய்க்கன் பாளையம் | மாவண்டூர் |

## அடிக்குறிப்புகள்

1 டாக்டர் ச. சரவணன், தொல் பழங்காலம், 'நிலப்பரப்பின் தோற்றம்', ப. 20

2 Dr. H. D. Sankalia, Pre and Proto history of India and Pakistan. (1974), p. 15.

3 அ. இராகவன், தொல் பழங்காலம், 'பழைய கற்காலம்,' ப. 151.

4 Ibid, p. 156.

5 V. D. Krishnaswami, changes of Pre historic man near Madras, JMGA, Vol, XIII, (1938) pp. 58-90.

6 H. De. Terra & T. T. Paterson, Studies in Ice Age in India and Associated Human Cultures, pp. 327-30.

7 Dr. H D. Sankalia, Op. cit., p. 66.

8 அ. அப்துல் மஜீத், வடமதுரை, கல்வெட்டு எண். 2, ப. 12.

9 Indian Archaeology, A Review (1964-65), p 21.

10 Robert Bruce Foote, Indian Prehistoric and Protohistoric Antiquities; Notes on their Ages and Distribution (1916), pp. 167-172.

11 Indian Archaeology, A Review (1962-63), p 19.

# செங்கற்பட்டு மாவட்டத்தில் பெருங் கற்காலப் பண்பாடு

து. துளசிராமன்

. கரடுமுரடான கற்கருவிகளைப் பயன்படுத்தி நாடோடிகளாக வாழ்ந்த மக்கள் நாளடைவில் கூரை வேய்ந்த வீடுகளை அமைத்து வாழும் நனி நாகரிகச்சிறப்பை எய்தினர். இக்கால மக்கள் தமது கற்கருவிகளை வழுவழுப்பாகவும் கூர்மையாகவும் செய்யதலைப் பட்டனர். விவசாயத்தின் பயனை அறிந்திருந்தனர். வடஆற்காடு மாவட்டத்திலுள்ள பையம்பள்ளி என்ற இடத்தில் நடைபெற்ற அகழ்வாய்வுகள்[1] இப்புதிய கற்காலப் பண்பாட்டின் சிறப்புகளை அறிந்துக் கொள்ளப் பெரிதும் உதவுகின்றன. இக்காலத்தில்தான் இறந்தவர்களை குழிதோண்டிப் புதைக்கும் மரபு தோன்றியது. இவர்கள் இறந்தவர்களை வீட்டிற்குள்ளேயோ அல்லது வீட்டிற்கு அருகாமையிலோ புதைத்தனர்.

புதிய கற்காலத்திற்குப்பின் தோன்றிய உலோக கால மக்கள் இறந்தவர்களைப் புதைக்கும் போது பெருங்கற்களைப் பயன்படுத்தி னர். பெருங்கற்களைப் பயன்படுத்தி உண்டாக்கப்பட்ட ஈமச் சின்னங்களுக்குப்-பெருங்கற் சின்னங்கள் (Megalithic monuments) என்று பெயர். இக்கால மக்கள் இரும்பை மிக அதிக அளவில் பயன்படுத்தியதால் இக்காலம் இரும்புக்காலம் (Iron Age) எனவும் அழைக்கப் பெறுகிறது.

பெருங்கற் சின்னங்கள் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. இவற்றுள் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள பெருங்கற் சின்னங்களில்தான் முறையான ஆய்வுகள் மேற் கொள்ளப்பட்டன. இம்மாவட்டத்தின் தெற்குப் பகுதியில் பெரும் பேர், சானூர், குன்னத்தூர் ஆகிய இடங்களிலும், வடக்குப்பகுதி யில் அமிர்தமங்கலம் என்னும் ஊரிலும் அகழ்வாய்வுகள் நடத்தப் பட்டுள்ளன.

## செங்கற்பட்டு மாவட்டத்தில் காணப்படும் பெருங்கற் சின்னவகைகள்

**கல்திட்டை (Dolmonoid cist)**

இவை தரைமட்டத்திற்கு மேல் அமைக்கப்பட்டன. இயற்கையாகக் கிடைக்கும் பெரிய கருங்கற்களைக் கொண்டு நான்கு புறங்களிலும் சுவர்போல் அமைத்து ஒரு சதுரமான அல்லது நீண்ட சதுரமான அறை உண்டாக்கப்பட்டது. இக்குழிவறையின் அடிப்பகுதியைக் கற்களைக் கொண்டு தரை போல் அமைத்து அதன் மேல் ஈமப் பொருட்கள் வைக்கப்பட்டன. பிறகு மேலே ஒரு பட்டைக் கல்லைக் கொண்டோ அல்லது இரண்டு மூன்று பட்டைக் கற்களைக் கொண்டோ அறை மூடப்பட்டது. கல்லறைச் சுவர்களுக்கு ஆதரவாகச் சுற்றிலும் சிறு சுவர்கள் எழுப்பப்பட்டன, மண், சிறு கற்கள் அல்லது கூழாங்கற்கள் ஆகியவற்றைக் கொண்டு அறை மூடி மறைக்கப் பட்டது. இதனல் ஒரு திட்டு அல்லது குவை தரை மட்டத்திலிருந்து எழும்பியது. குவை சிதையாமல் இருக்க சுற்றிலும் பெரிய உருண்டைக் கற்கள் வட்டமாக வைக்கப்பட்டன. இவ்வகை ஈமச்சின்னங்கள் சானூர், செங்குன்றம், திருவேலங்காடு பெரும்பேர் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**கல்பதுக்கை (Slabbed Cist)**

பூமியைச் சிறிது தோண்டி அதன் நாற்புறமும் நான்கு பலகைக் கற்களை நிறுத்தி ஒரு அறை உருவாக்கப்பட்டது. இப்பலகைக் கற்கள் சாயாமல் இருக்க ஒரு கல் இன்னொரு கல்லைத் தாங்கும் வகையில் ஒவ்வொரு கல்லின் முனையும் ஒரு பக்கம் நீட்டி நிறுத்தப் பட்டது. இந்த அமைப்பு மேலேயிருந்து பார்ப்பதற்கு ''ஸ்வஸ்திகா'' (swastika) போன்று தோற்றமளிக்கும். இவ்வறையில் ஈமப் பொருள்கள் இட்ட பிறகு மேலே ஒரு பெரிய பலகைக் கல்லாலான மூடி கவிக்கப்பட்டது. இதன் மேல் மண் அல்லது கூழாங்கற்கள் கொண்டு ஒரு மேடு எழுப்பப்பட்டது. சில இடங்களில் இம்மேட்டைச் சுற்றிலும் கல்வட்டங்கள் காணப்படுகின்றன. செங்கற்பட்டு மாவட்டத்தில் அமிர்தமங்கலம் என்னும் ஊரில் இவ்வகைச் சின்னங்கள் கல்வட்டங்களின்றிக் காணப்படுகின்றன.

**கற்கிடை (Cairm circle):**

ஆழமான குழியைத் தோண்டி அதனுள் ஈமத்தாழி அல்லது ஈமப்பேழை ஆகியவற்ருேடு ஈமப்பொருட்களை வைத்து அதன் மீது மண் அல்லது கற்களைக் குவித்து வைப்பார்கள். இந்த ஈமக்குழி

யைச்சுற்றிலும் உருண்டையான கற்களை வட்டமாக வைத்து அமைக்கப்படும் ஈமச் சின்னத்தையே கற்கிடை அல்லது கல்வட்டம் என்று அழைப்பர். இவை குன்னத்தூர், குன்னவாக்கம், சானூர், பல்லாவரம், பெரும்பேர் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**ஈமத்தாழி (Urn)**

குவிந்த அடியும், அகன்ற வாயும் கொண்டு மிகப் பெரிய அள வினதாகத் தோற்றமளிக்கும் சுடு மண்ணாலான ஈமத்தாழிகள் மண் ணுக்கடியில் புதைக்கப்பட்டுக் காணப்படுகின்றன. இவ்வகைத் தாழிகள் ஈமச் சடங்குக்காக, ஆழமான குழியினுள் ஈமப் பொருள் களுடன் வைத்துப் புதைக்கப் பட்டன. அமிர்த மங்கலத்தில் ஈமத் தாழிகள் அதிக அளவில் காணப்படுகின்றன.

**ஈமப்பேழை (Sarcophagi)**

இவை சுடுமண்ணால் செய்யப் பெற்று நீண்ட பெட்டியைப் போன்ற தோற்றம் கொண்டவை. இப்பேழைகள் இரண்டு பகுதி களாக இருக்கும். கீழ்ப்பகுதி பல கால்களுடன் காணப்படும். மூடி யாக விளங்கும் மேல் பகுதி ஆடு போன்ற விலங்குகளின் உருவங் களைக் கொண்டிருக்கும். ஆழமான குழியினுள் ஈமப்பேழையுடன் ஈமப்பொருட்களும் வைத்துப் புதைக்கப்பட்டன. இவை குன்னத் தூர். பெரும்பேர், சானூர் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**அகழ்வாய்வு செய்யப் பெற்ற பெருங்கற்சின்ன இடங்கள்**

செங்கற்பட்டு மாவட்டத்தில் அகழ்வாய்வு செய்யப்பெற்ற பெருங்கற் சின்ன இடங்களை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். தென் பகுதியில் காணப்படும் பெருங்கற் சின்னங்கள் இயற்கையாகக் கிடைக்கும் பெரிய கருங்கற்பாறைகளைக் கொண்டு அமைக்கப் பட்டவை. வட பகுதியில் காணப்படும் பெருங்கற் சின்னங்கள் செதுக்குவதற்கு ஏற்ற தன்மையுடைய ''லேட்டரைட்''கற்களைக் கொண்டு எழுப்பப்பட்டவை.

**பெரும்பேர்**

இவ்வூர் சென்னை-திருச்சி நெடுஞ்சாலையில் செங்கற்பட்டிலி ருந்து 40 கி.மீ. தூரத்திலுள்ளது. பெரும்பேர்கண்டிகை என்ற மற்றொருபெயரும் இவ்வூருக்கு உண்டு. தேவர்களுக்கும், அசுரர் களுக்கும் இங்கு பெரும்போர் நடந்ததாலேயே இவ்வூருக்குப் பெரும் போர் என்னும் பெயர் வழங்கியது; இப்பெயர் நாளடைவில் மரு விப் பெரும்பேர் என்றுயீற்று என்பது மரபு வழிச் செய்தி. இவ்

ஊரின் தென்புறத்தே குன்றும், அதை அடுத்துப் பெரிய ஏரி ஒன்றும் உள்ளன. இப்பகுதியில்தான் பெருங்கற் சின்னங்கள் காணப்படுகின்றன.

மத்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் 1904-1908 ஆண்டுகளுக்கிடையில் அலெக்சாண்டர்ரே தலைமையில் இங்கு அகழ்வாய்வுகளை மேற்கொண்டனர். இங்கு காணப்படும் கல்திட்டை வகை பெருங்கற் சின்னங்களைச் சுற்றிலும் கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இங்கு அகழ்ந்தெடுக்கப் பெற்ற ஈமச்சின்னங்களில் ஈமத்தாழிகளும், ஈமப் பேழையும் கிடைத்துள்ளன. ஈமப்பேழை பல கால்களைக் கொண்டு நீண்ட வடிவினதாகக் காணப்படுகிறது. ஈமத்தாழிகளில் மூன்று கால்களையுடைய சாடி (Three legged jar) முக்கியமானதாகும். ஈதன்றி, கருப்பு சிவப்பு வண்ணக்கலங்கள், இரும்பினால் செய்யப் பெற்ற கருவிகள், சங்கு அணிகள், பலவகைக் கற்களாலான மணிகள் போன்றவையும் கிடைத்துள்ளன. இவற்றுள் சங்கினால் செய்யப்பெற்ற அலங்காரக்காதணிகள், மணிகளால் கோக்கப்பட்ட கழுத்தணிகள் (Pendents of beads) போன்றவை குறிக்கத் தகுந்தவை.[2]

**சானூர்**

இவ்வூர் சென்னை-திருச்சி நெடுஞ்சாலையில் மாமண்டூருக்கு 11 கி. மீ. தூரத்தில் உள்ளது. ஊருக்குப் புறம்பே விளைச்சலுக்குத் தகுதியில்லாத நிலத்தில் பெருங்கற்சின்னங்கள் காணப்படுகின்றன. இவ்விடத்திற்கு அருகில் பெரிய ஏரி ஒன்று உள்ளது. மத்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறை 1950-52 ஆண்டுகளுக்கிடையில் திரு. வி. டி. கிருஷ்ணசாமி மற்றும் பி. சரண் ஆகியோர் தலைமையில் இப்பகுதியில் அகழ்வாய்வு செய்தது.[3] இங்கு காணப்படும் கல்திட்டைகளைச்சுற்றிலும் கற்கிடை உள்ளது. சில பெருங்கற் சின்னங்களில் கற்குவைகளுக்குப் (cairns)பதிலாகத் தொப்பிக்கல் (capstone) காணப்படுகிறது. ஐந்து ஈமச்சின்னங்களை அகழ்ந்து பார்த்ததில் கால்களுடைய ஈமப்பேழைகள், கருப்பு சிவப்பு வண்ண மட்கலங்கள், இரும்பு ஆயுதங்கள், மணிகள், சுடுமண் மணிகள், சங்கு அணிகள் போன்றவை கிடைத்தன. இவற்றுள் இரும்பினால் செய்யப்பட்ட குதிரைக் கடிவாளங்கள், சங்குக்காதணிகள், சுடுமண் பாவைகள் போன்றவை குறிப்பிடத் தக்கவை. இங்கு காணப்படும் பெருங்கற்சின்னங்கள் கி. மு. 300 ஆண்டு அளவில் தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம்.

**குன்னத்தூர்**

இவ்வூர் சைதாப்பேட்டை வட்டத்தில், பல்லாவரத்துக்குச் சுமார் 25 கி. மீ தூரத்திலுள்ளது. இவ்வூர்க் குன்றின் அடிவாரத்தில்

பெருங்கற் சின்னங்கள் காணப்படுகின்றன. இதனை ஒட்டிச் சிற்ருறு ஒன்றும் பாய்கிறது. மத்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையினர் திரு வி. டி.. கிருஷ்ணசாமி மற்றும் பி. சரண் ஆகியோர் மேற்பார்வையின் கீழ் 1955-584ஆம் ஆண்டுகளுக்கிடையில் இவ்விடத்தில் ஒன்பது ஈமச்சின்னங்களை அகழ்ந்து பார்த்தனர். கல்திட்டை வகை பெருங்கற் சின்னங்களைச் சுற்றிலும் கற்கிடை காணப்படுகிறது, கற்குவைக்குப் பதிலாகத் தொப்பிக்கல் கொண்டுள்ள ஒரு ஈமச்சின்னத்தை (Megalith III) அகழ்ந்ததில், பல கால்களுடைய ஈமப்பேழை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. சில ஈமச்சின்னங்களில் எலும்புகள் ஏதும் காணப்படவில்லை. வழக்கமாகக் கிடைக்கும் கருப்பு சிவப்பு வண்ணமட்கலங்களோடு இரும்பாலான போர்க்கருவிகள், குதிரைக் கடிவாளங்கள், செப்புக் கிண்ணங்கள், மணிகள், சுடுமண் மணிகள் ஆகிய பொருட்களும் கிடைத்துள்ளன. நடுவிலுள்ள இடுகுழியைச் சுற்றிலும் மூன்று ஈமப்பேழைகள் ஒரே கல்வட்டத்திற்குள் இங்கு காணப்படுவது குறிக்கத் தகுந்த செய்தியாகும். நடுவிலுள்ள ஈமப் பேழை அளவில் பெரியதாகவும், மூன்று வரிசைகளில் 21 கால்களை உடையதாகவும் உள்ளது. மற்றவை அளவில் சிறியனவாகவும் எட்டு அல்லது ஆறு கால்களைக் கொண்டும் விளங்குகின்றன.

இம்மக்களின் வாழ்விடத்தைப்பற்றி (habitational site) அறிந்து கொள்ள இரண்டு இடங்களில் (KNT-1, 2) அகழ்வாய்வுகள் செய்யப்பட்டன. இந்த அகழ்வாய்வின் பெருங்கற்காலப் படிவடுக்குகளில் செங்கல் சுவர்களும், சுடுமண்ணுல் செய்யப் பெற்ற கழிவுநீர் குழாய்களும் காணப்பட்டன. பலவகை கருப்பு சிவப்பு வண்ண மட்கலங்களோடு சுடுமண்ணுலான புகைபிடிக்கும்குழல்கள் (smoking pipes) படிகக்கல், கண்ணுடி, பவழம், கார்னிலியன் போன்றவற்ருலான மணிகள், கண்ணுடி வளையல்கள், சுடுமண் பாவைகள், விலங்கு உருவம் பொறித்த சுடுமண் முத்திரைகள் போன்ற பொருட்களும் கிடைத்துள்ளன. இவ்வகழ்வாய்வில் உறை கிணறு ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டது.

**அமிர்த மங்கலம்**

இவ்வூர் கும்மிடிப்பூண்டி வட்டத்தில் கவரைப் பேட்டைக்கு மேற்கே சுமார் 10 கி. மீ தூரத்தில் உள்ளது. எல்லா இடங்களைப் போலவே இங்கும் பெருங்கற் சின்னங்கள் காணப்படும் இடத்திற்கு அருகில் ஏரி ஒன்றும், நீரோடைகளும் காணப்படுகின்றன. இவ்விடத்திற்கும், மற்ற பெருங்கற்சின்ன இடங்களுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு உள்ளது. அதாவது இங்கு காணப்படும் ஈமச்சின்னங்ளில் மற்ற இடங்களைப் போன்று கல்வட்டங்கள் காணப்பட

வில்லை. ஏறக்குறைய 250 ஈமச்சின்னங்கள் இங்கு காணப்படு கின்றன.

இங்கு 1954-55[5] ஆண்டுகளில் திரு. என். ஆர். பானர்ஜி அவர்கள் மேற்பார்வையில் மத்தியத்தொல்பொருள் ஆய்வுத்துறையினர் ஐந்து ஈமச்சின்னங்களில் அகழ்வாராய்ச்சி நடத்தி, குவிந்த அடியும், உருண்டையான நடுப்பகுதியும், அகன்ற வாயும் கொண்டு வெளிர் சிவப்பு நிறத்தில் காணப்படும் ஈமத்தாழிகளைக் கண்டுபிடித்துள்ளனர். இந்த ஈமத்தாழிகளில் மண்டையோடுகள், நீண்டஎலும்புகள், கருப்பு சிவப்பு வண்ண மட்கலங்கள், இரும்புப் பொருட்கள் போன்றவை காணப்படுகின்றன. சில ஈமத்தாழிகளின் மேற்புறம் வட்ட வடிவமான மூடிகள் (Dome shapped lid) கொண்டு மூடப்பட்டுள்ளன.

**வாழ்க்கை நிலை**

இக்கால மக்கள் நல்ல நாகரிக வாழ்க்கையை மேற்கொண்டனர் என்பதற்குப் பெருங்கற் சின்னங்களிலிருந்து கிடைக்கும் பொருட்கள் சான்று பகர்கின்றன. இம்மக்கள் கற்கால மக்களைப் போலன்றிப் பல துறைகளில் முன்னேற்றமடைந்து வாழ்ந்தனர்.

**வாழ்விடங்கள்**

பெருங்கற்கால மக்களின் வாழ்விடங்களைப் பற்றி அதிகமாக அறிந்துக் கொள்ளச் சான்றுகள் இல்லை. எனினும் குன்னத்தூர் போன்ற இடங்களில் நடந்த அகழ்வாய்வுகளின் மூலம் இக்கால மக்கள் சுட்ட செங்கற்களாலான வீடுகளைக்கட்டி வாழ்ந்தனர் என்பது அறியப்படுகிறது. இவர்கள் சுடுமண்ணால் செய்யப் பெற்ற குழாய்கள் மூலம் கழிவு நீரை வெளியேற்றினர்கள். குடிநீருக்காக வீடுகளின் அண்மையில் உறைகிணறுகளைத் தோண்டினர். தென் ஆற்காடு மாவட்டத்திலுள்ள செங்கமேடு என்னும் இடத்தில் நடந்த அகழ்வாய்வில் பெருங்கற்கால உறைகிணறுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பையம்பள்ளி அகழ்வாய்வுகள் இம்மக்கள் கூரைவேய்ந்த வீடுகளில் வாழ்ந்தனர் என்பதைக் காட்டுகின்றன.

**தொழில்கள்:**

பெருங்கற்கால மக்கள் தங்கள் வாழ்வின் பல்வேறு வசதிகளுக்காகப் பல தொழில்களைக் கற்று, அவற்றைத் திறம்படச் செய்துள்ளனர். அகழ்வாய்வுகள் மேற்கொள்ளப்பட்ட ஈமச்சின்னங்களில் மட்கலங்கள், இரும்பாலான பொருட்கள் போன்ற

வைதான் அதிக அளவில் கிடைக்கின்றன. இதிலிருந்து மட்கலத் தொழிலும், இரும்புப் பொருட்கள் செய்யும் தொழிலும்தான் இக்கால மக்களின் முக்கியத் தொழில்களாக இருந்திருக்கின்றன என்று தெரிகிறது.

### மட்கலத் தொழில்

இம் மக்கள் மட்கலங்களை அதிக அளவில் பயன்படுத்தியிருக்கின்றனர். இவர்கள் பயன்படுத்திய மட்கலங்கள் எல்லா வகையான வீட்டு வேலைகளுக்கும் ஏற்றவையாக இருந்தன. சாடிகள் போன்ற மட்கலங்களைத் தானியங்கள் சேமித்துவைக்கவும், இறந்தவர்களைப் புதைக்கவும் பயன்படுத்தினர். மட்கலங்கள் செய்யும் தொழிலை இவர்கள் முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். இக் காலத்தில் இத்தொழில் மிக்க வளர்ச்சியுற்றுக் காணப் பட்டது. அகழ்ந்தெடுக்கப்பட்ட ஈமச்சின்னங்களில் காணப்படும் மட்கலங்கள் நான்கு வகையானவை. அவை கறுப்பு சிவப்பு வண்ண மட்கலங்கள் (Black and Red ware) கறுப்பு மட்கலங்கள் (Black ware) சிவப்பு மட்கலம் (Redware), செம்பழுப்புப் பூச்சு மட்கலங்கள் (Russet-Coated ware) எனப்படும். கறுப்பு சிவப்பு வண்ணமட்கலங்கள் சமையல் வேலைகளுக்குப் பயன்பட்டன. சிவப்பு வண்ண மட்கலங்கள் பெரிய உருவங்களைக் கொண்டவை. இவை பெரும்பாலும் ஈமத்தாழிகளாகவும் தானியங்கள் அல்லது தண்ணீர் சேமித்து வைக்கவும் பயன்பட்டன. இம் மட்கலங்களின் கழுத்துப் பகுதியில் குச்சிகளைக் கொண்டு புள்ளிகள் குத்திச் செய்யப்பட்ட சித்திர வேலைப்பாடுகள் காணப்படுகின்றன.

### கருமான் தொழில்

பெருங்கற் சின்னங்களில், மட்கலங்களுக்கு அடுத்தபடியாகப் பல இரும்புப் பொருட்கள் கிடைக்கின்றன. இதிலிருந்து இம் மக்கள் இரும்புத் தாதுக்களைச் சேகரித்து அவைகளை உருக்கி வார்த்து அதன் மூலம் தம் வாழ்க்கைக்கு தேவையான கருவிகளைச் செய்து வாழ்ந்தனர் எனத் தெரிகிறது.[6] இக் கருவிகள் பெரும்பாலும் போர் அல்லது வேட்டையாடுவதற்குப் பயன்படக்கூடிய வாள், குத்துவாள், வேல்கள், முள்கொண்ட அம்புமுனைகள், ஈட்டிகள் போன்றவைகளாகக் காணப்படுகின்றன. ஈதன்றி ஏராளமான வேளான்மைக் கருவிகளும் இரும்பினால் செய்யப் பட்டன. இவற்றுள் மண்வெட்டிகள், கொத்துகள், கோடாரிகள், அரிவாள்கள், கடப்பாறைகள் போன்றவை குறிப்பிடத்தக்கவை. குதிரைக் கடிவாளங்களும் கிடைத்துள்ளன. இக்கால மக்கள்

தங்களுடைய எல்லாத் தொழில்களுக்கும் இரும்பைப் பயன்படுத்தினார்கள் எனத் தெரிகிறது. இவர்களின் பெருமுன்னேற்றத்திற்குக் காரணமே இவ்விரும்புத் தொழில்தான் எனலாம்.[7]

**வேளாண்மைத் தொழில்**

வேளாண்மைத் தொழில் நாகரிக வளர்ச்சிக்கு மிகவும் அடிப்படையான தொழிலாகும். புதிய கற்காலத்தில் துவக்க நிலையில் இருந்த வேளாண்மை பெருங்கற்காலத்தில் நன்றாக வேரூன்றிப் பரவியது. செங்கற்பட்டு மாவட்டத்தில் இச்சின்னங்கள் உள்ள எல்லா இடங்களுக்கு அருகிலும் ஏரிகள் அல்லது நீர்த்தேக்கங்கள் காணப்படுகின்றன. இவற்றை முதலில் உருவாக்கியவர்கள் பெருங்கற்கால மக்கள்தான் எனலாம். இம் மக்கள் நீரைத் தேக்கிவைத்து அவற்றை வேளாண்மைத் தொழிலுக்குப் பெரிதும் பயன்படுத்தினர். இத் தொழிலுக்கு இன்றியமையாத மண்வெட்டிகள், கொத்துகள், பட்டையான கோடாரிகள், கடப்பாறைகள், அரிவாள்கள் போன்ற கருவிகள் இரும்பினால் செய்யப்பட்டன. குன்னத்தூரில் அகழ்வு செய்யப் பெற்ற ஒரு ஈமச்சின்னத்தில் உமி நிரம்பிய செப்புக் கிண்ணம் கிடைத்துள்ளது. இதிலிருந்து இம்மக்கள் வேளாண்மை மூலம் கிடைக்கும் தானியங்களைச் சேமித்து வைக்கும் பழக்கத்தினை மேற்கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது. பருத்தியைப் பயிரிட்டார்கள் என்றும் அறியப்படுகிறது.

**வேட்டையாடுதல்:**

வேளாண்மைத் தொழிலோடு இவர்கள் வேட்டையாடும் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர். போர் செய்யப் பயன்பட்ட கருவிகள் வேட்டையாடுவதற்கும் பயன்பட்டன. இவர்கள் என்ன விலங்குகளை வேட்டையாடினர் என அறிய இயலவில்லை. ஓநாயின் எலும்புகள் சில ஈமச்சின்னங்களில் காணப்படுகின்றன. இரும்பாலான தூண்டில்கள் கிடைப்பதைக் கொண்டு இவர்கள் மீன் பிடிக்கும் தொழிலினையும் மேற்கொண்டிருந்தனர் என அறியலாம். மாடுகள், எருமைகள், ஆடுகள் போன்றவை வீட்டு விலங்குகளாக இருந்தன. குதிரையையும் வளர்த்தனர்.

**போர்த்தொழில்**

இரும்பினால் செய்யப் பெற்ற பல போர்க்கருவிகள் கிடைப்பதைக் கொண்டு, பெருங்கற்கால மக்கள் மிகுதியாகப் போர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தனர் என அறியலாம். போரில் இவர்கள் குதிரைகளைப் பயன்படுத்தியிருக்கக் கூடும்.

**சமூக வாழ்க்கை**

பெருங்கற்கால மக்கள் ஊர்களை அமைத்துக் கூட்டமாக வாழ்ந்தனர். கூரை வீடுகளேயன்றி செங்கற்களாலான கட்டிடங்களைக் கட்டி வாழும் நாகரிக வாழ்க்கையையும் மேற்கொண்டிருந்தனர். வேளாண்மை முக்கிய தொழிலாக இருந்திருக்கிறது. ஏரிகள், நீர்த்தேக்கங்கள் போன்றவற்றைத் தோண்டுவதற்கு நிறைய மனித உழைப்புத் தேவை. பெருங்கற்காலக்கூட்டுச் சமுதாய வாழ்க்கை இத்தகைய உழைப்புக்கு அடிகோலியது. இம் மக்கள் சமூகத்தின் பல்வேறு தேவைகளுக்கு வேண்டிய பொருட்களை உருவாக்கிக் கொடுக்கும் தொழில்முறைகளை அறிந்திருந்தனர். ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் மற்றொரு கூட்டத்தின்மீது அடிக்கடி போர் தொடுத்தனர். எனவே, போர் இவர்கள் வாழ்க்கையில் முக்கிய பங்கு வகித்தது. பருத்தியினுல் நெய்யப் பெற்ற ஆடைகளை உடுத்தினர். பலவகை விலையுயர்ந்த கற்களால் செய்யப் பெற்ற மணிகளாலான அணிகளை அணிந்தனர். சங்கு வளையல்களைப் பூண்டனர்.

**சமயம்**

இறப்பிற்குபின் உள்ள வாழ்க்கையில் பெருங்கற்கால மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இவர்கள் எழுப்பிய ஈமச் சின்னங்கள் இதைப் புலப்படுத்துகின்றன. ஈமச்சின்னங்களின் கிழக்குப் புறத்தில் காணப்படும் துளை (porthole) ஞாயிறு வழிபாட்டைக் குறிக்கலாம். மேலும் சிவ வழிபாடு. முருக வழிபாடு முதலியனவும் இருந்திருக்கின்றன எனக் கருதப்படுகிறது.

**ஈமச்சடங்கு**

இறந்தோரைத் தீயிலிடும் பழக்கம் இவர்களிடையே இல்லையெனத் தெரிகிறது. பெரும்பாலும், இவர்கள் இறந்தவர்களின் சடலத்தைத் திறந்த வெளியில் கிடத்திவிட்டு அதனுடைய சதைப் பற்று விலங்குகளாலும், பறவைகளாலும், இயற்கையாலும் அழிக்கப் பட்டபிறகு எஞ்சியுள்ள எலும்புக் கூட்டை மட்டும் எடுத்துப் பெருங்கற் சின்னங்களில் புதைத்தனர். இது போன்ற பழக்கத்தை ''பார்ஸி'' இனத்தவர் இன்றும் கடைப்பிடிப்பது குறிக்கத் தக்கது.[8]

**காலம்**

இப்பெருங்கற்காலப் பண்பாடு கி.மு. 1000-ல் தொடங்கி கி.பி, 200 வரை நிலவியது என்று அறிஞர்கள் கருதுகிறுர்கள்.[9] இச்சின்னங்களை உருவாக்கிய மக்கள் யார் அவர்கள் பேசியமொழி

என்ன என்பது குறித்துப்பலகருத்துகள் நிலவுகின்றன. ஒருசாரார் இவர்கள் திராவிடர்கள் என்றும், அஸ்கோ பர்போலா (Asko parpola)[10] போன்றவர்கள் இவர்கள் ஆரிய இனத்தைச் சேர்ந்த வர்கள் என்றும் பலவாறுகக் கருத்துரைக்கிறுர்கள். இது குறித்து மேலும் நடத்தும் ஆய்வுகள் தெளிவைத்தரலாம்.

## அடிக்குறிப்புகள்

1 Indian Archaeology, A Review 1964-65, pp. 22-23.

2 Alexander Rea, Catlogue of the prehistoric Antiquities from Adichanallur and Perumbair (1915), pp. 1-49.

3 Indian Archaeology, A Review (1959) pp. 4-42.

4 Indian Archaeology, A Review (1955-58) pp. 23, 31-34, 37-38.

5 Indian Archaeology, A Review 1954-55 pp. 20-22.

6 அ. அப்துல் மஜீத், 'பெருங்கற்சின்னங்கள்,' கொங்கு 1975, ப. 210.

7 டாக்டர். இரா. நாகசாமி, தொல் பழங்காலம் 'பெருங்கல்காலம்' (1975) ப. 221.

8 டாக்டர். இரா. நாகசாமி, கையேடு, 'ஈமச்சின்னங்கள்,' ப. 109.

9 டாக்டர். இரா. நாகசாமி, தொல்பழங்காலம், 'பெருங்கல்காலம்' ப. 237.

10 Asko Parpola, 'Arguments for an Aryan origin of the South Indian megaliths, p. 1.

# செங்கை மாவட்டத்தில் தோன்றிய பெரியார்கள்

## I சைவப் பெரியார்கள்

| எண் | பெயர் | குலம் | ஊர் | வட்டம் |
|---|---|---|---|---|
| 1. | கண்ணப்பர் | வேடர் | உடுப்பூர் | திருகாளத்தி (ஆந்திர மாநிலம்) |
| 2. | கலியர் | செக்கர் | திருவொற்றியூர் | சைதாப்பேட்டை |
| 3. | திருக்குறிப்புத் தொண்டர் | ஏகாலியர் | காஞ்சிபுரம் | காஞ்சிபுரம் |
| 4. | பூசலார் | அந்தணர் | திருநின்றவூர் | திருவள்ளூர் |
| 5. | மூர்க்கர் | வேளாளர் | திருவேற்காடு | ஸ்ரீபெரும்பூதூர் |
| 6. | வாயிலார் | வேளாளர் | திருமயிலாப்பூர் | சென்னை |

## II வைணவப் பெரியார்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இராமநுஜர் | அந்தணர் | ஸ்ரீபெரும்பூதூர் | ஸ்ரீபெரும்பூதூர் |
| 2. | கூரத்தாழ்வார் | பட்டர் | கூரம் | காஞ்சிபுரம் |
| 3. | திருக்கச்சி நம்பி | வணிகர் | பூவிருந்தவல்லி | ஸ்ரீபெரும்பூதூர் |
| 4. | திருமழிசை ஆழ்வார் | | திருமழிசை | ஸ்ரீபெரும்பூதூர் |
| 5. | பொய்கை ஆழ்வார் | | திருவெஃகா (காஞ்சி) | காஞ்சிபுரம் |
| 6. | பூதத்தாழ்வார் | | மாமல்லபுரம் | செங்கல்பட்டு |
| 7. | பேயாழ்வார் | | மயிலாப்பூர் | சென்னை |

## செங்கை மாவட்டப் பாடல்பெற்ற சிவத்தலங்கள்

| ஊர் (வட்டம்) | இறைவன் பெயர் | பாடல் எண் |
|---|---|---|
| 1 அச்சிறுபாக்கம் (செங்) | எமையாட்சீசர் | 831-841 |
| 2 ஆலங்காடு (திருத்தணி) | ஊர்த்தவ தாண்டவப் பெருமான் | 2497-2506 |
| 3 இடைச்சுரம் (மதுரா) | இடைச்சுரநாதர் | 842-852 |
| 4 இலம்பையங் கோட்டூர் (திருவ) | சந்திரசேகரர் | 820-830 |
| 5 ஊறல் (திருத்) | உமாபதிஸ்வரர் | 1143-1151 |
| 6 ஒற்றியூர் (சைதாப்) | மாணிக்க தியாகர் | 3405-3415 |
| 7 ஓணகாந்தன் தளி (காஞ்) | ஓணகாந்தேசுரர் | 7266-7275 |
| 8 கச்சி அனேக தங்காபதம் (காஞ்) | அனேகதங்காபதேசுரர் | 7318-7327 |
| 9 கச்சி ஏகம்பம் (காஞ்) | ஏகாம்பரநாதர் | 1427-1436 |
| 10 கச்சி நெறிக் காரைக்காடு (காஞ்) | திருக்காளீசுவரர் | 3492-3502 |
| 11 கச்சி மேற்றளி (காஞ்) | திருமேற்றளிநாதர் | 4582-4591 |
| 12 கச்சூர் (காஞ்) | விருந்திட்ட ஈசன் | 7639-7648 |
| 13 கழுக்குன்றம் (செங்) | மலைமந்தீசர் | 1112-1121 |
| 14 கள்ளில் (திருவ) | சிவாநந்தேசுரர் | 1282-1292 |
| 15 குரங்கணில்முட்டம்(காஞ்) | வாலீசர் | 1327-1337 |
| 16 பாசூர் (திருவ) | பாசூர் நாதர் | 2113-2123 |
| 17 மயிலாப்பூர் (சென்னை) | கபாலீசுரர் | 1971-1981 |
| 18 மாகறல் (காஞ்) | அடைக்கலங்காத்த நாதர் | 3570-3580 |
| 19 மாற்பேறு (திருத்) | மால்வணங்கீசர் | 591-600<br>1228-1237<br>5184-5185<br>5820-5837 |
| 20 வட முல்லைவாயில் (திருவ) | மாசிலாமணிநாதர் | 7038-7047<br>7922-7932 |
| 21 வலிதாயம் (சைதாப்) | வலிதாய நாதர் | 23-33,<br>1502-1512 |
| 22 வான்மியூர் (சைதாப்) | மருந்தீசர் | 3384-3393<br>6038-6047 |
| 23 விற்கோலம் (ஸ்ரீ பெரும) | திரிபுராந்தகர் | 3042-3051 |
| 24 வெண்பாக்கம் (திருவ) | வெண்பாக்க நாதர் | 8126-8136 |
| 25 வெஃகா (காஞ்) | சொன்ன வண்ணம் செய்த பெருமாள் | |
| 26 வேற்காடு (ஸ்ரீபெரும்) | வேற்காட்டீசர் | 612-622,273 |

## மங்களா சாஸனம் பெற்ற செங்கை மாவட்ட வைணவத் தலங்கள்

| ஊர் (வட்டம்) | இறைவன் பெயர் | பாடல் எண் |
|---|---|---|
| 1 திரு அட்டபுயகரம் (காஞ்) | ஆதிகேசவப் பெருமாள் | 1118-1127 2674-2380 |
| 2 திரு அத்தியூர்(காஞ்) | வரதராஜபெருமாள் | 1521, 2050, 2060, 2066, 206-77, 2307 |
| 3 திருஅல்லிக்கேணி (சென்) | பார்த்தசாரதி | மங் 1068-1077 |
| 4 திருஇடவெந்தை (சைதா) | நித்ய கல்யாணி | பே-2290 மழி 2416 மங் 1021, 1108-1117, 2673, 2674 |
| 5 திருஊரகம் (காஞ்) | உலகளந்தபெருமாள் | மழி- 810-815, மங்-2059, 206', 2673 2674 |
| 6 திருஎவ்வுள் (திருவ) | வீரராகவப் பெருமாள் | மங் 1058-1067 2674, 2417 |
| 7 திருக்கடல்மல்லை (செங்) | தலசயனப்பெருமாள் ஜலசயனப் பெருமாள் | மங் 1088-1107, 1195-1551, 2050 2060, 2673 (73) 2674(120), பூ 2257 |
| 8 திருக்கள்வனூர் (காஞ்) | ஆதிவராகப் பெருமாள் | மங்-2059 |
| 9 திருக்காரகம் (காஞ்) | கருணாகரன் | மங்-2059 |
| 10 திருக்கார்வானம்(கா) | கள்வர் | மங்-2059 |
| 11 திருத்தண்கா (காஞ்) | விளங்கொளி பெருமாள் | மங்-1849, 65 |
| 12 திருநிலாத் திங்கள் துண்டம் (காஞ்) | திருநிலாத்திங்கள் துண்டத்தான் | மங்-2059 |
| 13 திருநின்றவூர்(திருவ) | பக்தவச்சலன் | மங் 1089, 1642; |
| 14 திருநீரகம்(காஞ்) | ஜகதீசன் | மங் 2059 |

| ஊர் (வட்டம்) | இறைவன் பெயர் | பாடல் எண் |
|---|---|---|
| 15 திருநீர்மலை(சைதா) | நீர் வண்ணன் | மங் 1078-87, 1115, 1521, 1554, 1660, 1765, 1848, 2073 (33), 2674 (130) பூ-2227 |
| 16 திருப்பரமேச்சுர விண்ணகரம்(காஞ்) | பரமபத நாதன் | மங் 1128-1137 |
| 17 திருப்பவளவண்ணம் (காஞ்) | பவளவண்ணன் | மங் 2060 |
| 18 திருப்பாடகம்(காஞ்) | பாண்டவ தூதர் | மழி-814, 15 மங் 1541, 2674 பூ-2275, பே-2311 |
| 19 திருப்புட்குழி(காஞ்) | விஜயராகவன் | மங் 1115, 2674 |
| 20 திருவெஃகா (காஞ்) | சொன்ன வண்ணம் செய்த பெருமாள் | மழி-814, 815, 2417 மங்-1854, 2059, 2064, 2673, 2674, பொ 2158 பே 2307, 2343, 2345 2357 நம் 2503 |
| 21 திருவேளுக்கை (காஞ்) | முகுந்த நாயகன் | பே 2307, 2315, 2343 மங் 2674 |

## குறிப்பு

நம் —நம்மாழ்வார்; பூ—பூதத்தாழ்வார்; பே—பேயாழ்வார்; பொ —பொய்கையாழ்வார்; மங்—திருமங்கை ஆழ்வார்; மழி—திருமழிசை யாழ்வார்.

காஞ் —காஞ்சிபுரம்; சென் சென்னை; சைதா —சைதாப் பேட்டை; திருவ—திருவள்ளூர்; செங்—செங்கற்பட்டு; திருத்—திருத்தணி; ஸ்ரீ பெரும்—ஸ்ரீ பெரும்புதூர்; மதுரா—மதுராந்தகம்.

